உ

கடவுள் துணை.



# சதகத்திரட்டு.

[முதல் பாகம்]

இதில்

ஏழு சதகங்கள்

அடங்கியுள்ளன.



மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1916

# இதிலடங்கிய சதகங்கள்.



உ

சிவமயம்.

அம்பலவாணக் கவிராயரவர்கள்

பாடியருளிய

சதுரகிரி

# அறப்பளீசுர சதகம்.



இஃது

மகாவித்வான்

காஞ்சீபுரம்-இராமசாமி நாயுடு அவர்களால்

பார்வையிடப்பட்டு,



சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

[2-வது பதிப்பு]

1913

விலை அணா 2

சிவமயம்.

# அறப்பளீசுரசதகம்.

## காப்பு.

### வெண்பா.

உம்பர்கோ னெம்பெருமா னேங்கறப்ப ளீசுரன்மேற்
பைம்பொருள்சே ருஞ்சதகம் பாடவே—அம்புவியோர்
ஆக்குந் துதிக்கையுளா னன்புடையார்க் கின்பருளிக்
காக்குந் துதிக்கையுளான் காப்பு.

### உயர் பிறப்பு.

கடலுலகில் வாழுமுயி ரெழுபிறப் பினுமிக்க
காட்சிபெறு நரசென்ம மாய்க்
கருதப் பிறத்தலரி ததினுமுயர் சாதியிற்
கற்புவழி வருதலரிது
வடிவமுட னவயவங் குறைபாது பிழையாது
வருதலது தனினு மரிது
வந்தாலு மிதுபுண்ய மிதுபாவ மென்றெண்ணி
மாசில்வழி நிற்ற லரிது
நெடியதன வாஞ்த லரிததனி னிரக்கமுள
நெஞ்சினோ ஞுத லரிது
நேசமுட னுன்பதத் தன்பனாய் வருதலி்
நீணிலத் ததினு மரிதாம்
அடியவர்க் கமுதமே மோழைபூ பதிபெற்ற
வதிபனெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (க)

## மனையாட்டி சிறப்பு.

கணவனுக் கினியளாய் ம்ருதுபாஷி யாய்மிக்க
கமலநிக ரூப வதியாய்க்
காய்சின மிலாளுமாய் நோய்பழி யிலாததோர்
கால்வழியில் வந்த வளுமாய்
மணமிக்க நாணமட மச்சம் பயிர்ப்பென்ன
வருமினிய மார்க்க வதியாய்
மாமிமார்க்கிதஞ் செய்பவளு மாய்வாசல்
வருவிருந் தோம்பு பவளாய்
இனையின்மகிழ் நன்சொல்வழி நிற்பவளு மாய்வந்தி.
யென்பெய ரிலாத வளுமா
யிரதியென வேலீலை புரிபவளு மாய்ப்பிறர்த
மில்வழி செலாத வளுமாய்
அணியிழை யொருத்தியுண் டாயினவள் கற்புடைய
ளாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே, (உ)

## நன்மக்கட் பேறு.

தங்குலம் விளங்கிடப் பெரியோர்கள் செய்துவரு
தருமங்கள் செய்து வரலுந்
தன்மமிகு தானங்கள் செய்தலுங் கனயோக
சாதகனெனப் படுதலும
மங்குத லிலாததன் றந்தைதாய் குருமொழி
மறுதுவழி பாடு செயலும்
வழிவழி வருந்தமது தேவதா பத்திபுரி
மார்க்கமுந் தீர்க்கா யுளும்
இங்கித குணங்களும் வித்தையும் புத்தியு
மீகையுஞ் சன்மார்க் கமு

மிவையெலா முடையவன் புதல்வனு மவனையே
யீன்றவன் புண்யவானும்
அங்கச விரோதியே சோதியே நீதியே
ஈசனென தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே. (௫)

### சகோதர ரொருமை.

கூடப் பிறந்தவர்க் கெய்துதுயர் தமதுதுயர்
கொள்சுகந் தஞ்சுக மெனக்
கொண்டுதாந் தேடுபொரு ளவர்தேடு பொருளவர்கொள்
கோதிலபுகழ் தம்புக ழெனத்
தேடுற்ற வர்நிந்தை தாநிந்தை தந்தவந்
தீதிலவர் தவமா மெனச்
சீவனொன் றுடல்வே றிவர்க்கென்ன வைந்தலைச்
சீறரவ மணிவாய் தொறும்
கூடுற்ற விரையெடுத் தொருட னிறைத்திடுங்
கொள்கைபோற் பிரிவின்றியே
கூடிவாழ் பவர்தம்மை யேசகோ தரரெனக்
கூறுவது வே தருமமாம்
ஆடிச் சிவந்தசெந் தாமரைப் பாதனே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே. (௬)

### சற்குரு வியல்பு.

வேதாந்த சித்தாந்த வழிதெரிந் தாசார
விவரவிஞ் ஞான பூர்ண
வித்யா விவேகசற் குணசத்ப சம்பன்ன
தீரவை ராக்ய யோக்ய

சாதா ரணப்பிரிய யோகமார்க் காதிக்ப
சமாதி நிஷ்டானு பவராய்ச்
சட்சமய நிலைமையும் பரமந்த்ர பாதந்த்ர
தருமமும் பர சமயமும்
நீதியி னுணர்ந்துதத் துவமார்க்க ராய்ப்பிரம
நிலைகண்டு பாச மிலராய்
நித்திய னந்தசை தன்யரா யாசையறு
நெறியுளோர் சற் குருவராம்
ஆதார மாயுயிர்க் குயிராகி யெவையுமா
மமலனெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (ரு)

நன்மாணக்க ரியல்பு.

வைதாலு மோர்கொடுமை செய்தாலு மோசீறி
மாறு திகழ்ந்தாலு மோ
மனதுசற் றாகிலுங் கோணது நாணது
மாதா பிதா வெனக்குப்
பொய்யாம னீயென்று கனிவொடும் பணிவிடை
புரிந்துபொரு ளுட லாவியும்
புனிதவுன் றனதெனத் தத்தஞ்செய் திரவுபகல்
போற்றி மலரடியில் வீழ்ந்து
மெய்யாக வேபரவி யுபதேச மதுபெற
விரும்புவோர் சற் சீடராம்
வினைவே ரறும்படி யவர்க்கருள்செய் திடுவதே
மிக்க தேசிகரா குடன்
ஐயா புரம்பொடி படச்செய்த செம்மலே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (சா)

## பொருள் செயல்வகை.

புண்ணிய வசத்திறற் செல்வமது வரவேண்டும்
பொருளை ரட்சிக்க வேண்டும்
புத்தியுட னதுவொன்று நூறாக வேசெய்து
போதவும் வளர்க்க வேண்டும்
உண்ணவேண் டும்பின்பு நல்லவஸ்த் ராபரண
முடலிற் றரிக்க வேண்டு
முறறபெரி யோர்கவிஞர் தமரா துலர்க்குதவி
யோங்குபுகழ் தேட வேண்டும்
மண்ணில்வெகு தருமங்கள் செயவேண்டு முயர்மோக்ஷ
வழிதேட வேண்டு மன்றி
வறிதிற் புதைத்துவித் தியாத பேர்களை
மார்க்க மறியாக் குருடராம்
அண்ணலே கங்கா குலத்தலைவன் மோழைதரு
மழகனெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எ)

## தீவழி விலக்கு.

வஞ்சகர் தமைக்கூடி மருவொணு தன்பிலார்
வாசலிற் செல்லொ ணுது
வாதெவ ரிடத்திலும் புரியொணு தறிவிலா
மடையர்முன் னிற்கொ ணுது
கொஞ்சமே னுந்தீது செய்யொணு தொருவர்மேற்
குற்றஞ்சொ லொண்ணு தயற்
கோதையர்க ளோடுபரி காசஞ்செ யொண்ணுது
கோளுரைகள் பேசொ ணுது
நஞ்சுதரு மரமொடும் பழுகொணு திருள்வழி
நடந்துதனி யேகொ ணுது

நதிபெருக் காகினதி னீஞ்சல்செய் யொணாது
நல்வழி மறக்கொ ணாது
அநுசாம லரசாமுன் பேசொ ணாதினவையெலா
மறியுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அ)

## ஒன்றற்கொன் றழகுசெய்வன.

[illegible]ர்ப்பமனை தனக்கழகு குலமங்கை குலமங்கை
வாழ்வினுக் கழகு சிறுவர்
வளர்சிறுவ ருக்கழகு கல்விகல் விக்கழகு
மாநிலந் துதிசெய் குணமாம்
ஆழ்குண மதற்கழகு பேரறிவு பேரறிவு
தோன்றிடி லதற் கழகுதான்
நாயதவ மேன்மையுப காரம்விர தம்பொறுமை
சொல்லரிய பெரியோர் களைத்
தாழ்தல்பணி விடைபுரிதல் சீலமேந சங்கருணை
சாற்றுமிவை யாதென்பர் காண்
சௌரிமல ரோனமரர் முனிவர்முச் சுடரெலாஞ்
சரணமெமை ரட்சியெனவே
ஆழ்கட லுதித்தவரு விடமுண்ட கண்டனே
யன்னையெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௯)

## ஒன்றில்லாமையாற் பயன்படாதவை.

கோவிலில் லாதவூர் நாசியில் லாமுகங்
கொழுநனில் லாத மடவார்
குணமதில் லாவித்தை மணமதில் லாதமலர்
குஞ்சர மிலாத சேனை

காவலில் லாதபயிர் பாலரில் லாதமனை
கதிர்மதி யிலாத வானங்
கவிஞரில் லாதசபை சுதிலயை யிலாதபண்
காவல ரிலாத தேசம்
ஈவதில் லாததன நியமமில் லாதசெப
மிசைலவண மில்லாத வூ
ணிச்சையில் லாதபெண் போகநல மிவைதம்மி
னேதுபல னுண்டு கண்டாய்
ஆவியனை யாட்கிடந் தந்தவா கற்பதரு
வாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறபபளீ சுர தேவனே. (க0)

ஒன்றற்கொன்று தகாதசேர்க்கை.

பூததயை யில்லாத லோபிய ரிடத்திலே
பொருளை யருளிச் செய்தனை
புண்ணியஞ் செய்கின்ற சற்சன ரிடத்திலே
பொல்லாத மிடி வைத்தனை
நீதியகன் மூடர்க் கருந்ததி யெனத்தக்க
நெறி மாதரைத் தந்தனை
நிதானமுள வுத்தமர்க் கிங்கித மிலாதகொடு
நீலியைச் சேர் வித்தனை
சாதியி லுயர்ந்தபே ரீனர்பின் னேசென்று
தாழ்ந்து பரவச் செய்தனை
தமிழருமை யறியாத புல்லர்மேற் கவிவாணர்
தாம்பாட வேசெய்தனை
ஆதர விலாமலீப் படிசெய்த தென்சொலா
யமலவெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கக)

### குணக்கேட ரியல்பு.

மாறுத கலைகற்று நிலைபெற்ற சபையிலே
வாயிலா தவனொரு பதர்
வாள்பிடித் தெதிரிவரி னோடிப் பதுங்கிடு
மனக்கோழை தானொரு பதர்
ஏறு வழக்குரைத் தனைவருஞ் சீசியென்
றிகழநிற் பானொரு பத
ரில்லாள் புறஞ்செலச் சம்மதித் தவளோ
டிணங்கி வாழ்பவ னொருபதர்
வேறொருவர் மெச்சாது தன்னையே தான்மெச்சி
வீண்பேசு வானொரு பதர்
வேசையர்க ளாசைகொண் டுள்ளளவு மனையாளை
விட்டுவிடு வானொரு பதர்
ஆறாத துயரையு மிடிமையுந் தீர்த்தருள்செ
யமலசிவ தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கஉ)

### செயத்தக்கவை.

வாலிபந் தனில்வித்தை கற்கவேண் டுங்கற்று
வழியிலே நிற்க வேண்டும்
வனைகட றிரிந்துபொரு டேடவேண் டுந்தேடி
வளரறஞ் செய்ய வேண்டும்
சீலமுடை யோர்களைச் சேரவேண் டும்பிரிதல்
செய்யா திருக்க வேண்டுஞ்
செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண் டுங்கொண்டு
த்யாகங் கொடுக்க வேண்டும்
ஞாலமிசை பலதரும நாட்டவேண் டும்நாட்டி
நன்றாய் நடத்த வேண்டும்

நம்பனிணை யடிபூசை பண்ணவேண் டும்பண்ணி
ஞலுமிகு பத்தி வேண்டும்
ஆலமமர் கண்டனே பூதியணி முண்டனே
யனகவெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கரு)

மேன்மே லுயர்ச்சி.

தன்மட்டி லிரவாது சீவனஞ் செய்பவன்
சாமர்த்திய முள புருடனுஞ்
சந்ததம் பதின்மரைக் காபபாற்று வோன்மிக்க
தாணிபுகழ் தரு தேவனும்
பொன்மட்டி லாமலீந் தொருநூறு பேரைப்
புரப்பவன் பொருவி லிந்த்ரன்
புவிமீதி லாயிரம் பேர்தமைக் காப்பாற்று
புண்ய வானே பிரமனும்
நன்மைதரு பதினு யிரம்பேர் தமைக்காத்து
ரட்சிப்ப வன் செங்கண்மா
லுளுமிவன் மேலதிக மாகவெகு பேர்க்குதவு
நரனே மகாதேவனும்
அன்மட்டு வார்குழலி பாகனே யேகனே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கச)

செயற்கருஞ் செயல்.

நீர்மே னடக்கலா மெட்டியுந் தின்னலா
நெருப்பை நீர்போற் செய்யலாம்
நெடியபெரு வேங்கையைக் கட்டியே தழுவலா
நீளரவி னைப்பூண லாம்

யார்மீது மணலைச் சமைக்கலாஞ் சோறெனப்
பட்சமுடனே யுண்ணலாம்
பாணமொடு குண்டுவில கச்செய்ய லாமரப்
பாவை பேசப் பண்ணலாம்
ஏர்மேவு காடியுங் கடையுற்று வெண்ணெயு
மெடுக்கலாம் புத்தி சற்று
மில்லாத மூடர்தம் மனத்தைத் திருப்பவே
யெவருக்கு முடியாது காண்
ஆர்மேவு கொன்றைபுனை வேணியா சுரர்பரவு
மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (க௫)

உத்தமராவோர்.

செய்நன்றி மறவாத பேர்களு மொருவர்செய்
தீமையை மறந்த பேருந்
திரவியந் தரவரினு மொருவர்மனை யாட்டிமேற்
சித்தம் வையாத பேருங்
கைகண் டெடுத்தபொருள் கொண்டுபோய்ப் பொருளாளர்
கையிற் கொடுத்த பேருங்
காசினியி லொருவர்செய் தருமங் கெடாதபடி
காத்தருள்செய் கின்ற பேரும்
பொய்யொன்று நீதிகோடி வரினும் வழக்கழிவு
புகலாத நிலைகொள் பேரும்
புவிமீது தலைபோகு மென்னினுங் கனவிலும்
பொய்மை யுரையாத பேரும்
ஐயமிங் கிவரெலாஞ் சற்புருட ரென்றுலகி
லகமகிழ்வ ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (க௬)

இதுவுமது.

அடைக்கல மெனத்தேடி வருவோர் தமைக்காக்கு
மவனே மகா புருடனு
மஞ்சாம லெதுவரினு மெதுபோகி னுஞ்சித்த
மசைவிலான் மகா தீரனுந்
தொடுததொன் று சொன்னசொற் றப்பாது செய்கின்ற
தோன்றலே மகா ராஜனுந்
தூறிக் கலக்கின்ற பேர்வார்த்தை கேளாத
துரையே மகா மேருவாம
அடுக்கின்ற பேர்க்குவரு மிடர்தீர்த் திரட்சிக்கு
மவனே மகா த்யாகியா
மவரவர் தாரதர மறிந்துமரி யாதைசெயு
மவனே மகா வுசிதனும்
அடர்க்கின்ற முத்தலைச் சூலனே லோலனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கச)

ஒன்றிலொன் றில்லாமை.

காமிக்கு முறையில்லை வேசைக்கு நாணில்லை
கயவர்க்கு மேன்மை யில்லை
கன்னமிடு கள்வருக் கிருளில்லை விபசார
கன்னியர்க் காணை யில்லை
தாமெனு மயக்கறுத் தோங்குபெரி யோர்க்குவரு
ஜாதிகுல மென்ப தில்லை
தாக்ஷிணிய முடையபேர்க் கிகலில்லை யெங்குமொரு
சார்பிலார்க் கிடம தில்லை
பூமிக்கு வீயாத லோபர்க்கு வளமான
புகழென்ப தென்று மில்லை

புலையர்க்கு நிசமில்லை கைப்பொரு ளிலாததோர்
புருடருக் கொன்று மில்லை
யாமினி தனக்குநிகர் கந்தரத் திறைவனை
யன்புடைய வருமை மதவே
ளாறுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கஅ)

## யாக்கைநிலையாமை முதலியவை.

காயமொரு புற்புதம் வாழ்வுமலை சூழ்தருங்
காட்டி லாற்றின் பெருக்காங்
கருணைதரு புதல்வர்கிளை மனைமனைவி யிவையெலாங்
கானல் காட்டும் ப்ரவாகம்
மேயபுஜ பலவலுமை யிளமையழ கிவையெலாம்
வெயின்மஞ்ச ளுயிர் தானுமே
வெட்டவெளி தனில்வைத்த தீபமென வேகருதி
வீண்பொழுது போக்காமலே
நேயமுட னேதெளிந் தன்போடுன் பாதத்தி
னினைவுவைத் திரு போதிலு
நீர்கொண்டு மலர்கொண்டு பரிவுகொண் டர்ச்சிக்க
நிமலனே யருள் புரிகுவாய்
ஆயுமறி வாளர்பணி பாதனே போதனே
யண்ணலெம தருமை மதவே
ளானுதினமு மனதி னினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கக)

## திருமங்கை யிருப்பிடம்.

நற்பரி முகத்திலே மன்னவ ரிடத்திலே
நாகரிகர் மாமனையிலே
நளினமலர் தன்னிலே கூவிளந் தருவிலே
நறைகொண்ட பைந் துளவிலே

கற்புடையர் வடிவிலே கடலிலே கொடியிலே
கல்யாண வாயி றனிலே
கடிநக ரிடத்திலே நற்செந்நெல் விளைவிலே
கதிர்பெறு விளக் கதனிலே
பொற்புடைய சங்கிலே மிக்கோர்கள் வாக்கிலே
பொய்யாத பேர் பாலிலே
பூந்தடந் தன்னிலே பாற்குடத் திடையிலே
போதகத் தின் சிரசிலே
அற்பெருங் கோதைமலர் மங்கைவா ழிடமென்ப
ரண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (உ0)

மூதேவி யிருப்பிடம்.

மிதமின்றி யன்னம் புசிப்போ ரிடத்திலு
மிகுபாஷை யோரிடத்தும்
மெய்யொன் றிலாமலே பொய்பேசி யேதிரியு
மிக்க பாதக ரிடத்தும்
கதியொன்று மிலர்போல மலினங் கொளும்பழைய
கந்தை யணிவோ ரிடத்துங்
கடிநா யெனச்சீறி யெவரையுஞ் சேர்க்காத
கன்னிவாழ் மனை யகத்தும்
ததிசேர் கடத்திலுங் கர்த்தபத் திடையிலுஞ்
சார்ந்த வாட்டின் றிரளிலுஞ்
சாம்பிணமு கத்திலு மிவையெலாங் கவலைபுரி
தௌவைவா ழிட மென்பர்காண்
அதிரூப மலைமங்கை நேசனே மோழைதரு
மழகனெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (உக)

## குணைகுண மிரண்டினும் பயன்படாமை.

குணமற்ற பேய்முருங் கைத்தழை தழைத்தென்ன
குட்டநோய் கொண்டு மென்ன
குரைக்கின்ற நாய்மடி சுரந்தென்ன சுரவாது
கொஞ்சமாய்ப் போகி லென்ன
மணமற்ற செம்முருக் கதுபூத் தலர்ந்தென்ன
மலராது போகி லென்ன
மதுரமில் லாவுவர்க் கடனீர் கறுத்தென்ன
மாவெண்மை யாகி லென்ன
உணவற்ற பேய்ச்சுரை படர்ந்தென்ன படரா
துலர்ந்துதான் போகிலென்ன
வுதவாத பேர்க்குவெகு வாழ்வுவந் தாலென்ன
வோங்கு மிடிவரி லென்னகாண்
அணியுற்ற பைங்கொன்றை மாலிகா பரணனை
யாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (உஉ)

## குறைவுற்றுங் குணங்கெடாமை.

தறிபட்ட சந்தனக் கட்டைபழு தாயினுஞ்
சார்மணம் பழு தாகுமோ
தக்கபால் சுவறிடக் காய்ச்சினு மதுகொண்டு
சார மதுரங் குறையுமோ
நிறைபட்ட கதிர்மணி யழுக்கடைந் தாலுமதி
னீள்குண மழுங்கி விடுமோ
நெருப்பிடை யுருக்கினு மடிக்கினுந் தங்கத்தி
னிறையு மாறறுக் குறையுமோ
கறைபட்ட பைம்புயன் மறைத்தாலு மதுகொண்டு
கதிர்மதி கனம் போகுமோ

கற்றபெரி யோர்மகிமை யற்பரறி கிலரேனுங்
  காசினி தனிற் போகுமோ
அறிவுற்ற பேரைவிட் டகலாத மூர்த்தியே
  யையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
  ரறப்பளீசுர தேவனே. (உ௫)

இதற் குதவிசெய்வ திதுவெனல்.

வானவர் பிதிர்க்கண்முச் சுடர்மூவர் சோள்கட்கும்
  வாழ்வுதரு முதவி புவனம்
வளமிக்க புவனந் தனக்குமேன் மேலுதவி
  வாழ்வுபெற் றிடு மன்னராம
தேனமர் நறுந்தொடையல் புனைமன்ன வர்க்குதவி
  சேர்ந்தகுடி படை வர்கமாஞ்
சேர்குடி படைக்குதவி விளைபயிர் பயிர்க்குதவி
  சீர்பெற வழங்கு மழையாம்
மேனிமிர் மழைக்குதவி மடமாதர் கற்பொன்று
  வேந்தர்தந் நீதி யொன்று
வேதிய ரொழுக்கமொன் றிம்மூன்று மேயென்று
  மிக்கபெரி யோருரை செய்வார்
ஆனமர் நெடுங்கொடி யுயர்த்தவெம மிறைவனே
  யதிபனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
  ரறப்பளீசுர தேவனே. (உ௬)

இதனைக்கண்டு மகிழ்வ திதுவெனல்.

தந்தைதாய் மலர்முகங் கண்டுநின் றுவிப்ப
  தவர்தந்த சந்ததிய தாஞ்
சந்த்ரோ தயங்கண்டு பூரிப்ப துபர்வாவி
  தங்குபைங் குமுத மலராம்

புந்திமகிழ் வாயிரவி வருதல்கண் டகமகிழ்வ
பொங்கு தாமரை மலர்களாம்
போதவும் புயல்கண்டு கண்களித் தேநடம்
புரிவது மயூர வினமாம்
சிந்தைமகிழ் வாயுதவு தாதா விணைக்கண்டு
சீர்பெறுவ திரவலர் குழாந்
திகழ்கீர்த்தி மன்னரைக் கண்டுகளி கூர்வதிச்
செகமேலா மென்பர் கண்டாய்
அந்திபம் வானனைய செஞ்சடா டவியனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (உரு)

அதுவதுவாகாமை.

உள்ளன் பிலாதபேர் தித்திக்க வேபேசி
யுறவாடு முறவு முறவோ
வுபசரித் தன்புடன் பரிமா றிடாதசோ
றுண்டவர்க் கன்ன மாமோ
தள்ளா திருந்துகொண் டொருவர்போய்ப் பார்த்துவரு
தக்கபயிர் பயிரா குமோ
தளகர்த்த னொருவனில் லாமன்முன் சென்றிடுந்
தானையுந் தானை யாமோ
விள்ளாத போகமில் லாதபெண் மேல்வரு
விருப்பமும் விருப்ப மாமோ
வெகுகடன் பட்டபேர் செய்கின்ற சீவனமு
மிக்கசீ வனமாகு மோ
அள்ளா திருங்கருணை யாளனே தேவர்தொழு
மாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (உசா)

## நற்குணங்களுக் கிடமாகாதவர்.

வெறிகொண்ட மற்கடம் பேய்கொண்டு கள்ளுண்டு
வெங்காஞ் சொறிப் புதவிலே
வீழ்ந்துதேள் கொட்டிடச் சன்மார்க்க மெள்ளளவு
மேவுமோ மேவாது போல்
குறைகின்ற புத்தியா யதிலற்ப சாதியாய்க்
கூடவே யிளமை யுண்டாய்க்
கொஞ்சமா மதிகார முங்கிடைத் தான்மிக்க
குவலயந் தனி லவர்க்கு
நிறைகின்ற பத்தியுஞ் சீலமும் மேன்மையு
நிதானமும் பெரியோர்கண் மே
னேசமு மீகையு மிவையெலாங் கனவிலும்
நினைவிலும் வராது கண்டாய்
அறைகின்ற சுருதியின் பொருளான வள்ளலே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௨எ)

## இதனை லின்னமுறையனமெனல்.

தன்னுன் முடிக்கவொண் ணுதகா ரியம்வந்து
தான்முடிப் போன் றமையனுந்
தன்றலைக் கிடர்வந்த போதுமீட் டுதவுவோன்
றாய்தந்தை யென்ன லாகும்
ஒன்னார் செயுங்கொடுமை யான்மெலிவு வந்தபோ
துதவுவோ னிட்ட தெய்வம்
யத்திபுத் திகள்சொல்லி மேல்வருங் காரிய
முரைப்பவன் குரு வென்னலாம்
எந்நாளும் வருநன்மை தீமைதன தென்னவே
யெண்ணிவரு வோன் பந்துவா

மிருதய மறிந்துதன் சொற்படி நடக்குமவ
னைவனெனி னு மவனே சுதன
அங்கார மும்பணியு மெங்காளு மேபுனையு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (உஅ)

அவரவரிடத்து நடக்குமுறை.

மாதா பிதாவினுக் குள்ளன் புடன்கனிவு
மாறாத நல் லொழுக்கம்
மருவுகுரு வானவர்க் கினியவுப சாரமுள
வார்த்தை வழிபா டடக்கம்
காதார் கருங்கண்மனை யாடனக் கோசயன
காலத்தி னய பாஷணங்
கற்றபெரி யோர்முதியர் வருமாது லர்க்கெலாங்
கருணைசே ரருள் விதானம்
நீதிபெறு மன்னவ ரிடத்ததிக பயவிநய
நெறியுடைய பேர்க் கிங்கிதம்
நேயமுள தமர்தமக் ககமகிழ் வுடன்பரிவு
நேரல ரிடத்தில் வயிரம்
ஆதிமனு நூல்சொ லும் வழக்கமிது வாகுமெம
தையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (உகூ)

குணத்தைவிட்டுக் குற்றத்தைக் கவர்தல்.

துட்டவிக டக்கவியை யாருமே மெச்சுவார்
சொல்லுநற் கவியை மெச்சார்
துர்ச்சனர்க் ககமகிழ்ந் துபசரிப் பார்வருந்
தூயரைத் தள்ளி விடுவார்

இட்டமுள தெய்வந் தனைக்கரு திடார்கறுப்
பென்னிலோ போய்ப் பணிகுவா
ரீன்றதாய் தந்தையைச் சற்றுமதி யார்வேசை
யென்னிலோ காலில் வீழ்வார்
நட்டலா பங்களுக் குள்ளான பந்துவரி
னன்றாக வே பேசிடார்
நாளுமொப் பாரியாய் வந்தபுத் துறவுக்கு
நன்மை பலவே செய்குவார்
அட்டதிசை சூழ்புவியி லோங்குகலி மகிமைகா
ணத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௦)

குணங்காண் குறி.

கற்றோர்க ளென்பதைச் சீலமுட னேசொலுங்
கனவாக்கி னாற் காணலாங்
கற்புளா ரென்பதைப் பார்க்கின்ற பார்வையொடு
கானடையி லுங் காணலாம்
அற்றோர்க ளென்பதனை யொன்றிலும் வாரா
வடக்கத்தி னா லறியலா
மறமுளோ ரென்பதைப் பூததயை யென்னுநிலை
யதுகண்டு தா னறியலாம்
வித்தோங்கு பயிரைக் கிளைத்துவரு அடியினால்
விளையு மென்றே யறியலாம்
வீரமுடை யோரென்ப தோங்கிவரு தைரிய
விசேடத்தி னா லறியலாம்
அத்தா குணத்தினாற் குலநலந் தெரியலா
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௧)

## கூடிற் பயன்படல்.

செத்தைபல கூடியொரு கயிறுயி னதுகொண்டு
திண்கரியை யுங் கட்டலாந்
திகழ்ந்தபல துளிகூடி யாறுயின் வாவியொடு
திரளேரி நிறை விக்கலாம்
ஒத்தநுண் பஞ்சுபல சேர்ந்துநூ லாயிடி
னுடுத்திடுங் கலை யாக்கலா
மோங்கிவரு கோலுடன் சீலையுங் கூடினு
லுயர்கவிகை யாக் கொள்ளலாம்
மற்றுமுயர் தண்டுலத் தோடுதவி டுமிகூடின்
மல்குமுளை விளை விக்கலாம்
மனமொத்த நேயமொடு கூடியொரு வர்க்கொருவர்
வாழின்வெகு வெற்றி பெறலாம்
அற்றகனி யைப்பொருத் தரிபிரமர் தேடரிய
வமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினிணை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௨)

## அதற்கு வேற்றியிடம்.

கலைவலா ருக்கதிக சயமதூர வாக்கிலே
காமுகர்க் கதிக சயமோ
கைப்பொருளி லேவரு மருத்துவர்க் கோசயங்
கைவிசே டர் தன்னிலே
நலமுடைய வேசையர்க் சழகிலே யரசர்க்கு
நாளும் ரண சூரத்திலே
நற்றவர்க் கதிகசய முலகுபுகழ் பொறையிலே
ஞான வேதியர் தமக்கோ
குலமகிமை தன்னிலே வைசியர்க் கோசயங்
கூறிய துலாக் கோலிலே

குற்றமில் லாதவே ளாளருக் கோசயங்
குறையாத கொழு முனையிலே
அலைவில்குதி ரைக்குநடை வேகத்தி லதிகசய
மாமென்ப ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௩)

ஒன்றனில்லாமையாற் பாழ்படல்.

தாம்பூல தாரண மிலாததே வருபூர்ண
சந்த்ரனிகர் முக சூனியஞ்
சற்சன ரிலாததே வெகுசனஞ் சேர்ந்துவாழ்
தரும்பெரிய நகர் சூனியம்
மேம்பா டிலாதமன் னவர்கள்வந் தாள்வதே
மிக்க தேசச் சூனியம்
மிக்கசற் புத்திர னிலாததே நலமான
வீறுசோ காக சூனியம்
சோம்பாத தலைவரில் லாததே வளமுடன்
சொல்லுயர் சபா சூனியந்
தொல்லுலகி லெவர்க்கு மாகிதிய மில்லதே
சுத்த சூனிய மென்பர்காண்
ஆம்பல்வத னத்தனைக் குக்கையின் றருள்செய்த
வத்தனை யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௪)

மூடர் தாரதம்மியம்..

பெண்புத்தி கேட்கின்ற மூடருந் தந்தைதாய்
பிழைபுறஞ் சொலு மூடரும்
பெரியோர்கள் சபையிலே முகடேறி வந்தது
பிதற்றிடும் பெரு மூடரும்

பண்புற்ற சுற்றஞ் சிரிக்கவே யிழிவான
பழிதொழில்செய் திடு மூடரும்
பற்றற்ற பேர்க்குமுன் பிணைநின்று பின்புபோய்ப்
பாதவித் திடு மூடரும்
கண்கெட்ட மாடென்ன வோடியிர வலர்மீது
காய்ந்து வீழ்ந் திடு மூடருங்
கற்றறி விலாதமுழு மூடருக் கிவரெலாங்
கான்மூட ரரைமூடர் காண்
அண்கற்ற நாவலர்க் காகவே தூதுபோ
மையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௫)

இதற்கிது வேண்டுமெனல்.

தனக்குவெகு புத்தியுண் டாகினும் வேறொருவர்
தம்புத்தி கேட்க வேண்டுந்
தானதிக சூரனே யாகினுங் கூடவே
தளசேக ரங்கள் வேண்டும்
கனக்கின்ற வித்துவா னாகிலுந் தன்னினுங்
கற்றோரை நத்த வேண்டுங்
காசினியை யொருகுடையி லாண்டாலும் வாசலிற்
கருத்துள்ள மந்த்ரி வேண்டும்
தொனிக்கின்ற சங்கீத சாமார்த்திய னாகிலுஞ்
சுதிகூட்ட வொருவன் வேண்டுஞ்
சுடர்விளக் காயினு நன்றாய் விளக்கிடத்
தூண்டுகோ லொன்று வேண்டும்
அனற்கண்ண னேபடிக சங்கநிக ரண்ணனே
யையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௬)

வறுமையின் கொடுமை.

மேலான சாதியி லுதித்தாலு மதிலென்ன
வெகுவித்தை கற்று மென்ன
மிக்கவதி ரூபமொடு சற்குண மிருந்தென்ன
மிகுமானி யாகி லென்ன
பாலான மொழியுடைய னாயென்ன வாசார
பரனா யிருந்து மென்ன
பார்மீது வீரமொடு ஞானவா னாயென்ன
பாக்கிய மிலாத போது
வாலாய மாப்பெற்ற தாயுஞ் சலித்திடுவள்
வந்த சுற்றமு மிகழுமே
மரியாதை யில்லாம லனைவரும் பேசுவார்
மனைவியுந் தூறு சொல்வாள்
ஆலால முண்டகனி வாயனே நேயனே
யனகனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௭)

ஈனத்துவம்.

இரப்பவன் புவிமீதி லீனனவ னுக்கில்லை
யென்னுமவ னவனி லீன
னீகின்ற பேர்தம்மை யீயாம லேகலைத்
திடுமூட னவனி லீனன்
உரைக்கின்ற பேச்சிலே பலனுண் டெனக்காட்டி
யுதவிடா னவனி லீன
னுசவவே வாக்குரைத் தில்லையென் றேசொல்லு
முலுத்தனே யவனி லீனன்
பரக்கின்ற யாசகர்க் காசைவார்த் தைகள் சொலிப்
பலகா லலைந்து திரியப்

பண்ணியே யில்லையென் றிடுகொடிய பாவியே
பாரிலெல் லார்க்கு மீனன்
அரக்கிதழ்க் குமுதவா யுமைநேச னேயெளிய
ரமுதனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩அ)

மறைப்பனவும் வெளிப்படுத்துவனவும்.

சென்மித்த வருடமு முண்டான வத்தமுந்
தீதில் கிரகச் சாரமுந்
தின்றுவரு மௌடதமு மேலான தேசிகன்
செப்பிய மகா மந்த்ரமும்
புன்மையவ மானமுந் தானமும் பைம்பொனணி
புனையு மடவார் கலவியும்
புகழ்மேவு மானமு மிவையொன்ப துந்தமது
புந்திக்கு ளே வைப்பதே
தன்மமென் றுரைசெய்வ ரொன்னார் கருத்தையுந்
தன்பிணியை யும் பசியையுந்
தான்செய்த பாவமு மிவையெலாம் வேறொருவர்
தஞ்செவியில் வைப்ப தியல்பாம்
அன்மருவு கண்டனே மூன்றுலகு மீன்றவுமை
யன்பனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௯)

தேவர்கள் காலவளவை.

சதுரயுக மோரிரண் டாயிரம் பிற்படிற்
சதுமுகற் கொரு தினமதாஞ்
சாற்றுமித் தினமொன்றி லேயிந்த்ர பட்டங்க
டாமு மீரேழ் சென்றிடும்

மதிமலியு மித்தொகையி னயனுயு ளாறுபோய்
 மாண்டபோ தொரு கற்பமாம்
மாறிவரு கற்பமொரு கோடிசென் றுநெடிய
 மாறனக் கோர் தினமதாம்
அதிபரவு மித்தொகையி லொருகோடி நெடியமா
 லேறுன்றியே போய் மறைந்தா
லேறுகையோர் பாகனை நீநகைத் தணிமுடி
 துளக்கிடுங் கால மென்பார்
அதிகமுள பலதேவர் தேவனே தேவர்கட்
 கரசனே ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுர தேவனே. (சO)

தூய்மையிடமும் தூய்மை செய்வனவும்.

வாம்பரி தனக்கதிக புனிதமுக மதனிலே
 மறையவர்க் குயர் புனிதமோ
மலரடியி லேபுனித மொளிகொள்கண் ணடிக்கு
 மாசின்முற் புற மதனிலே
மேம்படும் பசுவினுக் குப்பிற் புறதிதிலே
 மிக்கமட மாத ருக்கோ
மேனியெல் லாம்புனித மாகுமா கொளசமொடு
 மேவு வனிதையர் தமக்கும்
தாம்பிர மதற்குமிகு வெள்ளிமண் கலமயந்
 தங்க மீயந் தமக்குந்
தரும்புனிதம் வருபெருக் கொடுபுளி சுணஞ்சாம்பல்
 சாருமண் டாது சாணம்
ஆம்புனித மிவையென்பர் மாமேரு வில்லியே
 யனகனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுர தேவனே, (சக)

அடங்காதவற்றை யடக்குமுபாயம்.

கொடியவொலி யெருதையிரு மூக்கிலுங் கயிறொன்று
கோத்துவச வித்தி கொள்வார்
குவலயந் தனின்மதக் களிறதனை யங்குசங்
கொண்டுவச வித்தி கொள்வார்
படியில்விட வரவைமந் திரதந் திரத்தினாற்
பற்றிவச வித்தி கொள்வார்
பாய்பரியை நெடியகடி வாளமது கொடுநடை
பழக்கிவச வித்தி கொள்வார்
விடமுடைய துட்டரைச் சோர்பந்து கைக்கொண்டு
வீசிவச வித்தி கொள்வார்
மிக்கபெரி யோர்களுங் கோபத்தை யறிவால்
விலக்கிவச வித்தி கொள்வார்
அடியவர் துதிக்கவரு செந்தா மரைப்பதத்
தையனை யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (சஉ)

ஒளியினுயர்வு.

செழுமணிக் கொளியதன் மட்டிலே யதினுமோ
செய்யகச் சோத மெனவே
செப்பிடுங் கிருமிக்கு மிச்சமொளி யதனினுந்
தீபத்தி னொளி யதிகமாம்
பழுதிலாத் தீவர்த்தி தீபத்தி னதிகமாம்
பகல்வர்த்தி யதி லதிகமாம்
பாரமத் தாப்பினொளி யதிலதிக மதினுமோ
பனிமதிக் கொளி யதிகமாம்
விழைவுதரு பரிதிக்கு மனுநீதி மன்னர்க்கும்
வீரவித ரணிக ருக்கும்

மிக்கவொளி திசைதொறும் போய்விளங் கிடுமென்ன
விரகுளோ ருரை செய்குவார்
அழல்விழிகொ டெரிசெய்து மதனவே டனைவென்ற
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௪௩)

குணங் குற்றமாதல்.

வான்மதியை நோக்கிடிற் சோரகா முகருக்கு
மாறாத வல் விடமதாம்
மகிழ்நன் றனைக்காணி விதமிலா விபசரிய
மாதருக் கோ விடமதாம்
மேன்மைதரு நற்சுவை பதார்த்தமுஞ் சுரரோக
மிக்கபேர்க் கதிக விடமாம்
வித்தியா திபர்தமைக் கண்டபோ ததிலோப
வீணர்க் கெலாம் விடமதாம்
ஈனமிகு புன்கவிவ லோர்க்கதிக சபைகாணி
லேலாத கொடிய விடமா
மேற்றமில் லாதபடு பாவிகட் கறமென்னி
லெந்நாளு மதிக விடமாம்
ஆனதவ யோகியர்க ளிதயதா மரையுறையு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௪௪)

உயர்வன்றித் தாழ்வும் சிறக்குமிடம்.

வெகுமான மாகினு மவமான மாகினும்
மேன்மையோர் செய்யி லழகாம்
விரகமே யாகினுஞ் சரசமே யாகினும்
விழைமங்கை செய்யி லழகாம்

தருதாழ்வு வாழ்வுவெகு தருமங்க ளைச்செய்து
சாரிலோ பேரழக தாஞ்
சரீரத்தி லோரூன மானமெது வாகிலுஞ்
சமர்செய்து வரி லழகதாம்
நகமேவு மதகரியி லேறினுந் தவறினு
நாளுமது வோரழக தாம்
நாய்மீதி லேறினும் வீழினுங் கண்டபேர்
நகைசெய்தழ கன் றென்பர்காண்
அகமாயு நற்றவர்க் கருள்புரியு மையனே
யாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (சரு)

நல்வினை செய்தோர்.

சரணெனக் காத்தவன் மெய்யினால் வென்றவன்
றுன மிளையா துதவினோன்
றந்தைசொன் மறுதவன் முன்னவற் கானவன்
றுய்பழி துடைத்த நெடியோன்
வருபிதிர்க் குதவினோன் றெய்வமே துணையென்று
மைந்தன் மனைவியை வதைத்தோன்
மாறுன தந்தையைத் தமையனைப் பிழைகண்டு
மாய்த்துலகின் மகிமை பெற்றோன்
கருதரிய சிபியரிச் சந்திரன் மாபலி
கனிச்சியோன் சுமுத்திரை சுதன்
கருடன் பகீரத னுடன்சிறுத் தொண்டனொடு
கானவன் பிரக லாதன்
அரியவல் விபீஷண னெனுமகா புருடரா
மத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (சகூ)

### தீவினை செய்தோர்.

வாயிகழ்வு பேசிமிகு வாழ்விழந் தோன்சிவனை
வைதுதன் றலை போயினோன்
மற்றொருவர் தாரத்தி லிச்சைவைத் துடலெலா
மாராத வடுவாயி னோன்
தாயத்தி னோர்க்குள்ள பங்கைக் கொடாமலே
சம்பத் திழந்து மாய்ந்தோன்
றக்கபெரி யோர்தமை வணங்கா மதத்தினாற்
றந்தி வடிவா யலைந்தோன்
மாயனைச் சபையதனி னிந்தனைசெய் தொளிகொணவ
மணிமுடி துணிந்து மாய்ந்தோன்
வருநகுட னொடுதக்க னயிராவ தன்குருடன்
மகன்வழுதி சிசு பாலனும்
ஆயுமறி வாளரொடு தேவர்பணி தாளனே
யவனிபுக ழருமைமதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (சஎ)

### நன்னகர்.

வாவிபல கூபமுட னறுகு சேர்வதாய்
மலைகாத வழியி லுளதாய்
வாழைகமு கொடுதெங்கு பயிராவ தாய்ச்செந்நெல்
வயல்கள் வாய்க்கால்க ளுளதாய்
காவிகம லங்குவளை சேரேரி யுள்ளதாய்க்
கனவர்த்த கர்கண் மறைவலோர்
காணரிய பலகுடிக ணிறைவுள்ள தாய்நல்ல
காவல னிருக்கை யுளதாய்த்
தேவரா லயமாடல் பாடலணி மாளிகை
சிறக்கவுளதாய்ச் சற்சனர்

சேருமிட மாகுமோ ரூர்கிடைத் ததிலதிக
சீவனமு மே கிடைத்தால்
ஆவலோ டிருந்திடுவ தேசொர்க்க வாசமென்
றறையலா மருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (சஅ)

தீ ந க ர்.

ஈனசா திகள்குடி யிருப்பதாய் முள்வேலி
யில்லில்லி னுக்கு முளதா
யிணைமூலை திறந்துதந் தலைவிரித் திடுமாத
ரெங்கு நடமாட்ட முளதாய்க்
கானமொரு பக்கமாய் மலையோர மாய்முறைக்
காய்ச்ச றப்பாத விடமாய்க்
கள்ளர்பய மாய்நெடிய கயிறிட் டிறைக்கின்ற
கற்கேணி நீருண்ப தாய்
மானமில் லாக்கொடிய துர்ச்சனர் தமக்கேற்ற
மணியமொன் றுண்டான தாய்
மாநிலத் தோர்தல மிருந்ததனில் வெகுவாழ்வு
வாழ்வதிலு மருநரகிலே
ஆனநெடு நாள்கிடந் தமிழ்தலே சுகமாகு
மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (சகூ)

மூழுக்குநாள்.

வருமாதி வாரந் தலைக்கெண்ணெ யாகாது
வடிவமிகு மழகு போகும்
வளர்திங்க ளுக்கதிக பொருள்சேரு மங்கார
வாரந் தனக் கிடர்வரும்

திருமேவு புதனுக்கு மிகுபுத்தி வந்திடுஞ்
செம்பொனுக் குப ரறிவுபோந்
தேடிய பொருட்சேத மாம்வெள்ளி சனியெண்ணெய்ச்
செல்வமுண் டாயு ளுண்டாம்
பரிகார முளதாதி வாரந் தனக்கலரி
பௌமனுக் கான செழுமண்
பச்சறுகு பொன்னவற் காமெருத் தூளொளிப்
பார்க்கவற் காகு மெனவே
அரிதா வறிநதபே ரெண்ணெய்சேர்த் தேமுழுக்
காடுவா ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௫0)

மருத்துவன்.

தாதுப் பரீக்ஷைவரு காலதே சத்தொடு
சரீர லட்சண மறிந்து
தன்வந்த்ரி கும்பமுனி தேரர்கொங் கணர்சித்தர்
தமது வாகட மறிந்து
பேதப் பெருங்குளிகை சுத்திவகை மாத்திரைப்
பிரயோக மோடு பஸ்மம்
பிழையாது மண்டூர செந்தூர லட்சணம்
பேர்பெறுங் குண வாகடம்
சோதித்து மூலிகா விதங்கண் டுங்கண்டு
தூய தைலம் லேகியஞ்
சொல்பக்கு வங்கண்டு வருரோக நிண்ணயந்
தோற்றியே யமிர்த கரமாய்
ஆதிப் பெருங்கேள்வி யுடையனு யுர்வேத
னாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௫௧)

## உண்மை யுணர்குறி.

சோதிடம் பொய்யாது மெய்யென்ப தறிவரிய
சூழ் கிரகணஞ் சாட்சியாஞ்
சொற்பெரிய வாகடம் நிசமென்கை பேதிதரு
தூய மாத்திரை சாட்சியாம்
ஆதியிற் செய்ததவ முண்டில்லை யென்பதற்
காளடிமை யேசாட்சி யா
மரிதேவ தேவனென் பதையறிய முதனூ
லரிச்சுவடி யேசாட்சியாம்
நாதனை மாதேவ னென்பதற் கோருத்ர
நமக சமகஞ் சாட்சியாம்
நாயேனை ரட்சிப்ப துன்பார மரியய
னுநமர்ச் சனைசெய் சரணத்
தாதிநா யகமிக்க வேதநா யகனை
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௨)

## பிறவிக்குண மாறாமை.

கலங்காத சித்தமுஞ் செல்வமுஞ் ஞானமுங்
கல்வியுங் கருணை விளைவுங்
கருதரிய வடிவமும் போகமுந் த்யாகமுங்
கனரூப முள மங்கையும்
அலங்காத வீரமும் பொறுமையுந் தந்திரமு
மாண்மையு மமுத மொழியு
மானவிச் செயலெலாஞ் சனனவா சனையினு
லாகிவரு மன்றி நிலமேல்
நலஞ்சேரு மொருவரைப் பார்த்தது பெறக்கருதி
னண்ணுமோ ரஸ்தாளி தன்

நற்சுவை தனக்குவர வேம்புதவ மேநெடிது
நாள் செயினும் வாராதுகாண்
அலங்கார மாகமலர் கொன்றைமா லிகைசூடு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (ருங)

ஊழ் வலி.

கடலள வுரைத்திடுவ ரரிபிரம ருருவமுங்
காணும் படிக் குரைசெய்வார்
காசினியி னளவுபிர மாணமது சொல்லுவார்
காயத்தி னில்லமை யறிவார்
விடலரிய சீவநிலை காட்டுவார் மூச்சையும்
விடாமற் றடுத் தடக்கி
மேன்மேலும் யோகசா தனைவிளைப் பாரெட்டி
விண்மீதி னுந் தாவுவார்
தொடலரிய பிரமநிலை காட்டுவா ரெண்வகைத்
தொகையான சித்தி யறிவார்
சூழ்வினை வரும்பொழுது சிக்கியுழல் வாரது
துடைக்கவொரு நான் முகற்கும்
அடைவல வெனத்தெரிந் தளவில்பல நூல்சொல்லு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (ருச)

ஒப்புயர் வில்லாமை.

வேதியர்க் கதிகமாஞ் சாதியுங் கனகமக
மேருவுக் கதிக மலையும்
வெண்டிரை கொழித்துவரு கங்கா நதிக்கதிக
மேதினியி லோடு நதியும்

சோதிதரு மாதவர்க் கதிகமாங் காந்தியுஞ்
சூழ்கனற் கதிக சுசியுந்
தூயதாய் தந்தைக்கு மேலான தெய்வமுஞ்
சுருதிக் குயர்ந்த கலையும்
ஆதிவட மொழிதனக் கதிகமா மொழியுநக
ரன்ன தானந் தனினுமோ
ரதிகதா னமுமில்லை யென்றுபல நூலெலா
மாராய்ந்த பேருரை செய்வார்
ஆதவன் பிரமன்விண் ணவர்முனிவர் பரவவரு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுர தேவனே. (௫௫)

வீண்செயல்.

வேட்டகஞ் சேர்வோரும் வீணரே வீணுரை
விரும்புவோ ரவரின் வீணர்
விருந்துகண் டில்லா டனக்கஞ்சி யோடிமறை
விரகிலோ ரவரின் வீணர்
நாட்டந் தருங்கல்வி யில்லோரும் வீணரே
நாடியவர் மேற்கவி சொல்வார்
நானிலந் தனில்வீண ரவரினும் வீணரே
நாரைச் சுமக்கு மெளியோர்
தேட்டறிவி லாதபெரு வீணரே யவரினுந்
தேரொரு வரத்து மின்றிச்
செலவுசெய் வோரதிக வீணராம் வீணுய்த்
திரியுமெளி யேனை யாட்கொண்
டாட்டம் செயும்பதாம புயமுடியின் மேல்வைத்த
வமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுர தேவனே. (௫௬)

## உதவியின்றிக் கெடுவன.

ஆப்பொருவ ரில்லாத குமரகுடி வாழ்க்கையு
மூதார ணிலாத நகரும்
மொழியும்வெகு நாயகஞ் சேரிடமும் வருமெதுகை
மோனை யில்லாத கவியும்
காப்பமை விலாத்தோர் நந்தவன மும்நல்ல
கரையிலா நிறை யேரியுங்
கசடறக் கற்காத வித்தையு முபதேசக்
காரண மிலாத தெளிவும்
கோபுர விசேஷமுடை யோருக்கு புகழாத
கோதைபர்செய் கூத்தாட்ட முங்
குளிர்புன னிறைந்துவரு மாற்றோர மதினின்று
கோடுயர்ந் தோங்கு தருவும்
ஆப்பதில லாததே ரிவையெலா மொன்றாகு
மையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௭)

## இவையே போதுமெனல்.

பொய்யாத வாய்மையுஞ் சீலமுஞ் சார்ந்துளோர்
பூவலஞ் செயவேண்டு மோ
பொல்லாத கொலைகள விலாதநன் னெறியுளோர்
புகழறஞ் செயவேண்டு மோ
நையாத கர்வத்தை லோபத்தை விட்டபேர்
நல்லறஞ் செயவேண்டு மோ
நன்மனோ சுத்தியுண் டானபேர் மேலுமொரு
நதி படிந்திட வேண்டுமோ
மெய்பாகி னடியரைப் பரவுவோ ருன்பதம்
விரும்பி வழிபட வேண்டுமோ

வேதியர் தமைப்பூசை பண்ணுவோர் வானவரை
வேண்டி யர்ச்சனை செய்வரோ
ஐயா றுடன்கமலை சோணு சலந்தில்லை
யதிபனே யருமை மதவே
ளானுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (ருஅ)

அரியராவோர்.

பதின்மரி லொருத்தர்சபை மெச்சிடப் பேசுவோர்
பாடுவோர் நூற்றி லொருவர்
பார்மீதி லாயிரத் தொருவர்விதி தப்பாது
பாடிப்ர சங்க மிடுவோர்
இதனருமை யறிகுவோர் பதினு யிரத்தொருவ
ரிதையறிந் திதய மகிழ்வா
ரீகின்ற பேர்புவியி லேயருமை யாகவே
யிலட்சத்தி லேயொருவ ராம்
துதிபெருக வருமூன்று காலமு மறிந்தமெய்த்
தூயர் கோடியி லொருவராந்
தொல்லுலகு புகழ்காசி யேகாம் பரங்கைலை
சூழு மணிஞ்சி பேரூர்
அதிகமுள வெண்காடு செங்காடு காளத்தி
யத்தனே யருமை மதவே
ளானுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறபபளீ சுர தேவனே. (ருகூ)

கற்பு மேம்பாடு.

தன்கணவ னுருவமாய்த் தற்புணர வந்தோன்
றனக்கிணங் காத நிறையா
டழற்கதி ரெழாமலும் பொழுதுவிடி யாமலுஞ்
சாபங் கொடுத்த செயலாள்

மன்னிவள ரழன்மூழ்கி யுலகறிய வேதனது
மகிழ்நனைச் சேர்ந்த பரிவாள்
மைந்தனைச் சுடவந்த விறைவன் றடிந்தவடி
வாண்மாலை யான கனிவாள்
நன்னதி படிந்திடுவ தென்னவா ரழன்மூழ்கி
நாயகனை மேவு தயவா
ஞானிலம் புகழ்சாலி பேர்பெறு நளாயினி
நலினமலர் மேல் வைதேகி
அன்னமென வருசந்த்ர மதிதுரோ பதையென்ப
ராதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩0)

கோடி யுடுக்குநாள்.

கறைபடா தொளிசேரு மாதிவா ரந்தனிற்
கட்டலாம் புதிய சீலை
கலைமதிக் காகாது பலகாலு மழையினிற்
கடிது நனைவுற் றொழிதரும்
குறைபடா திடர்வரும் வீரியம் போமரிய
குருதி வாரந் தனக்குக்
கொஞ்சநா ளிற்கிழியும் வெற்றிபோம் புந்தியிற்
குருவார மதி லணிந்தால்
மறைபடா தழகுண்டு மேன்மேலு நல்லாடை
வருமினிய சுக்கி ரற்கோ
வாழ்வுண்டு திருவுண்டு பொல்லாத சனியற்கு
வாழ்வுபோ மான முண்டாம்
அறைகின்ற வேதாக மத்தின்வடி வாய்விளங்
கமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௩௧)

## சகுனம்.

சொல்லரிய கருடன்வா னரமரவ மூஞ்சூறு
சூகரங் கீரி கலைமான்
றுய்யபா ரத்வாச பட்டையெலி புன்கூகை
சொற்பெருக மருவு மாந்தை
வெல்லரிய காடிகாட் டான்பூனை புலிமேல்
விளங்குமிரு நா வுடும்பு
மிகவுமிசை யிவையெலாம் வலமிருந் திடமாகில்
வெற்றியுண் டதிக நலமாம்
ஒல்லையின் வழிப்பயண மாகுமவர் தலைதாக்க
லொருதுடை யிருத்தல் பற்ற
லொருதும்ம லாணையிட விருமல்போ கேலென்ன
வுபசுருதி சொல்லிவை யெலாம்
அல்லறரு நல்லவல வென்பர்முனி யோர்பரவு
மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௯௨)

## இதுவுமது.

நரிமயில் பசுங்கிள்ளை கோழிகொக் கொடுகாக்கை
நாவி சிச்சிலி யோந்திதான்
நரையான் கடுத்தவாய்ச் செம்போத் துடன்மேதி
நாடரிய சுரபி மறையோர்
வரியுழுவை முயலிவை யனைத்தும்வல மாயிடின்
வழிப்பயண மாகை நன்று
மற்றுமிவை யன்றியே குதிரையனு மானித்தல்
வாய்ச்சொல் வாவா வென்றிடல்
தருவளை தொனித்திடுதல் கொம்புகிடு முடிமுரசு
தப்பட்டை யொலிவல் வேட்டுத்

தனிமணி முழக்கெழுத லிவைபெலா மூர்வழி
தனக்கேக நன்மை யென்பார்
அருணகிர ணோதயத் தருணபா னுவையனைய
வண்ணமேல யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௬௩)

இதுவுமது.

தலைவிரித் தெதிர்வருத லொற்றைப் பிராமணன்
றவசி சன்னாசி தட்டான்
றனமிலா வெறுமார்பி மூக்கறைபுல் விறகுதலை
தட்டைமுடி மொட்டைத் தலை
கலன்கழி மடந்தையர் குசக்கலஞ் செக்கான்
கதித்ததில தைலமிவைகள்
காணவெதிர் வரவொணா நீர்க்குட மெருக்கூடை
கனிபுலா லுபய மறையோர்
நலமிகு சுமங்கலை கிழங்கு சூதகமங்கை
நாளும் வண்ணா னழுக்கும்
நசைபெருகு பாற்கலச மணிவளையன் மலரிவைக
ளொடியெதிர் வர நன்மையாம்
அலைகொண்ட கங்கைபுனை வேணியாய் பாசணியு
மண்ணமேல யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (௬௪)

உணவில் விலக்கு.

கைவிலைக் குக்கொளும் பாலசப் பால்வருங்
காராக் கறந்த வெண்பால்
காளான் முருங்கைசுரை கொம்மடி பழஞ்சோறு
காந்திக் கரிந்த சோறு

செவ்வையில் சிறுக்கிரை பீர்க்கத்தி வெள்ளுப்பு
　　தென்னைவெல் லமலா வகளு
சீரிலா வெள்ளுள்ளி யீருள்ளி யிங்குவொடு
　　சிறப்பில்வெண் கத்தரிக் காய்
எவ்வமில் சிவன்கோயி னிர்மாலி யங்கிரண
　　மிலகுசுட ரில்லாத வூ
ணிவையெலாஞ் சீலமுடை யோர்களுக் காகா
　　வெனப்பழைய நூலுரை செயும்
ஐவகைப் புலன்வென்ற முனிவர்விண் ணவர்போற்று
　　மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
　　ரறப்பளீ சுர தேவனே. (௬௫)

நற்பொருளிற் குற்றம்.

பேரான கங்கா நதிக்குமதன் மேல்வரும்
　　பேனமே தோஷ மாகும்
பெருகிவளர் வெண்மதிக் குள்ளுட் களங்கமே
　　பெரிதான தோஷ மாகும்
சீராந் தபோதனர்க் கொருவர்மேல் வருகின்ற
　　சீற்றமே தோஷ மாகுந்
திதின்முடி மன்னவர் விசாரித் திடாதொன்று
　　செய்வ தவர்மேற் றோஷமாம்
தாராள மாமிகத் தந்துளோர் தாராமை
　　தானிரப் போர் தோஷமாஞ்
சாரமுள நற்கருப் பஞ்சாறு கைப்பதவர்
　　தாலஞ்செய் தோஷ மாகும்
ஆராயு மொருநான் மறைக்குமெட் டாதொளிரு
　　மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
　　ரறப்பளீ சுர தேவனே. (௬௬)

## மனைகோல்வதற்கு மாதம்.

சித்திரைத் திங்கடனின் மனைகோல மனைபுகச்
செல்வமுண் டதினு நலமே
சேரும்வை காசிக்கு மேனு ளான்புரந்
தீட்ட தானி யாகா
வெற்றிகொ ளிராகவன் றேவிசிறை சேர்கடகம்
வீறல்ல வாவணி சுகம்
மேவிடுங் கன்னியிர ணியன்மாண்ட தாகாது
மேன்மையுண் டைப்பசிக் கே
உத்தமங் கார்த்திகைக் காகாது மார்கழியி
லோங்கு பாரதம் வந்தநா
ளுயர்வுண்டு மகரத்தின் மாசிமா தத்தில்விட
மும்பர்கோ னுண்ட தாகா
தத்தநீ மாரனை யெரித்தபங் குனிதானு
மாகுமே மா வருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கூஎ)

## விருந்து வாரம்.

செங்கதிர்க் குறவுபோம் பகைவரும் விருந்தொருவர்
செய்யொணு துண்ணு ணுது
திங்களுக் குறவுண்டு நன்மையாம் பகைவருஞ்
செவ்வாய் விருந்த ருந்தார்
பொங்குபுத னன்மையுண் டுறவாம் விருந்துணப்
பொன்னவற் கதிக பகையாம்
புகரவற் காகிலோ நெடுநாள் விரோதமாய்ப்
போன வுறவுந் திரும்பும்
மங்குனிகர் சனிவார நல்லதா மிதனினு
மனமொத் திருந்த விடமே

வாலாய மாய்ப்போய் விருந்துண விருந்துதவ
வாய்த்த நாளென் றறியலாம்
அங்கையில் விளங்கிவளர் துங்கமழு வாளனே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கூஅ)

## பூப்பு வாரம்.

அருக்கனுக் கதிரோகி யாவனற் சோமனுக்
கானகற் புடைய ளாவா
ளங்கார கற்குவெகு துக்கியா வாள்புந்தி
யளவில்பைங் குழவி பெறுவாள்
திருசதரு வியாழத்தின் மிக்கசம் பத்தினொடு
சிறுவரைப் பெற் றெடுப்பாள்
சீருடைய பார்க்கவற் கதிபோக வதியுமாந்
திருவு முண்டா யிருப்பாள்
கருத்தழிந் தெழில்குன்றி வறுமைகொண் டலைகுவாள்
காரி வாரத்தி லாகில்
களபமுலை மடமாதர் புட்பவதி யாம்வார
காலபல னென் றுரை செய்வார்
அருத்தியுட னெளியேனை யாட்கொண்ட சோதியே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (கூகூ)

## பூப்பி லக்கினம்.

வறுமைதப் பாதுவரு மேடத்தி லிடபத்தின்
மாறுது விபசாரி யாம்
வாழ்வுண்டு போகமுண் டாகுமிது னங்கடகம்
வலிதினிற் பிறரை யணைவாள்

சிறுமைசெயு மிடிசேர்வண் மிருகேந் திரற்கெனிற்
சீர்பெறுவள் கன்னி யென்னில்
செட்டுடைய டுலையெனிற் பிணியான் மெலிந்திடுவ
டேளினுக் குத் தனுசெனில்
நெறிசிதைவள் பூருவத் தபரநெறி யுடையளா
நீண்மகர மான மிலளா
நிறைபோக வதிருப்ப மெனின்மீன மென்னிலோ
நெடிய பேரறி வுடையளாம்
அறிவாளா மடமாதர் தமையறியி ராசிபல
னதுவென்ப ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எ0)

தீவுங் கடலும்.

நாவலந் தீவினைச் சூழ்கருங் கடலளவு
லட்சம் யோசனை யிதனையே
நாடொறுஞ் சூழ்வதில வந்தீ வதைச்சூழ்த
னற்கழைச் சாற்றின் கடல்
மேவுமிது சூழ்வது குசத்தீ வதைச்சூழ்தன்
மிகுமதுக் கட லதனையே
விழைவொடுஞ் சூழ்தல்கிர வுஞ்சதீ வம்மிதனின்
மேற்சூழ்த னெய்க் கடலதாம்
பூவிலிது சூழ்தல்சா கத்தீவ மிங்கிதைப்
போர்பபது திருப்பாற் கடல்
போதவது சூழ்தலசான் மலிதீவ மாந்தயிர்ப்
புணரி யப்பாலு மப்பால்
ஆவலுறு புட்கரத் தீவா மிதைச்சூழ்வ
தருப்புனற் றருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எக)

மேலான பொருள்.

சுழிசுத்த மாயிருந் ததிலும் படைக்கான
துரகமோர் மாணிக்க மாஞ்
சூழ்புவிக் காசனு யதிலே விவேகமுள
துரையுமோர் மாணிக்க மாம்
பழுதற்ற வதிரூப வதியுமாய்க் கற்புடைய
பாவையோர் மாணிக்க மாம்
பல்கலைகள் கற்றறி யடக்கமுள பாவலன்
பார்க்கிலோர் மாணிக்க மாம்
ஒழிவற்ற செல்வனு யதிலே தியாகியா
முசிதனோர் மாணிக்க மா
முத்தம குலத்துதித் ததிலுமோ மெய்ஞ்ஞான
முடையனோர் மாணிக்க மாம்
அழிவற்ற வேதாக மத்தின்வடி வாய்விளங்
கமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எஉ)

உண்டி யிலையும் முறையும்.

வாழையிலை புன்னைபுர சடனற் குருக்கத்தி
மாப்பலாத் தெங்கு பன்னீர்
மாசிலமு துண்ணலா முண்ணாத வோவரசு
வனசஞ் செழும் பாடலம்
தாழையிலை யத்தியா லோண்ட பத்திரஞ்
சகதேவ முண் முருக்குச்
சாருமிவை யன்றிவெண் பாலெருக் கிச்சிலிலை
தனிலுமுண் டிடவொணு தால்
தாழ்விலாச் சிற்றுண்டி நீரடிக் கடிபருகல்
சாதங்கள் பல வருந்தல்

சற்றுண்டன் மெத்தலூ ணித்தனையு மெய்ப்பிணி
தனக்கிட மெனப் பருகிடார்
ஆழிபுடை சூழுலகில் வேளாளர் குலதிலக
ஞருமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எங)

கவிஞர் வறுமை.

எழுதப் படிக்கவகை தெரியாத மூடனை
யிணையிலாச் சேட னென்று
மீவதில் லாதகன லோபியைச் சபையதனி
லிணையிலாக் கர்ண னென்றும்
அழகற்ற வெகுகோர ரூபத்தை யுடையோனை
யதிவடிவ மார னென்று
மாயுத மெடுக்கவுந் தெரியாத பேடிதனை
யாண்மைமிகு விஜய னென்றும்
முழுவதும் பொய்சொல்லி யலைகின்ற வஞ்சகனை
மொழி யரிச்சந்த்ர னென்றும்
மூதுலகி லிவ்வணஞ் சொல்லியே கவிராஜர்
முறையின்றி யேற்ப தென்னோ
அழலென வுதித்துவரு விடமுண்ட கண்டனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எச)

கவிஞன்.

தெள்ளமிர்த தாரையென மதுரங் கதித்தபைந்
தேன்மடை திறந்த தெனவே
செப்புமுத் தமிழினொடு நாற்கவிதை நாற்பொரு
டெரிந்துரைசெய் திறமை யுடனே

விள்ளரிய காவியத் துட்பொரு ளலங்காரம்
விரிவிலக் கண விகற்பம்
வேறுமுள தொன்னூல் வழக்குமூல கத்தியல்பு
மிக்கப்ர பந்த வண்மை
உள்ளமெல் லாமறிந் தலைபடங் குஞ்சடலை
யொத்ததிக சபை கண்டபோ
தோங்கலை பொலிக்கின்ற கடல்போற்ப்ர சங்கமது
ரைப்பவன் கவிஞ னாகும்
அள்ளிவிட முண்டகனி வாயனை நேயனை
யமலனை யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எரு)

நற்சார்பு.

காணரிய பெரியோர்க டரிசனம் லபிப்பதே
கண்ணிணைகள் செய் புண்ணியங்
கருணையா யவர்சொன் மொழி கேட்டிட லபிப்பதிரு
காது செய்திடு புண்ணியம்
பேணியவர் புகழையே துதிசெய லபித்திடுதல்
பேசில்வாய் செய் புண்ணியம்
பிழையாம லவர்தமைத் தொழுதிட லபிப்பதுகை
பெரிது செய்திடு புண்ணியம்
வீணெறி செலாமலவர் பணிவிடை லபிப்பதுதன்
மேனி செய்திடு புண்ணியம்
விழைவொடவர் சொற்படி நடந்திட லபிப்பதே
மிக்க பூர்வ புண்ணியம்
ஆணவ மெனுமலங் களைந்தறி வினைத்தந்த
வண்ணலை யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எசு)

## பிறந்தாரோடு வருகிற வாரபலம்.

ஜென்ம நக்ஷத்திரத் தாதிவா ரம்வரிற்
 றீரா தலைச்ச லுண்டாரு
திங்களுக் காகில்வெகு சுகபோ சனத்தினொடு
 திருமாதி னருளு முண்டாம்
வன்மைதரு மங்கார வாரம்வந் தாற்சிறிதும்
 வாராது சுகமதென் பார்
மாசில்பல கலைபயிலவர் மேன்மையாம் புதனெனும்
 வாரத் துடன் கூடினால்
நன்மைதரு குருவார மதுசேர்ந்து வரிலாடை
 நன்மை யுடனே வந்திடும்
நாரிய ருடன்போக மிகவுமுண் டொருவெள்ளி
 நலவ வாரத்தில் வந்தால்
அன்மருவு பீடையுண் டாமென்பர் சநியனுக்
 கமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுர தேவனே. (எஎ)

## இதனை யுடையவர்க் கிது வில்லையெனல்.

பொன்னாசை யுள்ளவர்க் குறவேது குருவேது
 பொங்குபசி யுள்ள பேர்க்குப்
போதமே சுசியேது ருசியேது பயல்கொண்டு
 போதுமாதர் விழி வலையிலே
எந்நாளு மலைபவர்க் கச்சமொடு வெட்கமே
 தென்றென்று முறு கல்விமே
லிச்சையுள பேர்க்கதிக சுகமேது துயிலேது
 வெளிதா யிருந்து கொண்டே
பன்னாளு மலைபவர்க் கிகழேது புகழேது
 பாரி லொருவர்க் கதிகமே

பண்ணியிடு மூடருக் கறமேது மறமலாற்
பகர்கிரைய மொன் றுளதுகாண்
அன்றுண வருகரி யுரித்தணியு மெய்யனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எஅ)

மழைநாட் குறிப்பு.

சித்திரைத் திங்கள்பதின் மூன்றுக்கு மேனல்ல
சீரான பரணி மழையுந்
தீதில் வைகாசியிற் பூரணை கழித்தபின்
சேரு நாலா நாளினில்
ஒத்துவரு மழையுமவ் வானியிற் றேய்பிறையி
லோங்கு மேகா தசியினி
லொளிர்பரிதி வீழ்பொழுதின் மந்தார மும்மழையு
முண்டா யிருந் தாடியில்
பத்திவரு மீததியைந் தினிலாதி வாரமும்
பகரு மாவணி மூலநாள்
பரிதியு மறைந்திடக் கனமழை பொழிந்திடப்
பாரில்வெகு விளைவு முண்டாம்
அத்தனே பைங்குவளை மாலையணி மார்பனு
மண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (எகூ)

இருந்து முதவாமை.

சமயத்தி னுதவாத நிதியமேன் மிக்கதுயர்
சார்பொழு திலாத கிளையேன்
சபைமுகத் துதவாத கல்வியே னெதிரிவரு
சமரத் திலாத படையேன்

விமலனுக் குதவாத பூசையே ஞானுமிருள்
வேளைக் கிலாத சுடரேன்
வெம்பசிக் குதவாத வன்னமே னீடுகுளிர்
வேளைக் கிலாத கலையேன்
தமதுதளர் வேளைக் கிலாதவோர் மனைவியேன்
சரசத் திலாத நகையேன்
சாமரண காலத்தி லுதவாத புதல்வனேன்
றரணிமீ தென்பர் கண்டாய்
அமரர்க்கு முனிவர்க்கு மொருவர்க்கு மெட்டாத
வாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அ0)

மறையோர் சிறப்பு.

ஓராறு தொழிலையுங் கைவிடார் சௌசவிதி
யொன்று தப்பாது புரிவா
ருதயாதி யிற்சென்று நீர்படிகு வார்கால
மொருமூன்றி னுக்கு மறவா
தாரர்ய்ந்து காயத்ரி யதுசெபிப் பார்நாளு
மதிதி பூசைகள் பண்ணுவார்
யாகாதி கருமங்கள் மந்த்ரகிரி யாலோப
மின்றியே செய்து வருவார்
பேராசை கொண்டிடார் வைதிகநன் மார்க்கமே
பிழையா திருக்கு மறையோர்
பெய்யெனப் பெய்யுமுகி லவர்மகிமை யெவர்களும்
பேசுதற் கரிதரிது காண்
ஆரார் நெடுஞ்சடில வமலனே யெனையாளு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அக)

### அரசர் சிறப்பு.

மநுநீதி முறைமையும் பரராசர் கொண்டாட
வருமதிக ரணவீரமும்
வாள்விஜய மொடுசரச சாதன விசேஷமும்
வாசி மதகரி யேற்றமும்
கனமா மமைச்சரும் பலபரான துர்க்கமுங்
கைகண்ட போர்ப் படைஞருங்
கஜரத பதாதியுந் துரகப்ர வாகமுங்
கால தேசங்க ளவையும்
இனிதா யறிந்ததா னுபதிக ளொடுசமர்க்
கிளையாத தள கர்த்தரு
மென்றும்வற் றாததன தானிய சமுத்திரமு
மேற்றமுள குடி வர்க்கமும்
அனைவோரு மெச்சவிங் கிவையெலா முடையபே
ரரசரா மருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அஉ)

### வைசியர் சிறப்பு.

நீள்கடல் கடந்திடுவர் மலையாள மும்போவர்
நெடிது தூரந் திரிந்து
நினைவுதடு மாறுர்கள் சலியார்கள் பொருடேடி
நீணிலத் தரசு புரியும்
வாளுழவ ரைத்தமது கைவசஞ் செய்வார்கள்
வருமிடம் வாரா திடமும்
மனதையு மறிந்துதவி யொன்றுநா றயிட
வளர்ப்பர்வரு துலை துலைக்கும்
ஆள்விடுவர் மலிவுகுறை வதுவிசா ரித்திடுவ
ரளவில் பற்பல சரக்கு

மையுறக் கொள்வர்விற் பார்கணக் கதிலனுவு
மறவிடார் செலவு வரிலோ
ஆளியொத் தேமலையி னளவுங் கொடுத்திடுவ
ரருள்வைகிய ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அரு)

வேளாளர் சிறப்பு.

யசனுதி கருமமுந் தப்பாமல் வேதிய
ரியற்றிநல் லேர் பெறுவதும்
இராச்யபா ரஞ்செய்து முடியன்னர் வெற்றிகொண்
டென்றுநல் லேர் பெறுவதும்
வசனுதி தப்பாது தனதானி யந்தேடி
வசியர்நல் லேர் பெறுவதும்
மற்றுமுள பேரெலா மிடியென் றிடாததிக
வளமைபெற் றோர் பெறுவதும்
திசைதோறு முள்ளபல தேவா லயம்பூசை
செய்யநல் லேர் பெறுவதுஞ்
சீர்கொண்ட பைங்குவளை மாலைபுனை வேளாளர்
செய்பு மேழிப் பெருமைகாண்
அசையாது வெள்ளிமலை தனின்மேவி வாழ்கின்ற
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அச)

தூனுதிபதி மந்திரி சேனுதிபதிகளி னியல்பு.

தன்னரசர் வலுமையும் பரராச ரெண்ணமுஞ்
சாலமேல் வரு கருமமுந்
தானறிந் ததிபுத்தி யுத்தியுண் டாயினேன்
ரனுதி பதிபாகு வான்

மன்னவர் மனத்தையுங் காலதே சத்தையும்
வாழ்குடி படைத் திறமையும்
மந்திரா லோசனையு மெல்லா மறிந்தவன்
வளமான மதி மந்திரி
துன்னிய படைக்குணங் கரிபரி பரீக்ஷையே
சூழ்பகைவர் புரி சூழ்ச்சியுந்
தோலாத வெற்றியுந் திடமான சித்தியுள
சூரனே சேனாதி பன்
அன்னையினு நல்லஙலை மங்கைபங் காளனே
யனகனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அரு)

இராச கருணீகர் சிறப்பு.

வருமோலை யுத்தரத் தெழுதிவரு பொருளினால்
வரவிடுப் போன் மனதையும்
மருவிவரு கருமமுந் தேசகா லத்தையும்
வருகாத லாமலக மாய்
விரைவா யறிந்தரச ரெண்ணிலெண் ணினையள
விடவெழுத வாசிக்கவும்
வெற்றிகொண் டேபெரிய புத்தியுடை யோன்புவியின்
மேன்மை ராயச காரனும்
கருவா யறிந்துதொகை யீரா றுநொடியினிற்
கடிதேற் றிடக் குறைக்கக்
கடுகையொரு மலையாக மலையையொரு கடுகுமாக்
காட்டுவோன் கருணீக னும்
அருவாகி யுருவாகி யொளியாகி வெளியாகு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அசு)

## கோபத்தின் கொடுமை.

கோபமே பாவங்க ளுக்கெலாந் தாய்தந்தை
　　கோபமே குடி கெடுக்குங்
　கோபமே யொன்றையுங் கூடிவர வொட்டாது
　　கோபமே துயர் கொடுக்கும்
கோபமே பொல்லாது கோபமே சீர்கேடு
　　கோபமே யுற வறுக்குங்
　கோபமே பழிசெயுங் கோபமே பகையாளி
　　கோபமே கருணை போக்கும்
கோபமே யீனமாங் கோபமே யெவரையுங்
　　கூடாம லொருவ னாக்குங்
　கோபமே மறலிமுன் கொண்டுபோய்த் தீயநர
　　கக்குழியி னிற் றள்ளுமால்
ஆபத் தெலாந்தவிர்த் தென்னையாட் கொண்டருளு
　　மண்ணலே யருமை மதவே
　ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
　　ரறப்பளீ சுர தேவனே. (அஎ)

## பல்துறை.

தான்புரி தவத்தையுங் கொடையையும் புகழுவோர்
　　தங்களுக் கவை தழைவுறா
　சற்றுமறி வில்லாம லந்தணரை நிந்தனைசெய்
　　தயவிலோ ராயுள் பெருகார்
மேன்படு நறுங்கலவை மாலைதயிர் பால்புலால்
　　வீடுநற் செந்நெ லிவைகள்
　வேறொருவர் தந்திடினு மறுமொழி யறிந்தபேர்
　　விலைகொடுத் தேகொள்ளு வார்
தென்கனி கிழங்குவிற கிலையிவை யனைத்தையுந்
　　தீண்டரிய நீச ரெனினுஞ்

சீர்பெற வளிப்பரே வீகழாது கைக்கொள்வர்
சீலமுடை யோரென்ப ரால்
ஆன்கொடி யுயர்த்தவுமை நேசனே யீசனே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அஅ)

## தத்துவத் திரயம்.

பூதமோ ரைந்துடன் புலனைந்து ஞானம்
பொருந்து மிந்திரிய மைந்து
பொருவில்கன் மேந்திரிய மைந்துமன மாதியாம்
புகலரிய கரண நான்கே
ஓதிரு ரிவையான்ம தத்துவ மெனச்சொல்வ
ருயர்கால நியதி கலையோ
டோங்கிவரு வித்தைரா கம்புருடன் மாயையென்
றுறைசெய்யு மோரேழுமே
தீதில்வித் யாதத்வ மென்றிடுவ ரிவையலாற்
றிகழ்சுத்த வித்தை யீசன்
சீர்கொள்சா தாக்கியஞ் சத்திசிவ மைந்துமே
சிவதத்வ மென் றறைகுவார்
ஆதிவட நீழலிற் சனசாதி யர்க்கருள்செ
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (அகூ)

## மன்மதபாணமும் அவற்றின் குணமுதலியவும்.

வனசஞ் செழுஞ்சூத முடனசோ கந்தளவ
மலர்நீல மிமை யைந்துமே
மாரவேள் கணைகளா மிவைசெயுங் குணமுனரி
மனதி லாசையை யெழுப்பும்

திடமினிய ரணசூர வீரனிவ னென்னவே
திசைமெச்ச வேண்டு மல்லால்
தேகியென வருபவர்க் கில்லையென் னாமலே
செய்யவே வேண்டு மல்லால்
அடைவுடன் பலகல்வி யாராய்ந்து வித்துவா
னாகவே வேண்டு மல்லா
லறிவான துரைமக்க ளாகவர வேண்டுமிவ
ரதிகபூ பால ரையா
வடகுவடு கிடுகிடென வெழுகடலு மலையெறிய
மணியுரகன் முடிக ணெரிய
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (எச)

வேசை நிந்தை.

தேடித்தம் வீட்டிற் பணக்காரர் வந்திடிற்
றேகசீ வன்போல வே
சினேகித்த வும்மையொரு பொழுதுகா ணாவிடிற்
செல்லுமோ தன்ன மென்றே
கூடிச் சுகிப்பரொன் றாசையுன் மேலென்று
கூசாம லாணை யிடுவார்
கொங்கையை வெடிக்கப் பிடிக்கக் கொடுத்திதழ்
கொடுப்பர்சும் பன முகப்பர்
வேடிக்கை பேசியே கைமுதல் பறித்தபின்
வேறுபட நிந்தை செய்து
விடவிடப் பேசுவார் தாய்கலக மூட்டியே
விட்டுத் துரத்தி விடுவார்
வாடிக்கை யாயிந்த வண்டப் பரத்தையர்
மயக்கத்தை நம்ப லாமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (எரு)

## இதற்கிது உறுதியெனல்.

கைக்குறுதி வேல்வின் மனைக்குறுதி மனையாள்
கவிக்குறுதி பொருளடக் கந்
கன்னியர் தமக்குறுதி கற்புடைமை சொற்குறுதி
கண்டிடிற் சத்ய வசனம்
மெய்க்குறுதி முன்பின் சபைக்குறுதி வித்வசனம்
வேசையர்க குறுதி தேடல்
விரகருக் குறுதிபெண் மூப்பினுக் குறுதியூண்
வீரருக் குறுதி தீரம்
செய்க்குறுதி நீரரும் பார்க்குறுதி செங்கோல்
செழுமபடைக் குறுதி வேழஞ்
செல்வந் தனக்குறுதி பிள்ளைகண கர்க்குறுதி
சேர்ந்திடுஞ் சர்ச்சனர்க ளாம்
மைக்குறுதி யாகிய விழிக்குற மடந்தைசுர
மங்கைமரு வுந்தலைவ னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (எசு)

## வறுமையிற் சிறுமை.

வறுமைதான் வந்திடிற் றாய்பழுது சொல்லுவாண்
மனையாட்டி சற்று மெண்ணாள்
வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்
சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது
சிந்தையிற் றைரிய மிலை
செய்யசபை தன்னிலே சென்றுவர வெட்கமாஞ்
செல்வரைக் காணி னாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரி
லுயிருடன் செத்த பிணமா

மூலகம் பழித்திடும்பெருமையோர் முன்புசென்
றொருவரொடு செய்தி சொன்னால்
மறுவசன முஞ்சொலார் துன்பினிற் றுன்பமிது
வந்தணுகி டாதருளு வாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (எஎ)

தீச்சார்பா னன்மையிழப்பு.

ஆனைதண் ணீரினிழல் பார்த்திடத் தவளைசென்
றங்கே கலக்கி யுலவு
மாயிரம் பேர்கூடி வீடுகட் டிடிலேத
மறைகுறளு முட்டனே வரும்
ஏனைநற் பெரியோர்கள் போசனஞ் செயுமளவி
லீக்கிடந் திசைகேட தாம்
இன்பமிகு பசுவிலே கன்றுசென் றூட்டுதற்
கினியகோ னதுதடுக் கும்
சேனைமன் னவரென்ன கருமஞ்செய மிக்கினுஞ்
சிறியோர்க ளாற் குறைபடுஞ்
சிங்கத்தை யும்பெரிய ருஷபத்தை யும்பகைமை
செய்ததொரு நரியல்ல வோ
மானையுந் திகழ்தெய்வ யானையுந் தழுவுமணி
மார்பனே யருளா ளனே.
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (எஅ)

இடையூறுற்றும் பயன்படுபவை.

ஆறுதண் ணீர்வற்றி விட்டாலு மூற்றுநீ
ரமுதபா னங்கொடுக்கு
மாதவனை யொருபாதி கட்செவி மறைத்தாலு
மப்போது முதவிசெய் வன்

கூறுமதி தேய்பிறைய தாகவே குறையினுங்
குவலயத் திருள் சிதைக்குங்
கொல்லைதான் சாவிபோய் விட்டாலு மங்குவரு
குருவிக்கு மேய்ச்ச லுண்டு
வீறுட ளுதாரிதான் மிடியான போதினிலு
மிகநாடி வருப வர்க்கு
வேறுவகை யில்லையென் றுறையாதி யன்றள
வியந்துள மகிழ்ந் துதவுவான்
மாறுபடு சூரசங் காரகம் பீரனே
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (எகூ)

இன்னவர்க்கிது வில்லையெனல்.

சார்பிலா தவருக்கு நிலையேது முதலிலா
தவருக் கிலாப மேது
தயையிலா தவர்தமக் குறவேது பணமிலா
தார்க்கேது வேசையுறவு
ஊரிலா தவர்தமக் கரசேது பசிவேளை
யுண்டிடார்க் குறுதி நிலையே
துண்மையில் லாதவர்க் கறமேது முயல்விலார்க்
குறுவதொரு செல்வ மேது
சோர்விலா தவருக்கு மற்றுமொரு பயமேது
சுகமிலார்க் காசை யேது
துர்க்குணமி லாதவர்க் கெதிராளி யேதிடர்செய்
துஷ்டர்க் கிரக்க மேது
மார்புருவ வாலிமே லஸ்திரம் விடுத்தநெடு
மான்மருக னான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அ0)

### இதினிமிது நன்றெனல்.

பஞ்சரித் தருமையறி யார்பொருளை யெய்தலிற்
பலர்மனைப் பிச்சை நன்று
பரிவாக வுபசார மில்லா விருந்தினிற்
பட்டினி யிருக்கை நன்று
தஞ்சமொரு முயலையடு வென்றிதனில் யானையொடு
சமர்செய்து தோற்ற னன்று
சரசகுண மில்லாத பெண்களைச் சேர்தலிற்
சன்னியா சித்த னன்று
அஞ்சலார் தங்களொடு நட்பா யிருப்பதனி
லரவினொடு பழகுவது நன்
றந்தணர்க் காபத்தி லுதவா திருப்பதனி
லாருயிர் விடுத்த னன்று
வஞ்சக ருடன்கூடி வாழ்தலிற் றனியே
வருநதிடுஞ் சிறுமை நன்று
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அக)

### நிலையாதவை.

கொற்றவர்கள் ராணுவமு மாறுமே ராகிய
குளங்களும் வேசை யுறவுங்
குணமிலார் நேசமும் பாம்பொடு பழக்கமுங்
குலவுநீர் விளையா டலும்
பற்றலார் தமதிடை வருந்துவிசு வாசமும்
பழையதா யாதி யிணறும்
பரதார மாதரது போகமும் பெருகிவரு
பாங்கான வாற்று வரவும்
நற்றுமொரு துர்ப்புத்தி கேட்கின்ற பேருறவு
நல்லமத யானை நட்பும்

நாவினல் லுறவுமொரு நாள்போ லிராதிவைக
ணம்பப் படாது கண்டாய்
மற்றுமொரு துணையில்லை நீதுணையெ னப்பரவும்
வானவர்கள் சிறைமீட்ட வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அஉ)

நற்புலவர் தீப்புலவர் செயல்.

மிக்கான சோலையிற் குயில்சென்று மாங்கனி
விருப்பமொடு தேடி நாடும்
மிடைகருங் காகங்க ளெக்கனி யிருந்தாலும்
வேப்பங் கனிக்கு நாடும்
எக்காலும் வரிவண்டு பங்கேரு கத்தினி
லிருக்கின்ற தேனை நாடு
மெத்தனை சுகந்தவகை யுற்றாலு முருள்வண்
டினந்தூர் மலத்தை நாடும்
தக்கோர் பொருட்சுவை நயங்களெங் கேயென்று
தாம்பார்த் துகந்து கொள்வார்
தாழ்வண வன்கண்ணர் குற்றமெங் கேயென்று
தமிழிலா ராய்வர் கண்டாய்
மைக்காவி விழிமாது தெய்வானை யுங்குறவர்
வள்ளியுந் தழுவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அங)

தாழ்தற் பெருமை.

வேங்கைகள் பதுங்குதலு மாமுகி லொதுங்குதலும்
விரிசிலை குனிந் திடுதலும்
மேடம தகன்றிடலும் யானைக ளொடுங்குதலும்
வெள்விடைக டுள்ளி விழலும்

மூங்கில்கள் வணங்குதலு மேலவ ரிணங்குதலு
முனிவர்க ணயந்து கொளலும்
முதிர்படை யொதுங்குதலும் வினைஞர்க ளடங்குதலு
முதலினர் பயந் திடுதலும்
ஆங்கரவு சாய்குதலு மகிழ்மல ருலர்ந்திடலு
மாயர்குழல் சூடு படலு
மம்புவியி லிவைகாரி யங்களுக் கல்லாம
லதனு விளைப்பு வருமோ
மாங்கனிக் காவானை வலமது புரிந்துவளர்
மதகரிக் கிளைய முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அச)

தெய்வச் செயல்.

சோடாய் மரத்திற் புறுரெண் டிருந்திடத்
துறவுகண் டேவே டுவன்
றோலாம லவையெய்ய வேண்டுமென் றொருகணை
தொடுத்துவில் வாங்கி நிற்க
ஊடாடி மேலே யெழும்பிடி லடிப்பதற்
குலவுரா சாளி கூட
வுயரப பறந்துகொண் டேதிரிய வப்போ
துதைத்தசிலை வேட னடியில்
சேடாக வல்விடந் தீண்டவே யவன்விழச்
சிலையிற் றொடுத்த வாளி
சென்றிரா சாளிமெய் தைத்துவிழ வவ்விரு
சிறைப்புறு வாழ்ந்த வன்றோ
வாடாம லிவையெலாஞ் சிவன்செயல்க ளல்லாதுன்
மனச்செயலி னாலும் வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அரு)

### பாட லியப்பு.

எழுத்தசைகள் சீர்தளைக ளடிதொடைகள் சிதையா
திருக்கவே வேண்டு மப்பா
வீரைம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்
பினியசொற் கமைய வேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொரு
ளடக்கமு மிருக்க வேண்டு
மன்பான பாவின மிசைந்துவரல் வேண்டுமு
னலங்கார முற்ற துறையில்
பழுத்துள முவந்தோசை யுற்றுவரல் வேண்டும்
படிக்குமிசை கூடல் வேண்டும்
பாங்காக வின்னவை பொருந்திடச் சொற்கவிதை
பாடிற் சிறப்பென்பர் காண்
மழுத்தினஞ் செங்கைதனில் வைத்தகங் காளனருண்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அசு)

### விபூதிதரிக்கு முறைமை.

பத்தியொடு சிவசிவா வென்றுதிரு நீற்றைப்
பரிந்துகை யாலெடுத் துப்
பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு
பருத்தபுய மீதி லொழுக
நித்தமு விரல்களா னெற்றியி னழுந்தவுற
நினைவாய்த் தரிப்ப வர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரி சுத்தமா
நீங்காம னிமல னங்கே
சத்தியொடு நித்தம்விளை யாடுவன் முகத்திலே
தாண்டவஞ் செய்யுந் திரு

சஞ்சலம் வாராதுபர கதியுதவு மிவரையே
சத்தியஞ் சிவனென்ன லாம்
மத்தினிய மேருவென வைத்தமு திணக்கடையு
மான்மருக ஞன முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அஎ)

## விபூதி வாங்குமுறை.

பரிதனி லிருந்துமியல் சிவிகையி லிருந்துமுயர்
பலகையி லிருந்து மிகவே
பாங்கான வம்பலந் தனிலே யிருந்தும்
பருத்ததிண் ணையி லிருந்தும்
தெரிவொடு கொடுப்பவர்கள் கீழ்நிற்க மேனின்று
திருநீறு வாங்கி யிடினுஞ்
செங்கையொன் ருலும்விரன் மூன்ருலும் வாங்கினுந்
திகழ்தம் பலத்தி ஞேடும்
அறியதொரு பாதையி னடக்கின்ற போதினு
மசுத்தநில மான வதினு
மங்கே தரிக்கினுந் தந்திடிற் றள்ளினு
மவர்க்குநர கென்பர் கண்டாய்
வரிவிழி மடந்தைகுற வள்ளிநா யகிதனை
மணந்துமகிழ் சக நாதனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அஅ)

## இவ்வுறுப்பாற் பயனில்லெனல்.

தேவால யஞ்சுற்றி டாதகா லென்னகா
றெரிசியாக் கண்ணென்ன கண்
தினமுமே நின்கமல பாதத்தை நினையாத
சிந்தைதா னென்ன சிந்தை

மேவாக மஞ்சிவ புராணமவை கேளாமல்
விட்டசெவி யென்ன செவிகள்
விமலனை வணங்காத சென்னியென் சென்னிபணி
விடைசெயாக் கையென்ன கை
நாவார நினையேத திடாதவா யென்னவாய்
நற்றீர்த்த மூழ்கா வுட
ணிலத் தென்னவுடல் பாவியா கியசனன
நண்ணினுற் பலனேது காண்
மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்ட முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (அகூ)

நற்பொருளோடு தீப்பொருள் பிறத்தல்.

கோகனக மங்கையுடன் மூத்தவள் பிறந்தென்ன
குலவுமாட் டின்க ணதர்தான்
கூடப் பிறந்தென்ன தண்ணீரி னுடனே
கொடும்பாசி யுற்று மென்ன
மாகருணு மமுதினொடு நஞ்சம் பிறந்தென்ன
வல்விரும் பிற்றுருத் தான்
வந்தே பிறந்தென்ன நெடுமரந் தனின்மொக்குள்
வளமொடு பிறந்தென்ன வுண்
பாகமிகு செந்நெலொடு பதர்தான் பிறந்தென்ன
பன்னுமொரு தாய்வயிற் றிற்
புண்புறு விவேகியொடு கயவர்கள் பிறந்தென்ன
பலனேது மில்லை யன்றோ
மாகனக மேருவைச் சிலையென வளைத்தசிவன்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூ0)

### தன்னினத்தா லழிவு.

குலமான சம்மட்டி குறடுகைக் குதவியாய்க்
கூரிரும் புகளை வெல்லுங்
கோடாலி தன்னுளே மரமது நுழைந்துதன்
கோத்திர மெலா மழிக்கும்
நலமான பார்வைசேர் குருவியா னதுவந்து
நண்ணுபற வைகளை யார்க்கு
நட்புடன் வளர்ந்தகலை மாறென்று சென்றுதன்
னவில்சாதி தனை யிழுக்கும்
உலவுநற் குடிதனிற் கோளர்க ளிருந்துகொண்
டொற்றுமை யீட ழிப்ப
ருளவனில் லாமனூ ரழியா தெனச்சொல்லு
முலகமொழி நிசமல்ல வோ
வலமாக வந்தா னிடத்தினிற் கனிகொண்ட
மதயானை தன்சோ தரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (சுக)

### வீணுக்குழைத்தல்.

குயின்முட்டை தனதென்று காக்கையடை காக்குங்
குணம்போலு மீக்க ளெல்லாங்
கூடியே தாமுண்ண வேண்டுமென் றேதினங்
கூடுய்த்த நறவு போலும்
பயில்சோர ருக்குப் பிறந்திடத் தாம்பெற்ற
பாலனென் றுட்கருதி யே
பாராட்டி முத்தமிட் டன்பாய் வளர்த்திடும்
பண்பிலாப் புருடர் போலும்
துயிலின்றி நிதிகளைத் தேடியே யொருவர்பாற்
றொட்டுத் தெரித்திடாம

றுகைபண்ணி வைத்திடுவர் கைக்கொண்டு போகவரு
சொந்தமா னவர்வேறு காண்
வயிரமொடு சூரனைச் சங்கார மேசெய்து
வானவர்க் குதவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூ௨)

## இதுசேரி னிது பயன்படாதெனல்.

அழலுக்கு ளேவிட்ட நெய்யும் பெருக்கான
வாற்றிற் கரைத்த புளியு
மரிதான சுமரிற் கவிழ்த்திட்ட பாலும்வரு
மலகைகட் கிடு பூசையும்
சுழல்பெருங் காற்றினில் வெடித்தபஞ் சும்மணற்
சொரிநறும் பனிநீரு நீள்
சொல்லரிய காட்டுக் கெரித்தநில வுங்கடல்
சுழிக்குளே விடுகப்ப லும்
விழலுக் கிறைத்திட்ட தண்ணீரு முகமாய
வேசைக் களித்த பொருளும்
வீணருக் கேசெய்த நன்றியும் பலனில்லை
விருதாவி தென்பர் கண்டாய்
மழலைப் பசுங்கிள்ளை முன்கைமலை மங்கைதரு
வண்ணக் குழந்தை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூ௩)

## கைவிடத் தகாதவர்.

அன்னைசுற் றங்களையு மற்றைநாண் முதலா
வடுத்துவரு பழையோரையு

மடிபகைவ ரிற்றப்பி வந்தவொரு வேந்தனையு
மன்பான பெரியோரை யும்
தன்னைநம் பினரையு மேழையா னவரையுஞ்
சார்ந்தமறை யோர்தம்மை யுந்
தருணமிது வென்றுநல் லாபத்து வேளையிற்
சரணம புகுந்தோரை யும்
நன்னயம தாகமுன் னுதவிசெய் தோரையு
நாளுந் தனக்குறுதி யாய்
நத்துசே வகனையுங் காப்பதல் லாதுகை
நழுவவிட லாகாது காண்
மன்னயிலு மினியசெஞ் சேவலுஞ் செங்கைமலர்
வைத்தசர வணபூ பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூச)

## தகாத செயல்.

அண்டிவரு முற்றார் பசித்தங் கிருக்கவே
யன்னியர்க் குதவு வோரு
மாசுதபு பெரியோர்செய் நேசத்தை விட்டுப்
பினற்பரை யடுத்த பேரும்
கொண்டவொரு மனையா ளிருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவு வோருங்
கூறுசற் பாத்திர மிருக்கமிகு தானமது
குணமிலார்க் கீய்ந்த பேரும்
கண்டுவரு புதியோரை நம்பியே பழையரைக்
கைவிட் டிருந்த பேருங்

கரிவாலை விட்டுநரி வால்பற்றி நதிநீர்
கடக்கின்ற மரியாதை காண்
வண்டடர் கடப்பமலர் மாலிகா பரணமணி
மார்பனே யருளாள னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூ௫)

நல்லோர் முறைமை.

கூடியே சோதரர்கள் வாழ்தலா லுந்தகு
குழந்தைபல பெறுத லாலுங்
குணமாக வேபிச்சை யிட்டுண்கை யாலுங்
கொடும்பிதிர்க் கிடுத லாலுந்
தேடியே தெய்வங்க ளுக்கீத லாலுந்
தியாகங் கொடுத்த லாலுஞ்
சிறியோர்கள் செய்திடும் பிழையைப் பொறுத்துச்
சினத்தைத் தவிர்த்த லாலும்
நாடியே தாழ்வாய் வணங்கிடுத லாலுமிக
நல்வார்த்தை சொல்ல லாலு
நன்மையே தருமலாற் றாழ்ச்சிகள் வாராவிவை
நல்லோர்கள் செயு முறைமைகாண்
வாடிமன நொந்துதமிழ் சொன்னநக் கீரன்முன்
வந்துதவி செய்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூ௬)

அடைக்கலங் காத்தல்.

அஞ்சலென வாயினுட றருமன் சுமந்துமுன்
னாற்றைக் கடத்து வித்தா

னடைக்கல மெனுங்கயற் காகநெடு மாலுட
னருச்சுனன் சமர்புரிந் தான்
தஞ்சமென வந்திடு புருவுக்கு முன்சிபி
சரீரந் தனைக் கொடுத்தான்
றடமலைச் சிறகரிந் தவனைமுன் காக்கத்
ததீசிமுது கென்பளித் தான்
இன்சொலுட னேபூத தயவுடைய ராயினோ
ரெவருக்கு மாபத்தி லே
யினியதஞ் சீவனை விடுத்தாகி லுங்காத்
திரங்கி ரக்ஷிப்ப ரன்றோ
வஞ்சகிர வுஞ்சமொடு தாருகன் சிங்கமுகன்
வளர்சூர னுடல்கீண்ட வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. கூஎ

யோக்கியாயோக்கியம்.

பாலினொடு தேன்வந்து சேரில்ருசி யதிகமாம்
பருகுநீர் சேரி லென்னும்
பவளத்தி னிடைமுத்தை வைத்திடிற் சோபிதம்
படிகமணி கோக்கி லென்னும்
மேலினிய மன்னர்பால் யானைசேர் வதுகனதை
மேஷமது சேரி லென்னும்
மிக்கான தங்கத்தி னவமணி யுறிற்பெருமை
வெண்கல் லழுத்தி லென்னும்
வாலிப மினார்களுட னிளையோர்கள் சேரினலம்
வனைகிழவர் சேரி லென்னும்
மருவுநல் லோரிடம் பெரியோர் வரிற்பிரியம்
வருகயவர் சேரி லென்னும்

மாலிகை தரித்தமணி மார்பனே தெய்வானை
வள்ளிக்கு வாய்த்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூஅ)

## பெரியோ ரியல்பு.

அன்னதா னஞ்செய்தல் பெரியோர்சொல் வழிநிற்ற
லாபத்தின் வந்த பேருக்
கபயங் கொடுத்திடுத னல்லினஞ் சேர்ந்திடுத
லாசிரியன் வழி நின்றவன்
சொன்னமொழி தவறாது செய்திடுதல் தாய்தந்தை
துணையடி யருச்சனை செயல்
சோம்பலில் லாமலுயிர் போகினும் வாய்மைமொழி
தொல்புவியி னாட்டி யிடுதல்
மன்னரைச் சேர்ந்தொழுகல் கற்புடைய மனைவியொடு
வைகினுந் தாமரை யிலை
மருவுநீ ரெனவுறுத லிவையெலா மேலவர்த
மாண்பென் றுரைப்ப ரன்றோ
வன்னமயின் மேலிவர்ந் திவ்வுலகை யொருநொடியில்
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. (கூகூ)

## நூலின்பயன்.

வன்னமயி லேறிவரு வேலா யுதக்கடவுண்
மலைமே லுகந்த முருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கைமர மாகினோன்
வானவர்கள் சேனா பதி

கன்னன்மொழி யுமையா ளருப்புதல்வ னரன்மகன்
கங்கைபெற் றருள் புத்திரன்
கணபதிக் கிளையவொரு மெய்ஞ்ஞான தேசிகக்
கடவுளா வினன்குடியி னான்
பன்னரிய புல்வயலில் வாலகும ரேசர்மேற்
பரிந்துகுரு பாத தாசன்
பாங்கான தமிழாசி ரியவிருத் தத்தினறை
பாடலொரு நூறு நாடி
நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடொறுங் கற்ற பேர்கள்
ஞானயோ கம்பெறுவர் பதவியா வும்பெறுவர்
நன்முத்தி யும் பெறுவரே. (க00)

## குமரேச சதகம்

## முற்றிற்று.



சிவமயம்.

## குமரேச சதகத்தின்

# செய்யுள் முதற்குறிப்பகராதி.



குமரேச சதகத்தின் செய்யுள் முதற்குறிப்பகராதி

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

வெண்மணி

நாராயணபாரதியார்

அருளிச்செய்த

மணவாளநாராயண சதகம்

என்னும்

# திருவேங்கட சதகம்.

இஃது

காஞ்சீபுரநிவாஸி

ஸ்ரீமத் இராமாநந்தயோகி அவர்களால்

பார்வையிடப்பட்டது.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

[2-ம் பதிப்பு]

1915

விலை அணா 2

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

## திருவேங்கட சதகத்தின்

# செய்யுள் முதற்குறிப்பகாராதி.

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

செய்யுள். பக்கம்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# மணவாள நாராயண சதகம் என்கிற

# திருவேங்கட சதகம்.



## காப்பு.

செந்திருவாழ் மார்பன் றிருவேங்கட சதகம்
பைந்தமிழா னீதிநெறி பாடவே—வந்தருளும்
கார்முகமஞ் சங்கத்தான் கைத்தா மரையணிந்த
கார்மூகமஞ் சங்கத்தான் காப்பு.

---

## தனியன்.

ஓங்குகண் டலைசூழ மேகமலை தேன்சொரியு
மோமனூா வேங்கைபூப
னுதவுமண வாளநா ராயணன் களமூரி
னுலகநீ திக்கேட்க முன்
தேங்குநீர் வயல்சூழும் வெண்மணியில் வாழுமுயர்
செல்வன்முத தாரையனார்
செழுந்தவ முதித்தநா ராயணப் பாரதித்
திருவேங்க டச்சதகமே
பாங்குபெறு முலகுளோர்க் கிருகண்மணி யகவிருட்
பானுவிரு வழிவிழியதாம
பவக்கடல் கடக்கவரு வங்கமாம் பொங்குமொளி
பரவுமெய்ஞ் ஞானவழியாம்
ஈங்கிக பரத்துணைய தாமிது படிப்பவர்க
ளியல்வேங்க டேசனற
னிசையருளை யுற்றுநல மேபெருகி வாழுமவ
ரெழுபொன்மலை போல்வாழ்வரே.

---

## நூல்.

### கடவுள் வாழ்த்து.

பூமேவு திசைமுகனை யுந்திதனி லீன்றதும்
புனிதவே தாகமமெலாம்
புருஷோத்த மன்றெய்வ மென்பதும் பூசுரர்கள்
புரியுமந்திர கருமமும்
தேமேவு மலர்மங்கை மார்பில்வளர் சீருஞ்
செகந்தனைக் காத்தருள்வதுந்
தேவர்முதன் மருகசெந்து பட்சிசிலை மாமுஞ்
செழிக்கப் பதந்தருவதும்
பாமேவு பொருளலங் காரஞ் சிறப்பதும்
பலவிதமு நீயென்றதாற்
பரதெய்வ முண்டென் றிருப்பார்க ளோ.நூல்
படித்தவித மோதெரிகிலேன்
மாமேவு பைந்துளப மாலையணி மார்பனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடராயனே. (க)

### அந்தணர் சிறப்பு.

சீலமிகு யாகம புராணமனு நீதியுந்
தேர்ந்துமெய்ஞ் ஞானநிறைவார்
செய்கின்ற யாகாதி மந்த்ரகரு மங்களாற்
றேவர்க்கு முதவிசெய்வார்
காலமுத லாகிய ப்ரமாணாங்க ளங்கையிற்
கனிபோல வேகாட்டுவார்
காய்த்ரி மகிமையாற் சகலதி வினைகளுங்
கனலிட்ட பஞ்சுசெய்வார்
ஞாலமிசை திங்கண்மும் மாரியுங் கொற்றவர்
நடாத்துசெங் கோல்வளமையு

நாடுகள் செழிப்பதுஞ் சகலதரு மமும்வேத
நாயகர் மகத்துவங்காண்
வாலகரு டன்பண்டு கண்டகதை யல்லவோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௨)

அரசர் சிறப்பு.

சீருலவு மனுநீதி மந்திரிசொ றன்புத்தி
தேசத் தியற்கைநான்குந்
தேர்ந்துசெவி விழிமனது மூன்றினும் பொறுமையே
சேர்ந்துசெங் கோல்செலுத்தித்
தாருலவு கமலமுங் குமுதமுங் காலங்கள்
சார்ந்துமலர் கின்றவிதமுந்
தந்தியொடு முதலைபொரு தானபல முங்கண்டு
தரிபலரை வெற்றிகொண்டு
பாருலவு கொடிசேனை தனதானி யஞ்சகல
பாக்கியமு மிகவிளங்கப்
பற்பலதன் மங்களொடு கீர்த்திப்ர தாபம்
படைத்ததிற லோரரசனும
வாருலவு தனமங்கை மணமகிழு நாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராய[illegible]. (௩)

வ[illegible]கர் சிறப்பு.

திடமுடன் றம்மன [illegible]ணிபமதே
செய்வார தாயமி[illegible]
செலவுசெய் யார்யா[illegible] வருகினுங் கண்டபடி
தேர்ந்துநிறை [illegible]ரைப்பார

அடகுதந் தாலுமரி யாதையில் லாருக்
கரைக்காசு கடனுமுதவா
ரானமனு நீதியுடை யோர்களுரை வாய்மையா
லளவிலாப் பொருள்கொடுப்பார்
கடுகுதனி லெட்டிலொரு கூறுவா வெனினுங்
கணக்குமுறை தன்னில் வழுவார்
காரிய விசேஷமதி லொருகோடி யுதவுவார்
கருணைவாத்தகர் பெருமைகாண்
வடமலை தினமபரவு தென்மலைக் கதிபனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடாரமனை. (ச)

வேளாளர் சிறப்பு.

அந்தணர்கள் கருமமுஞ் சகாசர் புசபலமு
மவனிவர்த்தகலாபமு
மனைவர்க்கு மேன்மையுந் தருமமுந் தானமு
மன்புமங் கையரின்பமும்
புந்திதெளி நியமமுஞ் சாத்திரமு மாகம
புராணமொடு சகலகலையும்
பொய்யாத வுண்மையுங் கீர்த்திப்ர தாபமும்
புகழ்கின்ற தேவர்நிலையும்
விந்தைபுரி மானமுங் குலமாபு நீதியும்
விதரண முதற்சகலமும்
வேளாளர் குவளைபுனை காராளர் தங்களுடை
மேழியின் பெருமையன்றோ
மந்தா மெனும்புய சவுந்தா முகுந்தனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமன வாளனை
வரதவேங் கடாயனை. (ரு

### புருஷராய்ப் பிறந்தோர் பெறுபயன்.

புருஷராய்ச் சநநமெ டுத்தபேர் மெய்ஞ்ஞான
    போதத்தை யறிவதொன்று
பூமியொடு மிக்கதன வானுவ தொன்றலது
    பூவலஞ் செய்வதொன்று
தருமவா னென்றுமிகு கீர்த்திமா னென்றுநற்
    சற்குண விவேகியொன்று
சகலரும் புகழ்கின்ற வித்துவா னென்றுரண
    சங்க்ராம வீரனென்று
கருணைசே ரிந்தவகை யில்லாத மனிதரைக்
    காசினியி லேன்படைத்தாய்
கருதுதா யுதரமும் பார்க்கின்ற பேர்களிரு
    கண்களுஞ் செய்தவினையோ
மருவுலா வியதுளப மாலையணி மார்பனே
    மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
    வாதவேங் கடராயனே. (௯)

### நகரச்சிறப்பு.

பாதகி தப்ரபல வேசியர்க ளாடலும்
    பாடலும் பெறுகோயிலும்
பலவாவி மண்டபங் கோட்டையர ணங்களொடு
    பலர்மேவு கடைவீதியும்
இரதகச துரகம்ப தாதிசது ரங்கபல
    மேற்கின்ற தளகர்த்தனு
மெண்ணமிகு மந்திரிப்ர தானிதா னுபதிய
    ரியனுத்தி யோகசனமும்
விரதமறை யோராதி நாற்குலமு மொன்றென்று
    மிக்கசோ டசதானமு

மேலாய்ச் சமீபித்த நதியுமாய் மருநீதி
வேந்தனும் பெறுபட்டணம்
வாதருறை சீரங்க பட்டணமெனச் சொல்வர்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (எ)

அரசர்க்குரிய தொழிலாளரியல்பு.

காரியா காரியங் கொற்றவர் தெரிந்திடக்
கண்டுசொல் வோன்மந்திரி
காலமுந் தன்பலமு மெண்ணியிகல் வென்றிடக்
கருதுவோன் றளகர்த்தனும்
சீரிய தனங்களொடு ராச்சியஞ் சகலமுந்
திட்டமிடு வோன்ப்ரதானி
செய்யவா சகதாட்டி யவதான வக்கணை
சிறக்குமவ னோராயசன்
சூரியன் றிசைமாறி னுந்தான் றொடுத்தவத்
தொகைவிடான் கருணிகனுஞ்
சொல்வண்மை சபைவண்மை பாராசர் வண்மைதெரி
சுமுகனே தானாபதி
மாரியது காத்தருளு மணிமேக வண்ணனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (அ)

இதனு லிஃதுள தாமெனல்.

அதிகார மதுவந்து சேரிலே வருக்குமே
யதிகவல் லமைகளுண்டா
மாடையா பரணங்கள் சேரிலெவ ருக்குமே
யழகுபெறு வளமையுண்டாம்

நிதிமேவு செல்வமது சேரிலெவ ருக்குமே
நிறைகின்ற மேன்மையுண்டாம
நெஞ்சமகிழ் விதரணஞ் சேரிலெவ ருக்குமே
நிலைபெற்ற கீர்த்தியுண்டாம்
அதிமேவு பத்தியது சேரிலெவ ருக்குமே
தோன்றவரு தெய்வமுண்டாஞ்
சுகமிக்க பருவமது சேரிலெவ ருக்குமே
துய்யமண வாசையுண்டாம்
மதிசே ரிலங்குமுத மலரா திருக்குமோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௯)

அரசரிடத்துப் பெறத்தகும் வரிசைகள்.

சுற்றமொடு தானுநம் பினபேரு மின்பமாய்ச்
சுகமுறப் புரவியமையுந்
துய்யதரு மங்களொடு கீர்த்திப்ர தாபந்
துலங்குறு சிவிகையமையும்
கொற்றவர்கண் மெச்சவே பராசர் கெடிவெற்றி
கொண்டுவரி லாணையமையுங்
குறையொன்றி லாமனிறை புகழ்பெற்ற வீரர்முன்
கூறுங்கை வாளமமையும்
உற்றவகை யிவையெலாம் வேந்தர்சன் மானமுட
னுதவாம லேபெற்றிடி
லுறைகொண்ட நாடகந் தன்னில்வரு கோலமுட
னூர்வலஞ் செய்கோலமும்
மற்றவர்கள் கோலமுஞ் சரியென்று சொல்வர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௧௦)

பிதுர்வாக்கிய பரிபாலன முதலியவற்றால் வருநன்மை.

தந்தைதாய் வாக்யபரி பாலனம் புரிவதுந்
தான்சொன்ன படிசெய்வதுந்
தவறாத விரதமும் பொய்யாத வசனமுந்
தானமுங் கனபொறுமையும்
சிந்தைமகிழ் மாபினோர் செய்தொழின் முடிப்பதுந்
தேவதா விசுவாசமுஞ்
செய்தபேர் பாசுரா மன்கவச குண்டலன்
செயராம னொடுவீடுமன்
அந்தமிகு சொல்லரிச் சந்திரன் மாபலி
யடறரும னொடுபகிரத
னருள்பிரக லாதனிவர் போற்பெருங் கீர்த்தியொடு
மவனியிசை நீடுவாழ்வார்
வந்தமரர் போற்றவளர் சேஷகிரி வாசனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வாதவேங கடாரயனே. (கக)

சூது முதலியவற்றால் வருந்தீமை.

சூதுபெறு வித்தையும் பாதார மோகமுஞ்
சோதரான் றனையிகழ்வதுந்
துலங்காத புத்தியு மடங்காத வார்த்தையுஞ்
சொல்லிச்செ யாததிறமும்
தீதுபெறு வஞ்சமு மதங்களும் பிறருடைய
திரவியந் தனிலாசையுஞ்
சிந்தையக மெனுமகங் காரமும் பெற்றபேர்
சீர்நளன் கீசகன்றான்
மீதுபொரு வாலிசுக ரன்குமரன் சிசுபாலன்
வென்றியுத் தான்வில்வலன்

விந்தைபெறு துரியோத னன்சனகன் முன்பெற்ற
விதமுற் றிருப்பர் கண்டாய்
வாதுபெறு தானவரை வோதுமொரு திகிரியாய்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடராயனே. (௩௨)

சாதிமுதலானவைகளின் குணமே சிறந்ததெனல்.

தடவரை யதன்மீது விளையினுஞ் சோளமது
சன்னசம் பாவாகுமோ
சந்ததமும் வாடா திருந்தாலு மெட்டிமலர்
சாதிமல் லிகையாகுமோ
கடலெலா நிறைவெள்ள மாயினுஞ் சுவைபெற்ற
காவிரியி னூற்றாகுமோ
காகங்கள் கோடிதொனி செய்தாலு மொருசிறு
கருங்குயிற் றொனியாகுமோ
படர்கின்ற பேய்ச்சுரை சொரிந்தபழ முந்திரிப்
பழமதற் கிணையாகுமோ
பகர்கின்ற சாதியுங் கனவபது மேன்மையும்
பலகூட்ட முந்தேகமார்
வடிவதிக மன்றுகுண மேயதிக மென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடராயனே. (௩௩)

செல்வத்தால் வருமுயர்வு.

செல்வமது சேரிலோ வேங்குபேர் வேங்கனுந்
திளாகில் வேங்கடனுமாஞ்
செயல்கொண்ட வேங்கடா சலனுமா மையாந்
திரளைய ரவர்களாகும்

நல்வரிசை கொடுதான டத்திடுங் காரிய
  நபந்தனா தாருமபபா
னல்லோலை யில்லாக்கொ டொப்பமே லொருவசன
  நவிலுமுன் கபடமிடுவார்
சொல்வண்மை வாவென்ற பேர்வாரு மென்பார்
  சுவாமியாக தேவரீராந்
துதிபெற்ற தேவரீ ரவர்களாங் காணுமுன்
  றொழுதெழுந் தருளுமென்பார்
வல்விதம்பெறுபாம லோபியர்கண் மிண்டனே
  மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
  வரதவேங் கடராயனே. (கச)

வறுமையால் வருமிழிவு.

துதிக்கின்ற மனைவியுங் குறைசொல்வ டந்தைதாய்
  சோகமுற வசைகூறுவார்
அன்பமொடு மனமெலிய மேனிவேற் றுருவமாந்
  தொலையாத கவலைவளரும்
உதிக்கின்ற புத்திய மழுங்கிடுங் கல்விபோ
  முதரத்தி லதிகபசியா
முறவின்முறை யாருமொரு வார்த்தைசொல்லார்சொன்ன
  வுத்தரமு மொருவர்கேளார்
விதிக்கின்ற வுலகத்தி லெல்லாரு மிகழுவார்
  மிடிவந்து சேர்ந்ததென்றால்
மேன்மையே தரிவேது குலமேது நலமேது
  வித்தையே தெவரறிவாகாண்
மதிக்கின்ற வுன்பதம் போற்றிலவை சேருமோ
  மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
  வரதவேங் கடராயனே. (கரு)

## உடனே கண்டிக்கப்படுபவர்கள்.

முடிகொண்ட கொலையாளர் களவினோர் சாதிநெறி
முறைமைவழு இன்றதீயோர்
மூர்க்கமுறு பகையாளர் வெகுசன விரோதியர்கண்
மொழிமாறு கோளுரைப்போர்
மிடிகொண்ட பேரைக் கெடுத்துளோர் கற்புடைய
மெல்லியரை மேவுமயலோர்
விசுவாச காதகஞ் செய்குவோர் துஷ்டமா
மிருகங்கண் மிக்கபிணிகள்
கடிகொண்ட விஷமுடன் செய்பகை யென்னவே
கருதுபதின் மூன்றுவகையுங்
கண்டவுடனே பின்னை யெண்ணாது கண்டித்தல்
கருணைமனு நீதிகண்டாய்
வடிகொண்ட தெள்ளமுத மனையகுண சீலனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (கசு)

## பொறுத்துக் கண்டிக்கப்படுபவர்கள்.

கண்டுநிரு பர்தனைத் தள்ளுவோர் குருசுவாமி
காரியக் குறைசெய்குவோர்
காணு விடத்திற் பழித்துளோர் வஞ்சகங்
கருதுவோர் பொய்யுரைப்போர்
சண்டைகொடு தந்தைதாய் சுற்றமுட னனுதினந்
தவிராத கலகமிடுவோர்
தம்முடைய வலிமையா லெளியோர் வழக்கினைத்
தள்ளிய மதங்களுடையோர்
அண்டிவரு துஷ்டரொடு கூடிவினை செய்குவோ
ராருமிவ ரெண்மர்தமையு

மாறுபோன் மூன்றுபிழை கண்டபின் கண்டிப்ப
தாசர்மனு நீதிகண்டாய்
வண்டுலவு கின்றமலர் தண்டுளப மார்பனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (கஎ)

## என்றும் கண்டிக்கப்படாதவர்கள்.

ஆதாகி வந்தபேர் மிக்கதா னுபதியர்
தநிபெற்ற தந்தைதாயர்
சொல்லு மாசாரியர் புரோகிதர் புராணிகர்
சுகந்தந்த போகமடவார்
வேதாக மங்கற்ற வைதிகர் தபோதனர்கள்
விகடப்ர சங்கமிடுவோர்
வித்தைபா லுயர்கின்ற கவிராஜர் சுத்தரண
வீரர்மா பிணியுயர்ந்தோர்
தீதான வெம்பிணி யடைந்துளோர் வறுமையோர்
சிறுவரொடு தனைநம்பினோர்
செய்யுமிவர் பதினெண்மர் மதியாத குற்றங்கள்
செயினும் பொறுப்பதல்லால்
வாதாடி யெதிர்செய்கை மன்னர்நெறி யன்றுகாண்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடராயனே. (கஅ)

## இவர் இதனால் வெல்வரெனல்.

வேந்தருட னேவேந்தர் வாதுவரி லோகெடிகொள்
வெற்றிகொண் டேசெயிப்பார்
வீரருட னேவீரர் வாதுவரி லாயுத
விதத்தினு லேசெயிப்பார்

போந்திடு நியோகியர்கள் வார்த்தையுசி தத்தாற்
பொருந்தவே வாதுவெல்வார்
புல்லர்க்கு வாதுவரின் மாபெலாம் வசைசொலிப்
பொதுவிலக் காற்செயிப்பார்
சாந்தமணி வேசியர்கள் வாதுவந் தாற்பாத
சங்கீத மொடுசெயிப்பார்
சரசகவி ராசர்பிர சங்கத்தி னுல்வாது
தன்னைச் செயிப்பர்கண்டாய்
மாந்தளிரை நிகர்மேனி ராதைபதி மோகனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடாயனை. (௧௯)

இக்குற்றத்தா லிது பயன்படாதெனல்.

செயல்கொண்ட மானமது பங்கமா னுற்றிரு
செழித்தென்ன மாறிலென்ன
செய்பகுண வின்பாச மில்லாத மங்கையைச்
சேர்ந்தென்ன நீங்கிலென்ன
இபல்கொண்ட கீர்த்திமரி யாதையில் லார்களை
யிகழ்ந்தென்ன புகழ்ந்துமென்ன
விடருற்ற போதுதவி செய்யாத பேர்நட்
பிருந்தென்ன போயுமென்ன
கயல்கொண்ட விழியினுள் பேரிளம பெண்கொங்கை
காட்டிலென் மூடிலென்ன
கருணைகொண் டொருவருக் குரையாத பேர்வித்தை
கற்றென மறக்கிலென்ன
வயல்கொண்ட பயிர்மேனி புயல்கொண்ட களமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடாயனை. (௨௦)

### இவையெல்லா மளவுபடினு மாசை யளவுபடாதெனல்.

பொங்குநதி மணலுமா காயத்தி னெல்லையும்
பொழியுமழை யின்றிவலையும்
புடவிமிசை வருசனமு மடவிமிசை வளர்மரமும்
பொருப்பின்மிசை யுற்றசிலையும்
திங்களுட னுற்றதா ரகைகணமு முன்பாத
சேவைசெய் வோர்பெருமையுந்
தெரிவையர்கண் மனமுமுனி நினையாத பலமூடர்
சென்மமுங் கடலாழமும்
அங்கசன் கணைபுரியு மோகமுங் கவிராச
ரருள்பெற்ற புத்திநலமு
மளவுகண் டாலுமே மனிதருறு மாசைதனை
யளவிடக் கூடாதுகாண்
மங்கைமிதி லாபுரி மடந்தைமகிழ் நேயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாயனே. (உக)

### இன்னார்க்கு இது வில்லையெனல்.

காதன்மிகு காமுகர் தமக்குமுறை யிலைவஞ்
சகர்க்குமரி யாதையில்லை
கட்டுண்ட கள்வருக் குறவின்முறை யாரில்லை
கசடர்க்கு ஞானமிலலை
வேதமறி பூசுரர் தமக்கருள்செ யாரிலை
விரோதிக்கு நேயரில்லை
மெய்ஞ்ஞானி யர்க்குவரு சாதிகுல மொன்றில்லை
வீரர்க்கு மணபயமிலை
போதமிகு யோகிக்கு வினைசெய்கு வாரில்லை
பொய்யர்முன் சாட்சியில்லை

புலவர்க்கு நேயமில் லாரில்லை செல்வரைப்
போற்றிலா ரொருவரில்லை
மாதரெழில கண்டுமன மகிழாத பேரில்லை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வாதவேங் கடராயனை. (௨௨)

இது இவ்வாறாயின் இதுவாமெனல்.

எழுதினது சொல்வதே ராயரொப் பந்தனக்
கிசையுமவ ளோரம்பையா
மிடர்வேளை யுதவுமவ னேகன்னன் வழிநடைக்
கேற்றதே யுற்றவசுவம்
பழகிமன மறியுமவ னேயூகி மந்த்ரிநற்
பயீக்கி னொன்றந்தையாம்
பசியிற் கிடைத்ததே யமுதமாந் துயிலினேர்ப்
பட்டதே புஷ்பசயனம்
நிழறந்து காத்ததே கறபகந் தாகத்தி
னீர்தந்த தேகங்கையாம்
நிறைபிணி தவிர்த்ததே சஞ்சீவி தன்மட்டு
நீச்சுநீ ரேகடலதாம்
மழைமுகி லெழுந்தனைய மெய்யனை துய்யனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வாதவேங் கடராயனை. (௨௩)

இவர்க்கு இது தெய்வமெனல்.

திதுபுரி லோபியர் தமக்குப் பணங்களே
தெய்வமாங் காமுகர்க்குத்
தெரிவையர்க டெய்வமாந் துஷ்டருக் கென்னிலோ
தீமையே தெய்வமாகும்

நீதிபுடை யோர்க்குப் பயந்தீர்த்தி ரக்ஷித்த
நேயனே தெய்வமாகு
நீங்காத் தரித்திரர் தமக்குக் கொடுத்தவர்
நித்தமுந் துதிதெய்வமாம்
சாதியனை வர்க்குமறை யோர்தெய்வ மம்புவி
தனக்கரச னேதெய்வமாம்
சகலர்க்கு மாசாரி யன்றெய்வ நாரியர்
தமக்குநா தன்றெய்வமாம்
மாதவம் புரிஞானி யர்க்குநீ தெய்வமா
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (உ௪)

இது உண்டாயினும் இது வில்லாவிடிற் பயனில்லையெனல்.

எத்தனை பொருட்சுவை யிருக்கினும் பக்திரச
மில்லாத கவிகளென்ன
வெண்கோடி சம்பளந் தருகினுஞ் சன்மான
மில்லாத சேவகமென
சித்ராதி லீலைபல செய்யினு மிதழுண்டு
சேராத சுகமென்ன
செம்பொன்மிகு செல்வமுண் டாயினும் பயிர்கொண்ட
செயலிலா வளமையென்ன
வித்தையுள வெல்லாம் படிக்கினுங் குணவினய
மேவாத பெருமையென்ன
மெய்த்துளசி யில்லாத நந்தவன மெனவே
விளங்குமென் பார்கள்கண்டாய்
மத்தகச ராசன்மகிழ் விசயநர சிங்கமே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (உ௫)

## இது இச்சிறப்படையினும் பயனில்லையெனல்.

காட்டிலின் டஞ்செடி தழைத்தென்ன காஞ்சிரங்
கனியது சிவக்கிலென்ன
களைநாண லெல்லா மலர்ந்தென்ன காகங்
கழுத்திடை வெளுக்கிலென்ன
ஆட்டின் கழுத்திலதர் நீண்டென்ன நீர்ப்பாசி
யதுபச்சை யாகிலென்ன
வற்பருக் கதிகாரங் வந்தென்ன பேடிகையி
லாயுத மிருந்துமென்ன
நீட்டமொடு காடிக்கு மயிர்வளர்ந் தாலென்ன
நீதியறி யாதமூடர்
நிறைசெல்வ ராயென்ன ஞானமில் லாக்கல்வி
நெறிபோ லிருக்குமென்பார்
வாட்டடங் கண்ணிபுனை கண்ணிமகிழ் கண்ணனை
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வாதவேங் கடாராயனே. (உசு)

## கலியுக தோஷம்.

அப்புவியின் மிக்கமெய்ஞ் ஞானியைக் கண்டாலு
மதுவுமொரு வேஷமென்பா
ராகம புராணமறு நூல்விரும் பார்கள்பரி
யாசகதை யேமெச்சுவார்
கம்பமிசை யொருகோடி காணமிட் டாலுமது
கண்கட்டு வித்தையென்பார்
கற்பனை யலங்கார மாக்கவிகள் பாடினுங்
கற்றவர்க் கெளியவென்பார்
நம்பிவிசு வாசமொடு துதிசெய்யி னுங்கள்ள
ஞானமென் பார்களவைபோ

னயந்தகவி யுகமகிமை நின்னையுஞ் சிலபேர்
நவின்றுகுறை சொல்வர்கண்டாய்
வம்பவிழ் மலர்ச்சோலை மலையலங் காரனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (உஎ)

அரசரது நன்றியறியாமை.

அரசரைக் கண்டுபின் காரியக் காருக்
கதிகபர் தானமுதவி
யதிகார மொன்றினைப் பார்ப்பவ ரிடத்தினு
மதுக்கொட் டிரட்டியீதும்
கருதுநிலு வைப்பணந் தவணைப் பணங்கண்முன்
கடன்வாங்கி யேகொடுத்துங்
கணக்கர்செல வெழுதார்க ளுட்டார்க ளேறுவர்
கடன்காரர் தாமறிப்பார்
விருதுசிட் டுக்காரர் வைவார்கள் கொல்லரோ
வெயிலிடை நிறுத்திவைப்பார்
விதமாகு மவரவர்க ளெல்லாஞ் சபாசென்ன
மெய்யபாய் நடந்துகொளினும்
வரிசைபெறு துரைகளவ ரருமைசற் றறிவரோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (உஅ)

கவிவாணரருமை யறிவாரில்லாமை.

கற்பனை யலங்கார மாக்கோவை பாடினுங்
கனவரிசை யொருபச்சடங்
கலம்பகங் கூறிலொரு துப்பட்டி பிள்ளைக்
கவிக்கென்னி லொருசோமனும்

நற்பொரு ளுலாவென்னி னுறுமாலை மடலுக்கு
நாணயம தாயொருபணம்
நல்வண்ண மென்னிலொரு சாப்பாடு மாலையெனி
னன்மைதரு தாம்பூலமாம்
அற்புதம் பெறுகவிக ளென்னிற் பளாபளா
வதிகவெகு மானமாகு
மப்படியு மாயினுந் தொருவரென் றுரைலங்க
ளருமையெவ ரறிவர்கண்டாய்
மற்பொருத மல்லரொடு முற்பொருத வீரனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (உக)

இதனை யிவரன்றி யிவரறியாரெனல்.

கீர்த்தனைக ளின்மகிமை பாகவத ரல்லாற்
கிரிக்குறவர் தாமறிவரோ
கீர்த்திப்ர தாபமது விதரணிக ரல்லாது
கெட்டலோ பியாறிவரோ
சேர்த்தமநு விக்யான நீதிமன் னவரலாற்
சிலைவேடர் தாமறிவரோ
செய்யபக வற்கீதை மெய்ஞ்ஞானி யல்லாது
சென்மநீ சர்களறிவரோ
கோத்தமணி மாலையை மங்கையர்க ளல்லாற்
குரங்குகண் டாலறியுமோ
கொக்கோக மகிமைதனை நாகரிக ரல்லாது
கூறுபே டிகளறிவரோ
வார்த்தையுசி தத்தைமந் த்ரிகளன்றி யறிவரோ
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௩0)

## பயனில் சொல்லி னிழிவு.

அகமென்று தன்னைப் புகழ்ந்தபே யுந்தந்தை
யன்னையர் வருத்தமுறவே
யயலார் தமக்குதவு பேயுமட வார்புத்தி
யனுதினங் கேட்டபேயும்
சுகமென்று பொதுமாத ரைக்கூடி மனைவியைத்
துயரமே செய்தபேயுந்
துணிந்தாணை களமுற்று முறிகின்ற பேயுமுன்
சொன்னதிலை யென்றபேயும்
செகமன்ன ராமென்ற தலைவென்ற பேயுமியல்
செய்ந்நன்றி கொன்றபேயுந்
திரளான சபையினிற் பயனிலா வார்த்தையுரை
செய்கின்ற பேய்க்குநிகரோ
மகமென்று கோசிக னழைக்கமகிழ் தூயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௩௧)

## எல்லைகடத்தலின் வருமிழிவு.

அரசர்மே லாணைதனை யெண்ணாத குடிகளு
மாதாய மிஞ்சுசெலவு
மன்புடைய பேர்புத்தி கேளாத கோபமு
மவைக்கடங் காதநாவும்
சரசவகை மிஞ்சவே வந்தபரி காசமுந்
தனைமிஞ்சு தொழிலாளருந்
தயிரியந் தனைமிஞ்சு கவலையுஞ் சாக்ஷியோர்
தமைமிஞ்சு முறைவழக்கும்
கரசரண வவயவந் தனைமிஞ்சு தேகமுங்
கவியின்மிஞ் சியவெழுத்துங்

கருதுமுறை கேளாத மனையாட்டி புணர்நாய
கன்புகழை யொக்குமென்பார்
வாசாச கவிராஜர் புகழ்வேத குலதிலக
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வாதவேங் கடாரயனே. (கஉ)

இவர்க்கு அமுதம் இவ்விடத்தெனல்.

அண்டருக் கமுதமது சொர்க்கத்தில் வேதியர்க்
கமுதமது சொல்லுரையிலே
யானகவி ராஜருக் கமுதமணி நாவிலே
யாவினுக் கமுத முலையில்
பண்டிதர்க் கமுதமது கையிலே விதரணிகர்
பங்கிலமு தங்கண்ணிலே
பாகவத ருக்கமுது காதிலே பரிவுடைய
பாங்கருக் கமுதமனதில்
ஒண்டொடிய ருக்கமுத மாமதிய மெனவே
யுகந்திடுந் தேகமெல்லா
முற்றபெரி யோர்தமக் கமுதங் குணத்திலே
யுணர்வுடைய பேர்க்கமுதமோ
மண்டல மளந்தவன் பாதத்தி லென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (கங)

இவர்க்கு விஷம் இவ்விடத்தெனல்.

திருடர்க்கு விடமெலாங் கையிலே காமமிகு
தெரிவைக்கு விடமுலையிலே
தீயபொய் யர்க்குவிட நாவிலே மதமுடன்
றிரிவோர்க்கு விடநிதியிலே

கருதரிய கோளர்க்கு விடமுதடு தன்னிலே
காமுகர் விடங்கண்ணிலே
கட்செவி விடங்கள்பல் லடியிலே தேட்கெனிற்
கனவிடங் கடைவாலிலே
அரியதுஷ் டர்க்கென்னி லெட்டிமர மென்னவே
யங்கமெல் லாம்விடமதா
மடுத்துக் கெடுத்திடும் பகைவர்விட மனதிலே
யம்பொன்விலை மாதருக்கு
மருவுவிட மல்குலிற் றெரியவச மன்றுகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாயனே. (௩௪)

இவர்க்குப் புண்ணிய மிதுவெனல்.

உன்னுடைய பதசேவை கண்டுபணி கின்றதே
யுடல்செய்த புண்ணியமதா
முறைகொண்ட கீதையின் சாரங்கள் கேட்பதே
யுற்றசெவி யின்புண்ணியம்
தன்னுடைய புத்திர ரனேந்தசோ றுண்பதே
சாற்றுநா வின்புண்ணியந்
தத்துவ முணர்ந்தபெரி யோர்தமைக் காண்பதே
சார்ந்தவிழி யின்புண்ணியம்
பன்னுமிர வலர்கேட்கு முன்னங் கொடுப்பதே
பாணியது செய்புண்ணியம்
பதிவிரத மங்கைகுண மிக்கபுரு டற்குப்
பலிப்பதே வெகுபுண்ணியம்
மன்னுமிவை முன்செய்த புண்ணியம தென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாயனே. (௩௫)

இவர்க்குப் பாவமிதுவெனல்.

திருந்துகற் பனையிலாப் புன்கவிகள் கேட்பதே
செவிசெய்த பாவமாகுஞ்
செயலருமை யறியாத பேர்கண்முன் சேவகந்
திரிதல்கால் செய்தபாவம்
பரிந்தவுப சாரமா தாவிலார் மனையுணவு
பருகலே வின்பாவமாம்
பாவனை லயஞ்சுருதி நயமிலாப் பாதமது
பார்த்தல்விழி செய்த பாவம்
தருந்தமிழை யறியாத பேர்களிட மேற்கின்ற
தகைமைகை செய்தபாவந்
தன்பெயர் விளக்காத பிள்ளையைப் பெறுவதே
தாய்வயிறு செய்தபாவம்
வருந்துயர முன்செய்த பாவவினை யென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௩௬)

இவர்க்கிவை யுளவேனுமிவை வேண்டுமெனல்.

அதிவீர னென்னிலுந் தந்திரவு பாயமுட
னடையலரை வெல்லல்வேண்டு
மாயிரம் வித்தைகற் றாலுமுல கந்தனி
லடக்கமி திருத்தல்வேண்டும்
நதிகோடி நீந்திவந் தாலுமோ டந்தனை
நயந்துகரை சேரல்வேண்டும்
ஞானதத் துவமுணர்ந் தாலுமுல கத்தினி
னடக்கைதனை யறிதல்வேண்டும்
துதிசேர் குபேரனென் றாலுமொரு லாபமுறு
தொழிலுட னிருத்தல்வேண்டுந்

துய்யவல் லமையுடைய னெனினுமொரு சார்பினாற்
றுரைகளைக் காணல்வேண்டும்
மதியூகி யென்னினும் பெரியர்சொற் கொளல்வேண்டு
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாரயனே. (௩௭)

இவர்க்கிவை வேண்டாமெனல்.

பெற்றதாய் தந்தைதன் சுற்றமே முதலான
பெரியோரை முனிதல்வேண்டாம்
பின்னொன்று முன்னொன்று பேசியே யவமான
பேர்கொண்டு திரிதல்வேண்டாம்
உற்றவர்கள் போலவுட் பகையான வஞ்சகரை
யொருநாளு நம்பல்வேண்டா
மொருவருக் கிச்சையாய்ப் பொய்சொல்லி பின்சபையி
லூமைபோ னிற்றல்வேண்டாம்
சற்றுமே பொறுமையில் லாதவர்கள் சண்டையிற்
றன்போய் விலக்கல்வேண்டாந்
தைரியந் தனில்விக்ர மாதித்த னென்னினுந்
தன்னையே புகழல்வேண்டாம்
மற்றொன்று மெண்ணாது செய்யல்வேண் டாமென்பர்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாரயனே. (௩௮)

இவர்க்கிவை பாவமெனல்.

அரசர்வெகு மானஞ்செய் போதுதடை வருகிலோ
வன்றுவிதி பாவமாகு
மானபெரி யோர்பழமை யாய்வந்த நேயமதை
யகல்வதே தத்தயோகம்

தருகின்ற காரியங் கைகூடி யேபின்பு
தவறில்லை திருதியாகுஞ்
சற்குண மடைந்துளோ ருத்தமரை முனிவதே
சந்திராஷ் டமமாகுமாம்
கருதிய விருந்தினுட னுண்ணாத தனியுணவு
காணுமது வேதுர்த்தினங்
கலகமே செய்கின்ற வீணரைக் காண்பதே
கனவர்ஜ வேளைகண்டாய்
மரீசிசுத னெனவந்த காசிபகு லோத்துங்க
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாயனே. (௩௯)

இவர் இத்தீக்கோளாவரெனல்.

துரைமக்க ளைக்கண்டு தங்கள்கா ரியமெலாஞ்
சொல்லிச்செய் கின்றவேளை
சொல்லெலாம் பொய்யெனவு மிவர்சாட்சி மெய்யெனவுந்
தோன்றுவோ னவலமாகும்
திரமுற்ற கல்வியொடு குணமிகக கவிராஜர்
திரளான ராஜசபையில்
செய்யும்ப்ர சங்கத்தி லொருபழுது சொல்லுவோன்
சென்மத்தி லங்காரகன்
அருள்பெற்ற விதரணிக ளைக்காத்த னேககா
ளனுசரித் தியல்பாகவே
யவர்கொடுக் கும்போதி விடர்சொல்லி விலக்குவோ
னஷ்டமச் சனியனாகும்
மருவுற் றலர்ந்தவம் புயமணியு மார்பனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கையண வாளனே
வரதவேங் கடாயனே. (௪0)

இது இவ்வாறுயின் இச்சிறப்பிற்றுமெனல்.

தாணிமன் னவர்சபையின் மெய்க்கின்ற வரிசையே
    தனதுபட் டாபிஷேகஞ்
சபாசென்று மெச்சிக் கொடுக்குமதி காரமே
    சாம்பிராச்ய போகமாகும்
பரிவுட னினைத்தபடி காரியங் கூடிலது
    பதினென்றி னிற்குருவதாம்
பந்துஜன வர்க்கங்க ளுடனுணவு செய்கின்ற
    பாக்யமே கலியாணமாம்
அரிவைகுண ரஞ்சிதம தாய்வந்து சேருநா
    ளன்றமிர்த சித்தயோக
மன்பான பெரியோர்க டரிசனஞ் செய்வதே
    யானசுப தினமென்பர்காண்
மரகதம் பூவைமுகி னீலமணி வண்ணனே
    மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
    வரதவேங் கடாரயனே. (சுக)

மனிதர்களிலே துஷ்டரும் ராட்சசரும் பூதரும் இவரெனல்.

புண்ணியம் பாவமறி யார்மாத வஞ்செயார்
    புகல்கல்வி நெறியுமறியார்
புனிதரைப் போற்றார்கள் பாதிரவி யங்கொள்வார்
    புன்மைசேர் துஷ்டராவார்
எண்ணியொரு காரியஞ் செய்பவர்கள் வனுமையா
    லெவருக்கு மிடர்புரிகுவா
ரிரக்கமில் லார்பொய் யுரைப்பர்வஞ் சிப்பவர்க
    ளிவர்கள் ராட்சசர்களாவார்
நண்ணியெளி யோர்தமை வெருட்டுவார் வலியவரை
    நாடிவஞ் சனையிலவெல்வார்

நாரியர்க ளெவரையுங் கூடுவார் மிகவுண்பர்
நாணமறியார் பூதர்காண்
மண்ணிலொரு மூவடி யிரந்தநெடு மாயனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாயனே. (சஉ)

மூர்க்கர் முதலியோரியல்பு.

மெய்யான புத்திபல சொல்லினுந் தன்புத்தி
மேலாகி னேன்மூர்க்கனும்
மிக்கபெரி யோர்களைத் தாழ்வுசெய் தற்பர்தமை
மேன்மைசெய் வோன் மூடனும்
செய்யாத காரியம தெனினும் பிடித்தபிடி
செய்யுமவ னேதுஷ்டனுந்
திரளான நன்றிபல செய்தவர்க் கேயிடர்கள்
செய்பவன் மகாபாதகன்
ஐயா வெனப்பணிந் தாலுமே கோபம
டங்காத வன்குரூர
னனுதினந் தீமைபுரி வோனெந்த நாளினு
மடங்காத சண்டாளனும்
மையார் தடஞ்சோலை திகழ்கின்ற களமூரின்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாயனே. (சங)

இப்படிப்பட்டவன் இவ்வங்கவீன னவனெனல்.

காதவழி யானநதி மாதலந் தியாத
கயவனே யீனமுடவன்
கைதந்த வோலைவா சிக்கமாட் டாதவொரு
கசடனே மிக்ககுருடன்

தீதுபெறு தன்களவு கண்டவர்க் குத்தாஞ்
செப்பிலா தவனூமையாஞ்
செயலான தன்மகதை யொன்றெனினு மறியாத
செய்கையுடையோன் செவிடனும்
ஏதெனினு மொருபேர் விளங்காத தேகம
தெடுக்குமவ னேகுரூபி
யென்றெனினு முன்பாத தரிசனஞ் செய்யாத
வீனனை நீசனென்பார்
மாதுசத் தியபாமை தழுவுமணி மார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (சச)

உலோபியர் வகை.

நசைபெற்ற வேதவே தியர்தமக் குதவா
னவின்றலோ பர்க்குநேயன்
நாற்கவி மொழிந்தகவி ராசர்க்கு மொன்றேனு
நல்கிடான் கொஞ்சலோபி
இசைபெற்ற கீதமுறை செய்பாட கர்க்குமொன்
றீகிலான் பாதிலோபி
யியலான பட்டரா சர்க்குமொன் றுதவிலா
னேற்றமுக் காலுலோபி
திசைபெற்ற விகடகவி ராசர்க்கு முதவிலான்
றீயமுழு லோபிநடனஞ்
செய்மாத ரபிநயங் கண்டுமொன் றுதவிலான்
சேர்பரம லோபிகண்டாய்
வசைபெற்ற லோபமா தங்ககண் டீரவன்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (சரு)

## உலோபியர் வஞ்சப்புகழ்ச்சி

கண்டபகை யாளிமுன் னின்றுபொரு தாமற்
களத்திற் புறங்கொடுப்பார்
கன்னமிடு கள்வருக் காடையும் பணிகளுங்
காணவே கொடுப்பார்
சண்டமா ருதமென்ன வருகின்ற பகைவர்க
டமக்குமனை யுங்கொடுப்பார்
சவுக்கிட் டடிக்கின்ற மன்னர்க்கு வீட்டுத்
தனங்களெல் லாங்கொடுப்பார்
அண்டிவரு மெமதூதர் வந்துதான் கேட்குமுன்
னங்கமுறு முயிர்கொடுப்பா
ரவனிமிசை யிப்படி கொடுக்கின்ற பேர்கடமை
யதிலோப ரென்பதென்னோ
மண்டலமும் விண்டலமு முண்டகனி வாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (சகூ)

## உலோபியர்குண மாறுமை.

தேன்கொண்ட துளியொன்றி னுலேழு கடலெலாந்
தித்திக்கவே செய்யினுஞ்
செய்யபூ மலரினல் வச்சிரந் தன்னைச்
சிறககவே பொடிசெய்யினும்
கான்கொண்ட மலையெலாங் கைக்கொண்ட வெண்ணெயாற்
கவினுற்ப மெருகுசெயினுங்
கயவர்க்கு நீதியும் பேடிக்கு வீரமுங்
கபடர்க்கு மெய்ஞ்ஞானமும்
ஊன்கொண்ட மூடர்க் கிரக்கமுந் தெளிவுற
வுரைத்துநல மேசெய்யினு

மூமைசெவி டன்குருடன் முத்தமிழ் படிக்கினு
மூலோபருக் கிவ்வருமோ
வான்கொண்ட தேவர்பொழி மலர்கொண்ட
பாதனை மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடாயனை. (சஎ)

மக்களிற் பதராவா ரிவரேனல்.

கொண்டகா ..ன் வட்டியுட னன்றுபோற் குணமாய்க்
கொட்.. துமகி ழாதபதருங்
கூறுபிணை சாட்சிமுறி யுடன்மறித் தாலுங்
கொடாதொளிக இன்றபதரும்
கண்டவுட னொருகோடி சொல்லிப்பி னென்றெனுங்
கருதிச்சே யாதபதருங்
காணு விடத்தினிற் பழிகூறி யவரையெதிர்
கண்டுபுகழ் கின்றபதரும்
பண்டொருவர் செய்நன்றி தனையே மறந்துபின்
பழிசொல்லு கின்றபதரும
பாமாத ராசையால் வசைகொண்ட பதரும்
பறநதுமிக வஞ்சிதறவே
மண்டிவரு சண்டபா சண்டமா ருதமான
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடாயனை. (சஅ)

இக்குற்றமுடையோர்க்கும் இதுசெயல் வேண்டுமேனல்.

கதித்திடும் பகைவரென் றுனுமா பத்தினிற்
கண்டுதவி செய்யல்வேண்டுங்
கல்வியறி யாதசபை யெனினுமப்பா சங்கங்கள்
கவிராஜர் செய்யல்வேண்டும்

விதித்தமுழு மூடரென் றாலுந்த மைந்தற்கு
விதனைதகற் பித்தல்வேண்டும்
வெய்யசின மூர்க்கரென் றாலுநல் லோர்கண்டு
மேற்புத்தி சொல்லல் வேண்டும்
அதிர்ஷ்டமிலை யென்னினுஞ் சலியாமன் மிக்கதொழி
லதிலே முயற்சி வேண்டு
மசாத்தியம தானகன ரோகமென் றாலுமோ
ரவுஷதம தீவர்கண்டாய்
வதிஷ்டரொடு வான்மீக முனிதுதி சரித்ரனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (சுகூ)

இதினும் இது மிக்கதெனல்.

தினமுந் திரிந்துதனி யாகியே மிக்கபொரு
டேடியே வாழுமதிலுஞ்
செல்வரொடு தந்தைதாய் சுற்றமுங் கூடிச்
சிறந்துண்ட கூழதிகமாம்
தனதுமரி யாதையொடு பெருமையறி யாதபேர்
தனமாரி பொழியு மதிலுஞ்
சமமான பேன்மைதெரி கின்றபெரி யோர்தந்த
தாம்பூல மேயதிகமாம்
கனமருவு பலபல மகாவித்தை சிலசில
கருத்தொடு படிக்குமதிலுங்
கருணைபெற வொருவித்தை யாயினுங் குறைவறக்
கற்கின்ற தேயதிகமாம்
மனிதர்சில ரிவைபன்றி யவையதிக மென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (ருo)

## இதினுமிது வென்றியெனல்.

மிக்கதுடி கண்டுளம் வெருண்டகலை மானையே
வென்றுசய மாகுமதிலும்
வெஞ்சின மிகுந்துகவ ருப்புலி யுடன்பொருது
மெய்கொண்ட வடுவேசயம்
பக்குவமு திர்ந்தபே ரிளமாது கொங்கையிற்
பரிவுடன் சேருமதிலும்
பைம்பொன்மணி மாலைபுனை வாலாதி யூடலிற்
பாததா டனமேசயம்
தக்கதொரு கல்விநெறி யறியாத முழுமூடர்
சந்தோஷ மாகுமதிலுந்
தமிழருமை யறிகின்ற பெரியோர் பழித்தநிந்
தனையதே சயமென்பர்காண்
மைக்குவளை செங்குவளை வாசமலர் களமூரின்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடராயனே. (ருக)

## இதுவிதனை வசப்படுத்துமெனல்.

சிந்தைதெளி கல்வியே லோகவசி யம்பத்தி
செய்வதே தெய்வவசியஞ்
செய்புமரி யாதையே வித்வசன வசியமாஞ்
செல்வமுற வோர்கள் வசியம்
எந்தவித முநதிரள நல்குப்ப ணங்களே
யின்பவிலை மாதர்வசிய
மெப்பொழுது மவர்மன தறிந்துகட் டிக்காத்
திருப்பதே ராஜவசியம்
தந்ததண் டனைகளே துஷ்டஜன வசியமாந்
தானமே கீர்த்திவசியஞ்

சாந்தகுண நயமாய் நடந்திடு மொழுக்கமே
சகலசன வசியமாகும்
மந்திரமெ ழுத்தெட்டு மேயுனது வசியமா
வணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (ருஉ)

இச்செய்கையோர் இச்சிறப்புப்பெயர் கொள்வரேனல்.

சரணென் றடைந்தவர் தமக்குவரு வினையெலாந்
தாங்குவோன் புருஷனரு
தன்னுடைய செய்கைபோ லெவரையும் பார்க்கின்ற
தகைமையோன் றெய்வபுருஷன்
திரணமெனி னும்பிறர் பொருட்காசை யில்லாத
செய்கையோன் புருஷோத்தமன்
றீராத வினைவரினு மற்பரைப் பணியாத
தீரனே புருஷசிங்கம்
பொருவிலாத் தந்தைதா யென்னினுங் கண்டபடி
புகலுவோன் புருஷாத்நம்
போற்றுமவர் மனதிற் குறிப்பறிந் துதவுவோன்
புருஷநா யகமென்பர்காண்
மாபெலா மிப்படி புகழ்ந்தகுண சேகரன்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாரயனே. (ருங)

இச்செய்கையோர் இவ்விழிபெயர் பெறுவரேனல்.

சற்றெனினு மொருகல்வி யறியாத கயவனே
தாங்குமுயிர் கொண்டமாயாந்
தன்புத்தி யன்றிபிறர் புத்தியால் வினைசெயுந்
தகைமையோ னைபதுமையாம்

கொற்றவர்கள் பகையாற் றுரத்துண்டு திரிகுவோன்
கூகையுற வானபக்ஷி
கோபமது தந்தையே யன்றிமற் றோரையுங்
கோபிக்கு மவன்மிருகமாம்
கற்றபெரி யோரையெதிர் பணியாத மூடனே
கைகால் முளைத்தசிலையாம்
கண்டவர்க ளெல்லாம் பழிக்கின்ற கோளனே
கனதுஷ்ட ஜெந்துவென்பார்
மற்றிவர்க ளேயமது கனவிலுங் காணாத
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (ருச)

கல்விப் பொருட்சிறப்பு.

தெள்ளமுத மனையகல் விப்பொருள் படைத்திடிற்
றேசமெல் லாந்துதிக்குஞ்
செயத்தம்ப மானபுகழ் நிலைநிற்கு மிவையெலாஞ்
செம்பொன்மிகு செல்வமதுபோல்
வெள்ளமது கொளுமெனும் பயமில்லை கனலினால்
வெம்பவரு சலனமில்லை
வேந்தர்கள் பறிதிடக் கூடாது சோதரர்
விரும்பினும் பங்குறாது
கள்ளரா றிருடவும் முடியாது வரவரக்
கனமலாற் குறைவுறாது
கருணைஞா னந்தழையு மாகையா லுனையிதய
கமலத்தில் வைப்பதெளிதாம்
வள்ளலென வருகின்ற மாடபூ சியரதிபன்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (ருரு)

## கவிதைச்சிறப்பு.

உரைகொண்டு சொல்வரிசை சேர்ந்துபொரு ளின்பவகை
யோசைபெற் றேமதுரமா
யுற்றநவ ரசமுடன் கற்பனை யலங்கார
முண்டாகி யேகவுடமாய்
நிரைகொண்ட சீர்தளை விகற்பம் பொருந்திநன்
னீதியாய்க் கடைதுடிப்பாய்
நிறைகின்ற சபைதனி லுதாரணம தாகிநிலை
நின்றுபழு தென்றிடாமல்
இரைகொண்ட தண்கடலில் வருமமுத பாகமாய்த்
தேசப்ர சித்திபாகச்
செப்புமொரு கவிகொண்டு குலமெலாம் வந்தடிமை
செயினுமது நிகராதுகாண்
வரைகொண்டு பொழியுமழை காத்தருளு மையனை
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடராயனே. (ருக)

## தந்தீவினைப்பயன்.

திங்களுத யங்கண்டு மலரா திருப்பது
செழுங்கமல முற்றவினையே
தினகரனை யெதிர்கண்டு முகைகொண்டு வாடுவது
சேதாம்பல் செய்தவினையே
கொங்குலவு சண்பக சுகந்தமலர் கண்டுமருள்
கொண்டது சுரும்பின்வினையே
கொண்டன்மழை கண்டுள மெலிந்திட வருந்துவது
கோகிலஞ் செய்தவினையே
அங்கணுல கெங்கணு மகிழ்ந்தபெரி யோர்களுக்
கருளா திருந்துவிடினு

மவர்மீது குற்றமது சொல்வரோ சேர்ந்தவ
ரதிஷ்டமென் பார்கள்கண்டாய்
வங்கியந் தருமிசை கனிந்தகனி வாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாயனே. (௫எ)

அரசர் கவிவாணர்க்குச் செய்யு முபசாரம்.

போசனஞ் சந்தமலர் மாலைதாம் பூலம்
பொருந்துவஸ் திரபூஷணம்
புரவியொடு கவிகையுஞ் சிவிகைகரி வாத்தியம்
பூமிமனை தனதானியம்
தூசுலவு துவசமெனும் வெகுமான சோடசந்
தூதரால் வரவழைத்தல்
தோன்றுமுன் னெழுதல்வந் தருள்கெனத் தழுவுத
றுதித்திட விருக்கையுதவல்
நேசவெகு மானங்கள் செய்தெழுதல் வழிவிடு
னிறையங்கி காரமேழாம்
நெறிகொண்ட புவிராசர் கவிராசர் பாற்செய்யு
நீதிமுறை யென்பர்கண்டாய்
வாசவன் பெறுவிசய சூதனென நாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாயனே. (௫அ)

புல்லர் நல்லோர்குண மறியாரெனல்.

சந்தன வனந்தனி லிருந்துமதன் மணமதைச்
சற்றுமறி யார்கிராதர்
தாளங் குளிக்குமவ ரதன்மாலை யணியார்கள்
சங்குமணி தன்னையணிவார்

கந்தமலி தாமரை யடுத்துமண் டூகங்
கருஞ்சேறு தனையருந்துங்
காமருவு தேமாவின் மிசையிருந் தாலுமோ
காகமது வேம்புநுகரும்
அந்தவகை போலநல் லோர்தமை யடுத்தே
யனேகநாட் பழகிவிடினு
மற்பர்தா மறிகின்ற தறிவதல் லாமன்மற்
றவர்மகிமை யறிவார்களோ
வந்திடு கணந்தன்னி லவர்பெருமை யறிகின்ற
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (ருகூ)

புல்லரைப்பாடும் புலவர் பயன் பெறாமை.

நாவினிற் சொல்லுநய முங்கண்டு வஞ்சகரை
நட்பென்று வருநேயரும்
நவமதன னென்னவெழில் கண்டுபே டன்றன்னை
நாடிவரு மடமாதரும்
காவினி லுயர்ச்சியும் பசுமையுங் கண்டிலவு
காத்திருக் கின்றகிளியுங்
கானலைக் கண்டுபுன லென்னவே யாசையொடு
கருதியே யேகுமானும்
பூவினிற் பொலிவுமண முங்கண்டு கேதகை
பொருந்துதே னுடுமளியும்
புல்லர்தஞ் செல்வங்கள் கண்டுதுதி செய்திடும்
புலவர்செய லொக்குமென்பார்
மாவினிற் குயில்வேளை வாவெனுங் களமூரின்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (சுo)

## மேலோர்செயல் கீழோர்க்காகாமை.

எந்தவினை செய்தாலு முனிவோர்கண் மாவத
 மிசைந்ததாற் பெருமைபெறுவா
ரிகழ்ந்துவசை சொல்லினுங் கவிராசர் வித்தையா
 லென்றுமிகு மேன்மைபெறுவார்
சிந்தைமத மாயொன்று வழுவினுந் துரைகள்செந்
 திருவினாற் புகழ்சிறப்பார்
சீரியர்க ளெப்படி புரிந்தாலு மேற்குமது
 சிறுமையோர் செய்யவசமோ
தந்தியது நெறிதப்பி யேநடந் தாலுமது
 தன்னைமத யானையென்பார்
தானுமப் படிதவறு செய்யிலோ பேயென்று
 தள்ளிமுனி வார்கள்கண்டாய்
மந்திசெறி யிடபகிரி தன்னிலுறை வாசனே
 மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
 வாதவேங் கடராயனே. (சுக)

## இது இல்லையாயின் இது விளங்காதெனல்.

சந்திர னிலாவிரவு மதுரமில் லாதகவி
 தனையறில் லாதசெல்வஞ்
சற்சன ரிலாதவூர் புரவியில் லாதபடை
 தளபதி யிலாதசேனை
பைந்தொடி யிலாதமனை பாடலில் லாவோசை
 பத்தியில் லாதபூசை
பார்த்திப ரிலாதபட் டணம்யூக மந்திரிகள்
 பற்பல ரிலாதவரசு
கந்தமில் லாதமலர் சத்தியமி லாதவாய்
 கல்வியில் லாததேகங்

கனவினைய மில்லா நியோகிகுசி யில்லாத
கன்மமுப தேசமில்லா
மந்த்ரமிவை வித்வசன மில்லாத சபையென்பர்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (சு௨)

சங்கீதச் சிறப்பு.

புருவநெறி யாமன்மணி யெயிறுதான் ருமல்விழி
புரளாம லங்கசேட்டை
புரியாமன் மிகுதலையை யசையாமன் மிடறுதான்
பொருமிவிம் மாமலியல்பாய்ச்
சுருதிலயை சுரஞான நீதியொடு வீணையின்
றொனியினு தப்பிரமமாய்த்
துய்யதந் திரியோசை மிடறோசை யெனவேறு
தோன்றாம லின்பநயமாய்த்
தருமதுர வமுதரச மொழுகுசா ளிகள்பழகு
சங்கீத வித்தையென்றல
சகலர்க்கு மானந்த மாகுமது பாடுமவள்
சரசகுண வஞ்சியெனிலோ
மருவியிதழ் பருகியணை யாமலுயி ருய்யுமோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (சுங)

பரதச் சிறப்பு.

பாதாள முஞ்சுதி யடங்கமிகு தொனிசெயும்
பண்புபெறு வோன்மத்தளி
பலராக கீதமொடு தாளங்கொள் கனவிதம்
பாடுவோ னேபாடகன்

காதாள மேன்மனமு நடனபா தத்தின்மேற்
கண்ணுமுடை யோனட்டுவன்
கையின்மேல் விழியுமங் கைவிழியி னபினயங்
காட்டுமவ ளேபாத்திரம்
சூதாள லயமார்க்க மாகுமிங் கிதபதஞ்
சொல்லுமவ ரேபரிசனந்
துதிபெற்ற நடனபா சங்கமதில் வேறுதொனி
தொனியாத சபைசேசபை
வாதாள முடனாவி னடனமிடு பாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாரயனே. (கூச)

நாடகச் சிறப்பு.

சுகந்தபரி மளவஸ்த்ர பூஷணா லங்கிருத
சோடுமுல் தீபுவேண்டுந்
தோகையர்க ளுமபரி சனங்களுங் கூடியே
சொற்படி நடத்தல்வேண்டும்
மிருந்தால் தாளிக் கரும்புதேன் முதலான
மேன்மைபோ லின்பரசமாம்
வேஷங்க ளந்தமுஞ் சாதியும் பாஷையும்
வெவ்வே றிருததல்வேண்டும்
புகழ்ந்தபத மிங்கிதம் பரிகாச விகடங்கள்
புண்ணிய கதாப்ரசங்கம்
போற்றுபா வாணர்மிகு ராகதா ளஞ்சுருதி
புகல்கின்ற பரதநடனம்
மகிழ்நதிடுஞ் சபைதேவர் சபையென்று சொல்வர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாரயனே. (கூரு)

## விஞ்ஞதவித்தைச் சிறப்பு.

சத்திகண பதிதுர்க்கை சரஸ்வதி மகாகாளி
சாமுண்டி யென்றுவாழ்த்திச்
சங்கமொடு ஜபகண்டி டக்கைகைத் தாளங்கள்
சத்தமொடு மிகமுழங்கச்
சித்ரமிகு மாத்திரைக் கோலின்முறை யங்கமுறை
செப்புமுறை பத்துமுறைகள்
செய்யுமுறை யறுபத்து நாலுகஜ காணங்கள்
சேர்ந்தகோ காணமார்க்கம்
வித்தைபுரி ஸ்தம்பனம் தாதியா மஷ்டாங்க
விதமாம யேந்த்ரசாலம்
மிகுமிந்த்ர சாலமுத லானசெப் பிடுவித்தை
மேன்மையவர் தந்த்ரநீதி
மத்தகச ராசமதே வேந்த்ரனுந் தெரிவனே
மணவான நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (சுசு)

## பௌராணிகர் முதலியோர் சிறப்பு.

ஆருக்கு மானந்த மாகவே பொருள்சொல்லு
மவனே புராணநிபுண
னங்கமொடு கிரகநிலை கணிதமுந் தெரிகுவோ
னருள்புரோ கிதபூசுரன்
சீருற்ற சபையெலா மெச்சப்ர சங்கமுறை
செப்புமவ னேவித்துவான்
செய்யுமந் திரயந்த்ர தந்த்ரமொடு மிக்கசுப
சீலனே மந்த்ரவாதி
ஏருற்ற கல்விகுண மேன்மைபொறை போதங்க
ளிசையுமவ னாசாரிய

னென்றுமவர் சொற்படி நடந்துபய பத்தியொ
டிருக்குமவ னேசீடனு
மாருக்கு வேதாந்த வாசனை நேசனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வாதவேங் கடாரயனே. (சுஎ)

மருத்துவனியல்பு.

திரமான சாஸ்திர முணர்ந்தொரு சிகிச்சையது
செய்திட வழைத்தபின் போய்த்
தேசகா லஞ்சாதி தேகங் குணம்பிணி
சிறக்குமா றுந்தெளிந்து
காமான நாடிமுத லெட்டுப் பரிட்சையுங்
கண்டுகலி கங்கியாழுங்
கனகுளிகை பஸ்பமொடு சிந்தூரஞ் சூரணங்
கருதுலே கியதயிலமாம்
பரமான நன்மருந் துங்கொடுத் துசிதமாய்ப்
பத்தியமு மெளிதாகவே
பரிவுபெறு மாரோக்கி யஞ்செய்து திரளாசை
பகராத பண்டிதனெனின்
வரமான தன்வந் திரிக்குநிகர் சொல்வர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (சுஅ)

ஈனர் மருத்துவனுக்குச் செய்யுமுறைமை.

சேர்க்கின்ற கனரோக முற்றால் வயித்தியன்
றெய்வமாங் கேட்டதெல்லாந்
திரள்கொடுப் போமென்பர் தீருமிப் பிணியென்று
செப்பினு லன்றுகுருவாம்

பார்க்கின்ற குளிகையது தந்தபின் தந்தையாம்
பாதிலகு வானைபின்பு
பண்பான துணைவனு ரோக்கியஞ் செய்தபின்
பகர்கின்ற மைத்துனனுமாம்
ஏர்க்கின்ற மற்றைநா ணையன்மறு நாளினி
லிசைந்தகட னளிமறுநா
ளெதிர்வரிற் பகையாளி யாகுமிப் படியெண்ணு
மீனர்சில ருண்டுகண்டாய்
வார்க்கின்ற தானமொடு வளர்கின்ற வள்ளலே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (சுசு)

ஆராயாதுசெய்யு மேழுவரடையுங் கதி.

நீதிவழு வாவகை வழக்குரைப் போர்களு
நிறைந்ததீ வினைகளெல்லா
நீங்குபரி காரமுறை செய்குவோ ரும்பிணி
நிறுத்தவரு பண்டிதர்களும்
சோதிடஞ் சொல்லும்பு ரோகிதரு மூலகந்
துதித்தசெங் கோல்வேந்தருந்
தூயவுப தேசதே சிகருமவர் சீஷருஞ்
சொல்லுமிவ ரேழுபேரும்
ஆதிமறை நூலினுரை செய்தவித மாராய்ந்
தறிந்துதெளி யாதுசெயிலோ
வடைக்கலப் பொருளைக் கவர்ந்திடும் பேரினு
மகோரநர கடைவர்கண்டாய்
மாதிர நெடுங்கடல் வளர்ந்தநெடு மாயனே
மணவான நாராயணன
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (எ0)

## நித்தியகருமச் சிறப்பு.

கருணைநதி மூழ்கியே சந்திவந் தனமுடன்
கருதுஜப தபவோமமுங்
கடவுளோர் பூசையுஞ் செய்துவே தாகமக்
கல்வியது முறைபடித்துத்
தருமத் தியானநற் கருமமா நீதியொடு
தந்தைதாய் புத்திரருடன்
றுணைவு செய்தார மாயணம் போற்றியே
சந்தியொடு கருமநண்ணி
பரிவுடன் நின்றிருக் கோயில்வல மாகிப்
பணிந்துபத சேவைசெய்து
பண்பான சந்த்ரோ தயத்தின்மல ரணைமீது
பாரியுட னேமகிழ்ந்து
மருவியே வாழுமில் வாழ்க்கையே வாழ்வுகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (எக)

## குடிவாழ்க்கைச் சிறப்பு.

மிக்கதெய் வத்தலமு ஞானகுரு பீடமும்
விளங்குமா நதியுமறையோர்
மேவிய கிராமமும பூமிநல முந்தனமு
மேலரசு முடையநாட்டில்
முக்கனி தருஞ்சோலை நீர்வளங் குடிவள
முயங்குபயிர் வளமுமுளதாய்
மொழிந்தநாற் குலமுஞ் செழிப்பதாய்த் தேர்வீதி
முதலாய் விளங்குமூரில்
தக்கதொரு வீதியொரு பானடுவி சாலமாய்ச்
சார்ந்தசிங் காரமனையிற்

றனதானி யங்கறவை முதலான செல்வந்
தழைத்தன்ன தானமுதவி
மக்கண் மருமக்களொடு வாழ்வதே வாழ்வுகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாரயனே. (எஉ)

மருத்துவர் செல்லத்தகாவிடங்கள்.

தீராத ரோகமுடை யோரிடமு முண்மையது
செப்பாத பொய்யரிடமுஞ்
சீரான வொருவர்பண் டிதமன்றி வெகுவிதஞ்
செய்துகொள் வோர்களிடமும்
ஏராத கோபமுறு மூர்க்கமன் னவரிடமு
மேந்திழையை மனதுபிரியா
வின்பமா மதிவிரக மானகா முகரிடமு
மெப்படி நலஞ்செய்யினும்
தாராத லோபரிட மும்பத்தி யந்தனைத்
தாழ்வுசெய் வோர்களிடமுஞ்
சகலசன கண்டக ரெனுந்துஷ்ட ரிடமுமிகு
தனமாரி யேபொழியினும்
வாரா திருப்பதே பண்டிதர்க ணீதிகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாரயனே. (எங)

நோய்க்கிடங்கொடார் செய்கை.

சனிபுதன் றனிலெண்ணெய் வெந்நீரின் மூழ்குவார்
சாருமிள வெயில்விரும்பார்
தம்வயதின் மேலான மங்கையைச் சேரார்
சதாகாலம் வழியினடவார்

பனியிலுங் காற்றிலும் மெய்வருந் தார்மடைப்
பள்ளியிற் சேகவமிரார்
பழங்கறி யருந்தா ரிரண்டடக் காரொன்று
பலகால மும்விட்டிடார்
கனியொடு கிழங்குகள் மிகுந்துபுசி யார்பசி
கலந்தன்றி யுணவுசெய்யார்
காய்ச்சுபா லுண்பர்நீர் மோர்கூட்டு வார்தினங்
காவேரி தனின்மூழ்குவார்
மனிதரிவர் பேர்சொன்ன பேர்க்குநோய் சேருமோ
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (எச)

தந்தைமுதலியோராவார் இவரெனல்.

நிலமுடன் கிருகமுஞ் செல்வமுந் தந்துகட
னிலுவையொன் றில்லாமலே
நிறைகல்வி யுரைசெய்து நெறியொடு வளர்க்கின்ற
நேசனே யுயர்தந்தையாம்
கலைமதிய மெனவே வளர்ந்தபின் செல்வங்கள்
கண்டுமிக மனமகிழ்ந்து
கருதரிய புத்திரன் போலமரு மகளையுங்
கருணைசெய் பவளன்னையாம்
பலகலை புணர்ந்துமிகு செல்வமுந் தேடிப்
பகிர்ந்துதன் பேர்விளங்கப்
பண்பான தந்தைதாய்க் குதவியே யவர்சொன்ன
படிசெய்கு வோன்புத்திரனாம்
மலர்பொழி செழுஞ்சோலை மலைவளரு மாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (எரு)

### நற்புதல்வனியல்பு.

அரிதான மாதவஞ் செய்கின்ற முனிவோ
ரடைந்திடுவ ரந்தணைப்போ
லடுத்தவர் தமைக்காத்து மிக்கவே வலர்தமை
யடக்குமுன் சக்கரம்போல்
பெரியோ ரிருக்கின்ற சபையினிற் கவிராஜர்
பேசுப்ர சங்கமதுபோல்
பேருலக மெய்க்கவரு மனுநீதி முடிவேந்தர்
பெறுகின்ற மாகீர்த்திபோல்
ஒருகோடி நட்சத்தி ரங்களுட னுடுவே
யுதித்தசந் த்ரோதயம்போ
லுபயகுல சுத்தனும் பகிரதன் போலவே
யொருபிள்ளை போதுமவனால்
யாபெலா நன்மையே யடையுமென் பார்கள்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாரயனே. (எசு)

### சகோதரரோருமை.

தனதுபட் டந்தனைத் தம்பியர்க் கீயெனத்
தந்துமகி ழுந்தமையனுந்
தமையனார் வருமளவு மாவிரத மாகவே
தபசுபுரி யுந்தம்பியும்
கனதனப் பாலீந்த தாய்தனைப் போலவே
கருணைசெய் திடுமதனியுங்
காணுமுன் றந்தைபோற் றிருவடிகள் பணியுங்
கனிட்டனுடை மனையாட்டியும்
தினந்தினம் பரிவாகி யம்மையேயென்றுபேர்
செப்புங் கொழுந்தனாருஞ்

சேர்ந்துவாழ் கின்றபேர் திரேதாயு கந்தனிற்
றெசரத குமாரர்கண்டாய்
வனசமலர் கமழ்கின்ற வாவிசூழ் களமூரின்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (எஎ)

வேட்டகத்தியல்பு.

காரிகை தனைத்தந்த மாமனார் மனைதனிற்
கருணைமரு மகன்வந்திடிற்
கண்டவுட னுசார'வுபசார மாகவே
கனவிருந் துகள்சமைப்பார்
சேருநாண் மூன்றாகி லபாபட் சத்திற்
செனித்தசந் த்ரோதயம்போற்
றினந்தினம் பெருமைகுறை யுங்காரி யங்களுஞ்
செய்யென்ப ரத்தைமுதலோர்
ஆருமெண் ணார்கண்மைத் துணர்சரச பரிகாச
மதிகமா மனைவியெனிலோ
வன்புடன் சொன்னபடி கேளாளி தாகையா
லாதியொரு கதையல்லவோ
வாருமென் றவமர்க வசனமுஞ் சொல்வர்கண்
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (எஅ)

மானங்கெட்டுப் பிழைப்பவ ரிவரெனல்.

நேசமுறு சிறுமிதன துறவினன் மருகன்மனை
நிலையென்று வாழ்ந்தபேரும்
நேரிழை தனைத்தந்த மாமனார் மனைதன்னி
னீங்கா திருந்தபேரும்

பேசரிய கல்விதெரி யாமூடர் பேரிற்பா
    பந்தகவி சொன்னபேரும்
  பெருமைபோய்க் கள்ளக் கடன்களை யட்டுப்
    பிழைத்துயிர் சுமந்தபேரும்
ஏசவரு பகையாளர் தங்கண்முன் கைகட்டி
    யேவல்செய் கின்றபேரு
  மீனமது பார்ப்பரோ வயிறுசா ணன்றிவர்க்
    கெண்சாணும் வயிறுகண்டாய்
வாசமலர் மங்கைகுடி கொண்டுவளர் களமூரின்
    மணவாள நாராயணன்
  மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
    வரதவேங் கடராயனே. (எக)

கற்புடைப் பெண்டீரியல்பு.

ஓதுஜப பூசைகட் கினியகுற் றேவல்க
    ளுகந்துசெய் போதுகுருவா
  முறைகொண்ட சாசஞ்செய் போதுமன் மதனு
    மொழிநதவே ளாதெய்வமாம்
நாதனைக் கருதியவ னுண்டகுறை யமுதாக
    நவில்வதே யுபதேசமாம்
  நதியாடல் பலநோன்பு தேவதா தரிசன
    நயந்தபல விரதமுமவன்
பாததரி சனமாக்கொள் சுத்தியாய்ப் புத்தியாய்ப்
    பத்தியாய்க் கடலினுழும்
  பாரென்று கனவினுறை செய்கினுஞ் செய்கின்ற
    பதிவிரத மார்க்கமான
மாதர்புகழ் நீதியே துதிபெற்ற தல்லவோ
    மணவாள நாராயணன்
  மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
    வரதவேங் கடராயனே. (அ0)

நற்பெண்டீரியல்பு.

பஞ்சணையி னருகாக நின்றுவா வென்றபின்
 பரிவினுட னருகில்வந்து
 பாக்கிலை மடித்தசுரு ளீந்துமெத் தையில்வந்து
 பரிமள மிகத்திமிர்ந்து
கொஞ்சிமலர் சூடியிசை பாடிவிளை யாடியே
 கொக்கோக விதமறிந்து
 கூடியித ழிருவோரு முறைபருகி யினியபுட்
 குரலோசை மிகமுழங்க
நெஞ்சமகிழ் வொடுசுரத காணகரி காவுபரி
 நேயாதி கேளிதன்னால்
 நிறையமிர்த போகசம் போகவை போகமுட
 னீங்காத மோகமுதவும்
வஞ்சியின லாதுமனம் வேறொன்றின் மகிழுமோ
 மணவாள நாராயணன்
 மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
 வரதவேங் கடராயனே. (அக)

தீப்பெண்டீரியல்பு.

ஐயருக் கமுதுபடை யென்றுவந் தாய்நீயு
 மாண்பிள்ளை யென்றெண்ணவோ
 வரிசியெங் கேபானை சட்டியெங் கேயென்ப
 ளவன்சொன்ன வகைகளெல்லாம்
பையவே கொண்டுவந் தாலுஞ் சமைக்கப்
 படாதுதலை நோகுதென்று
 பாயிற் கிடப்பள்சின மாயொன்று பேசினால்
 பாருனக் கேற்றபுத்தி
செய்பவல் லேனென்பள் சற்றடித் தானஞ்சு
 தின்கிறேன் கூகூவெனத்

தெருவீடு தோறுமுறை யிடுபெண்டி ருண்டெனிற்
 றீயநமன் வேறுமுண்டோ
வையகம் புகழ்சோலை மலையலங் காரனே
 மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
 வாதவேங் கடாரயனே. (அஉ)

பரத்தையரியல்பு.

நொச்சியுறு மஞ்சள்வங் காளமுறு பச்சையிலை
 கூறுசண் பகமொட்டுடன்
கூடிய நலங்குமஞ் சனமாடி பொற்கண்டை
 கொண்டவெண் டுகிலுடுத்துக்
கச்சிளங் கொங்கைமேற் கந்தபரி மளகளப
 கஸ்தூரி குமுகுமென்னக்
கனகநவ ரத்நமய பூஷணம் பூண்டுகிளி
 கையின்மிசை யேந்திநலமாய்ப்
பச்சைமயில் போலிரதி வேளைக்கு மிகுசரச
 பரிகாச நகைபுரிந்து
பண்பான மேடையுப் பரிகையி லிருக்கும்
 பரத்தையுண் டாவளென்றால்
வச்சிரா னுலகத்த ரம்பையினு மதிகமா
 மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
 வாதவேங் கடாரயனே. (அங)

பிரௌடை வேசையரியல்பு.

ஆசையுட னொருவிரக புருஷன்வந் தான்மிகவு
 மாசார வுபசாரமா
யாசனந் தனிலெழுந் தருளுமென் றருகிருந்
 தழகான வொருகட்டிலை

நேசமொடு தாம்பூல முதவியே யவனுடைய
நெறிகண்டு வரவழைத்து
நீதியா யந்தநாள் வந்தநீர் பின்னை
நினைத்திலீ ரென்கொலென்று
பேசரிய சங்கீத சரசசல் லாபப்ர
சங்கமொடு ரதிகேளியில்
பிரியமுட னேயணைந் தின்பமா யுசிதம்
பெறிற்ப்ரௌடை வேசையென்பார்
வாசமிகு பைந்துளப மாலையணி மார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௮௪)

### பரத்தையரிழிவு.

விலைமாதர் வீடுசவு ளிக்கடை படுக்கையது
மேவுமனை பொதுவம்பலம்
மெத்தையது சந்தியிற் பாறையவ ரங்கமோ
மேவிய படித்துறையதாம்
கலைமருவு மவரல்கு லோடமா மிருகொங்கை
கடையிலெலு மிச்சம்பழங்
கனிவாய் படிக்கமிரு துடைகடண் ணீர்ப்பந்தல்
கட்டுகத லிக்கம்பமாம்
முலைமாபு வாடைக் குதிரையிடை யேணியவர்
மோகமெனி லெட்டிக்கனி
மொழிமுயற் கொம்புசே ரின்புவெந் நீராமை
முறைமையிவை கண்டிருந்தும்
மலைவுபெறு வார்கள்ரச வாதிக்கு நேயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (௮௫)

சரீரநிலையாமை.

ஆகாய மீதினி லெறிந்தசிலை காற்றினை
யடைத்துவைத் திடுதுருதி
யனலிட்ட மெழுகுவெயி லிடையிட்ட வெண்ணெய்சுழி
யாற்றிடை யெழுந்தகுமிழி
மோகா விகாரமொடு வருகின்ற மின்னல்விழி
மூடுதுயில் கண்டகனவு
மோதிவரு காற்றினிற் றீவிழுந் திடுபஞ்சு
மூச்சோடு கின்றபதுமை
மீகாம னில்லாத கப்பல்கண் ணிமைபோல்
விளங்கவரு தேகமிதனை
மெய்யென்று மெய்யெலாம் பொய்யென்று திரிகின்ற
விழலனை யாளநினைவாய்
மாகாள முகிலனைய மெய்யனே துய்யனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடராயனே. (அசு)

நல்வினைசெய்வோர் பேறு.

ஓதுமா தாபிதா குருதெய்வ விசுவாச
முடனதிதி பூசைசெய்வோ
ருற்றபர தாரசோ தரமாகு வோரகித
மொருவர்க்கு மெண்ணிலாதோர்
பூததய வுள்ளோர் சகாயமே புரிகுவோர்
பொய்யிலா வாய்மையுடையோர்
பூர்வமாந் தருமபரி பாலனம் பண்ணுவோர்
பூஞ்சோலை நந்தனவனம்
பாதையிடை மண்டபங் கூபந் தடாகநீர்ப்
பந்தர்முத லாய்ப்புரிகுவோர்

பண்பா யிவர்க்குமலை போல்வந்த வினையெலாம்
பனிபோல நீங்கிநலமாய்
மாதவ முகுந்தவுன் பாதமே பெறுவர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (அஎ)

மாதர் அவயவமயக்கு.

சிக்குமிக வேநாறு கின்றகுழன் முகிலென்பர்
திரளுதத்தை மாறுதவாய்
செம்பவள மென்பர்சளி கொண்டுநீர் மாறுத
சிறுநாசி குமிழதென்பர்
பக்குவம தன்றிவிழு கின்றமுலை யானதோற்
பையைமக மேருவென்பர்
பாராத நரகத் துவாரமாங் குழிதனைப்
பகரின்ப வாரியென்பர்
மிக்குவரு ரத்தமுஞ் சீயுமென் பும்போர்த்த
மேனிமலர் மாலையென்பர்
மீளாத நரகந் தருஞ்சிறிய வின்பமதை
மேலின்ப வீடென்பரிம்
மைக்கருங் கடலிலெனை வீழாம லாளுவாய்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (அஅ)

நிதியின் பெருமை.

வித்தையே செய்திடுங் குருபீட மொன்னலரை
வென்றுவரு கின்றதளவாய்
மித்திரர்கள் பகைவரா மேவலர்க ணேயரா
விந்தைபுரி தானுபதி

புத்திநல மேசொல்லு மதிமந்திரி யாவரும்
புகழ்கின்ற வசியகுளிகை
புளகமுலை மாதருக் கதிரூப வின்பம்
பொருந்தவரு காமதேனு
நித்தலும் பெருமையே செயுமரசு தான்மொழியு
நிலைசெயத் தக்கக்ஷாத்ரம்
நேர்ந்தமிடி யென்கின்ற மாதங்க கேசரி
நினைத்தவெல் லாங்கொணர்ந்தே
வைத்திடுங் குலதெய்வ நீயன்றி வேறேது
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வாதவேங் கடராயனே. (அக)

உயர்ந்தபொரு ளிருக்குமிடத்து இழிந்தபொருளு
மிருக்குமெனல்.

சோகனக மலர்மலர்ந் தூறுகின்ற வாவியிற்
கொட்டியு மலர்ந்திருக்குங்
கோகிலந் தொனிசெயுந் தேமாவனந்தனிற்
கூறுவாய்ப் பக்ஷியுறையும்
ஏகமென வுலகம் புரந்தமன் னவர்சபையி
லீனமன் னருமேவுவா
ரிலகுமா ணிக்கங்கள் விற்கின்ற கடைவீதி
யிற்பாலை மணியும்விற்பார்
பாகனைய மதுரரச லளிதப்ர பந்தகவி
பாடுமன் னவர்கள்சபையில்
பழங்காடி தனிலும் புளித்தபுன் கவிசொலும்
பாவலரு முண்டுகண்டாய்
மாகனக முறையுமொரு மணியணியு மார்பனே
மணவாள நாராயணன்

மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (கூ0)

## சேர்ந்தவினத்தின் குணம் பெறுவோர் பெறுதோ ரிவரேனல்.

சோதிநவ ரத்நமணி மாலையிடை நூலுந்
துலங்குமணி யாய்விளங்குஞ்
சுவைப்பழந் தன்னுடன் சேர்ந்தசெம் பொன்னுந்
துரும்புபோ லேமிதக்கும்
வீதிபெறு குப்பையி லிருந்தாலு மாணிக்க
மெய்ம்மழுங் காதொளிவிடும்
மிகவுஞ் செழுந்தேன் சொரிந்தே வளர்க்கினும்
வெள்ளுள்ளி நாற்றமாறு
தாதலாற் சேர்ந்திடு மினங்களைப் போலவே
யவனியி லிருப்பர்சிலபே
ரார்சொல்லி னுந்தங்கள் சுயகுணம் விடாமலே
யமைவுற்று வாழ்வர்சிலபேர்
மாதர்துகில் கொண்டொரு குருந்தேறு மாயனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (கூக)

## வல்லோர்க்கும் புல்லோரால் தாழ்வு வருமெனல்.

பாராசர் வச்ரமகு டந்தகர்த் திடுகத்தி
பஞ்சுமெத் தைக்குநாணும்
பணிராசர் மணிமுடிகள் சிதறநட மிடுதோகை
பச்சோந்தி யானடுங்கும்
காராச மார்த்தாண்ட சந்த்ரகிர ணங்களொரு
கட்செவியி னுன்மறைபடுங்

கனைதைபுரி விகடதட மத்தமா தங்கமொரு
கனல்சிறிது கண்டுபயமாம்
சுராசு கங்காப்ர வாகநிக ரூற்றுமொரு
துய்பசிலை யான்மறிபடுஞ்
சொல்கின்ற பெரியோர்க ளென்றாலு மற்பராற்
றோல்விகொடு முறிவர்கண்டாய்
வாராச தசரத மகாராச புத்ரனை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடாராயனே. (கூஉ)

நல்லோர்புகழ் நிலைபேறு.

விசயன்மனு வுடனிட்சு வாகுகுச நாபன்
விகுட்சிரகு காகுஸ்தனும்
மிகுமம்ப ரீஷன்மாந் தாதன்முசு குந்தன்
விசாலனை திரணபிந்து
சசிபிந்து வொடுதிலீ பன்னரிச் சந்திரன்
சர்வதா மன்பரதனை
சந்தனு நளன்சத்ய விரதன்ப கீரதன்
சகரனொடு தானகர்னன்
தெசரதன் மருத்துப் புரூரவன் சென்னியே
திரிசங்கு வுடன்யயாதி
சித்ரசே னன்வீர சேனன்ருது பனனிந்த்ர
சேனன்விது ரன்பாண்டவர்
வசுதேவ னாதியோர் புகழன்றி நின்றதிலை
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடாராயனே. (கூ௩)

தீயோர் பழிநிலைபேறு.

சூரனொடு பானுகோ பன்றிரி புரத்தினோர்
    தாரகனே மதுகைடவர்
  துந்துமகி டாசுரன் சம்பர சலந்தரர்
    தூஷணன் றிரிசிரகரர்
வீரரா வணகும்ப கர்ணனிந் திரசித்து
    மிருகனக னிரணியாட்சன்
  வெய்யவா தாவிவில் வலனுடன் சூர்ப்பணகை
    மேவுமச முகிதாடகை
தாருலவு சிசுபால தந்தவக் கிரர்சரா
    சந்தனொ டடற்கீசகன்
  சகுனிதுரி யோதனன் கஞ்சன்முத லாயினோர்
    தங்களப கீர்த்தியல்லால்
வாரிசூழ் புவியிலவர் கொடுமைநிலை நின்றதோ
    மணவாள நாராயணன்
  மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
    வரதவேங் கடராயனே. (கூசு)

வானப்பிரஸ்தன் முதலானோரியல்பு.

ஒருபொழுது மவமே யிராமனற் கருமங்க
    ளுணர்வுடன் செய்துமனையா
  ளொடுகாம மின்றியுன் பாதங்கள் போற்றிவன
    முறைவன்வா னப்பிரஸ்தன்
கருமமுட னுனதுபக வற்கீதை துதிசெய்து
    காமமுத லாறுமூன்றுங்
  கருதாம லொருபோது சுவைநீக்கி யேயுண்ட
    கருணையோன் சந்நியாசி
இருவினையு மவைசெய்த துஞ்செயச் செய்வது
    மின்பமுங் கனதுன்பமு

மெண்ணரிய சாதிமா பும்பலவு முன்செய்கை
யென்றெண்ணி யடிதொழுது
வருமவனை யவதூத மெய்ஞ்ஞானி யென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (கரு)

உத்தமர் முதலானோரியல்பு.

வினயமுட னன்னமுஞ் சுகமுமே ஷமுமென்ன
வித்தையுரை தன்னையறிவார்
மிகுதாழை கற்பகங் கன்னன்மலர் போன்மரபு
விதமாய் விளங்கவருவார்
பனையினொடு நாளிகே ரங்கமுக மெனவே
பரிந்தவர்க் கன்புகூர்வார்
பனசமுஞ் சூதமும் பாடலமு மென்னவே
பண்பினுட னுதவிசெய்வார்
சினமாநவி னீரெழுத் தொடுமண லெழுத்துடன்
சிலையெழுத் தெனமாறுவார்
செப்புமிவர் தமையாதி யந்தமாப் பார்க்கவே
சிந்தைதனி லாய்ந்துபுவிமேல்
மனிதருத் தமர்கண்மத் திமாதமர் மூவர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (கசு)

தேசங்களின் பெயர்கள்.

அங்கமத் திரமாள வஞ்சால மங்கேக
யாரியம் பாரசீன
மாந்திரம ராடமே கன்னட மிடங்கண
மவந்தியொடு சேதிகுகுதம்

கங்கைதிகழ் காஸ்மீர மச்சங் கிராடங்
கருசமே சூரசேனங்
கலிங்கமொடு வங்காள நேபாள சிங்களங்
கனத்ததுளு வங்கேரளம்
கொங்கணம் போடந்த்ரி கர்த்தம் புளிந்தங்
குளிந்தங் கிராடமகதங்
கூர்ச்சரம் பப்பரம்வி தர்ப்பகாம் போஜநற்
கோசலஞ் சிந்துகௌடம்
வங்கமும் பணிகின்ற கருடகிரி வாசனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாராயனே. (கூஎ)

தேசமுதல் அண்டமளவாக நிற்குநிலை.

ஒட்டமுறு சாதகஞ் சவ்வீர பாஞ்சால
மோங்குநிட தங்கடார
முகந்தாஞ் சோனகஞ் சீனகாந் தாரமொ
டுலாவுமலை யாளவங்கம்
இட்டமுறு த்ராவிடஞ் சோழபாண் டியமாதி
யெண்ணேழு தேசமாகி
யிலங்குபர தக்கண்ட மாதிநவ கண்டங்க
ளேய்ந்தசம் புத்தீவுமே
அட்டதிசை பெற்றதீ வேழுபூ லோகமிஃ
தாதிமே லேழுலோக
மதலமே யாதிகீ ழேழுலோ கங்களிவை
யவையுமீ தோரண்டமாம்
மட்டிலா வண்டங்க ளென்றிரு வயிற்றிலுறு
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடாராயனே. (கூஅ)

## பதினெண்கணங்க ளிவையெனல்.

தேவருட னசுரர்கள் சித்தர்க டயித்தியர்
சிறந்திடும் புருடர்கருடர்
செய்யகந் தருவர்கின் னரரிராக் கதர்பூதர்
தீதில்வே தாளர் முனிவோர்
மேவுவிஞ் சையருரக ரந்தர ரியக்கரே
மேலுமா காசவாசர்
மிகுபோக பூமியோர் முதலாய பதினெட்டு
விதமான கணநாதரும்
பூவையர்க ளுங்கண்டு துதிசெயுந் திருமலை
புகழ்ந்துகோ னேரிமூழ்கிப்
போற்றியுன் சந்நிதி வணங்கியே துதியாத
புன்சனன முஞ்சனனமோ
மாவலி யணிந்தசெம் மணிமகுட பாதனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (சுக)

## பரம பாகவதராவா ரிவரேனல்.

சுகனொடு வியாசன் பராசரன் சவுனகன்
றுய்யநா ரதன்வசிட்டன்
துங்கவான் மீகிமா வலிருக்கு மாங்கதன்
சுக்கிரீ வன்மாருதி
தருமிட்சு வாகுவீ டிமனுடன் பிரகலா
தன்குசே லன்விஜயனே
தருமனொடு முசுகுந்த னக்குரூ ரன்பணி
ஜடாயுவுட னம்பரீஷன்
அகலிகிரி சடைமாது பாஞ்சாலி சபரிமு
னழைத்திடக் கஜராஜனே

யாதிரா மாநுஜன் றிருவாங் கத்தமுத
ராழ்வார்கள் பன்னிருவரும்
மகிமைபெறு முன்றொண்டர் பாதமே துணைகொள்ளு
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (௧00)

அடியார்க்கு வருஞ்சிறப்பு.

உனதுபா தம்போற்று மடியார்கள் சிந்தையி
லுவந்துநீ யென்றுமுறலா
லுன்னுடைய திருமாத ரெண்மருஞ் சேர்வரவ
ருற்றதா னிதிகள்சேரும்
கனநிதிகள் சேர்ந்திடத் தனதன்வரு வானுடன்
கருணைபுரி நேயன்வருவான்
காதல னடுத்ததா லுமைவருவ ளன்னையாற்
கந்தன்வரு வன்மருகனால்
தனதுமா மன்வருவ னரசன்வா லாலமார்
சகலருங் கண்டுவருவார்
தருமஞ் செழிக்குமருள் சேருமது வன்றியே
தவமொன்று செயல்வேண்டுமோ
வனசமீரா ருகமலர் மடந்தைவளர் களமுநின்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வாதவேங் கடாரயனே. (௧0௨)

அவையடக்கமும் பிரார்த்தனையும்.

ஒருமலை யெடுத்துமழை காத்தவா மனதேவ
ருபயபத சேவைதனையே
யுளங்கொண்டு வெண்மணியில் வாழுமுத் தாரைய
னுதவுநா ரணபாரதி

பொருமலை பெறுங்கங்கை யுங்காளி யாறும்
பொருந்துகடல் போற்புலவர்கள்
புகழ்சபையி லெனதுவேங் கடசதக நீதிநெறி
புகலவரு நூறுகவியும்
பரிவினுட னனைவருங் கேட்டெனது தமிழின்மேற்
பக்ஷம்வைத் தாளவருவாய்
பாலகன் புன்சொலைக் கேட்டுமே மகிழுமவள்
பார்மீதி லன்னையலவோ
வருபவர் களிக்கநல் வரமுதவு நேயனே
மணவாள நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே.

திருவேங்கட சதகம்

முற்றிற்று.



| | அ. | ப. |
|---|---|---|
| உவமானசங்கிரகம் உரை | 4 | 0 |
| சங்கீதத்தின் சரித்திரம் .. | 4 | 0 |
| அஷ்டோத்தர சதநாமாவளி | 1 | 6 |
| பிரச்னோத்தர ரத்நமாலிகை | 2 | 0 |
| காங்கிரஸ் மகாசபை ... | 4 | 0 |
| அறப்பளீசுர சதகம் ... | 2 | 0 |
| குமரேச சதகம் ... | 2 | 0 |
| திருவேங்கட சதகம் ... | 2 | 0 |
| தண்டலையார் சதகம் ... | 1 | 0 |
| கோவிந்த சதகம் ... | 0 | 9 |
| எம்பிரான் சதகம் ... | 1 | 0 |
| சிவசங்கர சதகம் ... | 0 | 9 |
| ஜெயங்கொண்டார் சதகம் | 2 | 0 |
| அவையாம்பிகை சதகம் ... | 2 | 0 |
| கைலாசநாதர் சதகம் ... | 2 | 0 |
| குருநாத சதகம் ... | 1 | 0 |
| அண்ணாமலைச்சதகம் ... | 2 | 0 |
| தொண்டைமண்டல சதகம் | 2 | 0 |
| சௌந்தரியலகரி உரை ... | 6 | 0 |
| ஒருதுறைக்கோவை ... | 4 | 0 |
| சீகாளத்திக்கலம்பகம் ... | 2 | 0 |
| யாப்பிலக்கண வினாவிடை | 2 | 0 |
| அணியிலக்கண வசனம் ... | 4 | 0 |
| வச்சணந்திமாலை உரை ... | 2 | 0 |
| குடாரம் ... ... | 1 | 0 |
| ஔவைகுறள் ... | 2 | 0 |
| சிவபூஜைத்திரட்டு ... | 2 | 0 |
| அம்மணீயம், ஐயாசாமீயம் | 8 | 0 |
| ஜாதிபேத விளக்கம் ... | 2 | 0 |
| விஷப்பிரதி விஷத்திரட்டு | 2 | 0 |
| வைசித்தாந்த வரலாறு .. | 4 | 0 |
| ஸ்ரீ பர்த்ருஹரி வைராக்கிய சதகம் ... ... | 3 | 0 |
| நன்னூல் மூலம் ... | 2 | 0 |
| திருக்குறள் மூலம் ... | 4 | 0 |
| வேதாந்தசூளாமணி மூலம் | 2 | 0 |
| கைவல்யநவநீத மூலம் ... | 2 | 0 |
| உபநயனார்த்த தீபிகை ... | 0 | 6 |
| ஏகாந்தம்சவை ... | 1 | 0 |
| மறுமுறைகண்ட வாசகம் | 4 | 0 |
| மஹாதேவமாலை ... | 1 | 0 |
| சிவானந்தமாலை ... | 4 | 0 |
| டிஸ்கவுண்டுமாலை ... | 1 | 0 |
| இன்னாநாற்பது உரை ... | 1 | 6 |
| இனியநாற்பது உரை ... | 1 | 6 |
| சிறுபஞ்சமூலம் உரை ... | 4 | 0 |
| நான்மணிக்கடிகை உரை | 5 | 0 |
| முதுமொழிக்காஞ்சி உரை | 2 | 6 |
| களவழிநாற்பது உரை ... | 2 | 0 |
| ஞானஜீவவாதக்கட்டளை ... | 1 | 0 |
| பிரகலாத சரித்திரம் ... | 4 | 0 |
| அஷ்டப்பிரபந்த மூலம் ... | 8 | 0 |
| பாரதநீதி ... ... | 2 | 0 |
| ஓங்காரத்தின் மகத்துவம் | 1 | 0 |
| அஷ்டாக்ஷர மகத்துவம் ... | 1 | 0 |
| ஆரியர் சந்தியாவந்தனம் ... | 1 | 0 |
| சைவதூஷண பரிகாரம் | 4 | 0 |
| கீதாசாரத்தாலாட்டு ... | 1 | 0 |
| பட்டணத்தார்பாடல்(சிறிது | 1 | 0 |
| பத்திரகிரியார் புலம்பல் ... | 1 | 6 |
| ஸ்தலயாத்திரை பொதுவிதி | 6 | 0 |
| மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் | 2 | 0 |
| நீதிநூற் கொத்து: மூலமும் உரையும் ... ... | 6 | 0 |
| நீதிநூற்றிரட்டு மூலமும் இங்கிலீஷ்மொழிபெயர்ப்பும் | 8 | 0 |

உ

கணபதி துணை.

பொற்களந்தைப்பதி

சைவாசாரியராகிய

படிக்காசுப்புலவரால்

செய்யப்பட்ட

பழமொழிவிளக்கம் என்னும்

# தண்டலையார் சதகம்.

இஃது

காஞ்சீபுரநிவாஸி மகாவித்வான்

ஸ்ரீமத் இராமாநந்தயோகி அவர்களால்

பார்வையிடப்பட்டது.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

[2-ம் பதிப்பு]

1915

விலை அணா 1

கடவுள் துணை.

# படிக்காசுப்புலவர் சரித்திரச்சுருக்கம்.

இந்நூலாசிரியர், தொண்டைமண்டலத்திலே, * பொன்விளைந்த களத்தூரிலே, சுமார் உ௱௫-வருடங்கட்கு முன்னே செங்குந்தர் மரபிலே யவதரித்து, சிவாநுக்கிரகத்தால் தமிழ்க் கலை முழுதும் பயின்று, தெய்வீகம் விளங்கிய நல்வாக்கினைப் பெற்று, இல்லற வாழ்க்கையிலே இருக்குநாளில், அந்நாட்டிலுள்ள வல்ல நகரத்தை யடைந்து, காளத்திபூபதி யென்பவரைக் கண்டு,

"பெற்றா ளொருபிள்ளை யென்மனை யாட்டியப் பிள்ளைக்குப்பால்
பற்றாது கஞ்சி குடிக்குந் தரமல்ல பாலிரக்கச்
சிற்றாளு மில்லையிவ் வெல்லா வருத்தமுந் தீரவொரு
கற்றா தரவல்லை யாவல்ல மாநகர்க் காளத்தியே."

என்னுஞ் செய்யுளைப்பாடி அவரால் சில பாற்பசு வளிக்கப்பெற்றுப் பின்னர்,

"வழிமேல் விழிவைத்து வாடாம லென்மனை யாளுமற்றோர்
பழியாமற் பிள்ளையும் பாலென் றழாமற் பசியெனுஞ்சொல்
மொழியாம லென்னை வரவிட்ட பாவை முசித்துச்சதை
கழியாம லளித் தாய்வல்ல மாநகர்க் காளத்தியே."

என்னுஞ் செய்யுளால் அவரைப் புகழ்ந்து பாடினார்.

அன்றியும், மாவண்டூரிலே மிக்க பிரபுவாயிருந்த கஸ்தூரி முதலியார் குமாரராகிய கறுப்ப முதலியார் என்னும்

* தென்களத்தூர் என்பது வழக்கம்.

ஓர் வேளாளர் வேண்டுகோளின்படி, தொண்டைமண்டல சதகம் என்னும் ஓர் பிரபந்தத்தைப் பாடி அரங்கேற்றி, அவரால் வேண்டிய திரவியங்கள் அளிக்கப்பெற்றமையேயன்றி, பல்லக்குஞ் சுமக்கப்பெற்று, அவ் வுவகைமேலீட்டினால்,

"காவைவென் றிடுகத் தூரி கண்மணிக் கறுப்ப னென்னு
மாவையம் பதியான் றொண்டை மண்டல சதகங் கேட்டு
நாவலர் புகழ்ந்து மெச்ச நவநிதி பொழிந்து நன்றாப்
பூவுல கெங்கும் போற்றப் புகழ்நிலை நிறுத்தி னானே."

எனவும்,

"ஓர்கறுப்பு மில்லாத தொண்டைவள நன்னாட்டி லுசித வேளைச், சீர்கறுப்பொன் றில்லாத கத்தூரி யன்னனருள் சேயைப் பார்மே, லார்கறுப்ப னென்றுசொல்லி யழைத்தாலு நாமவனை யன்பி னாலே, பேர்கறுப்ப னிறஞ்சிவப்பன் கீர்த்தியினால் வெளுப்பனெனப் பேசுவோமே."

எனவும்,

"எல்லப்ப னம்மையப்பன் றருதிருவேங் கடநாத னெழிற் சீராமன், வல்லக்கொண் டையன்மாதை வேங்கடே சுரன்போல வரிசை செய்தே, செல்வத்தம் பியருடனே கத்தூரி மகன்கறுப்பன் றெருவீதிக்கே, பல்லக்குந் தான் சுமந்தா னதுமகவோ ராயிரம்பொன் பரிசு தானே."

என வழங்குஞ் செய்யுண் முதலியவற்றாற் புகழ்ந்து மகிழ்ந்திருந்தனர்.

பின்பு பல தலங்களையுந் தரிசித்து வணங்கிக்கொண்டு சிதம்பரத்தைச் சேர்ந்து சிற்சபா நாயகரையும் சிவகாமி யம்மையையுந் தரிசித்து,

'பொல்லாத மூர்க்கருக் கெத்தனை தான்புத்தி போதிக்கினும்
நல்லார்க்குண் டான குணம்வரு மோநடு ராத்திரியிற்

சல்லாப் புடைவை குளிர்தாங்கு மோகடுச் சந்தைதனிற்
செல்லாப் பணஞ்செல்லு மோதில்லை வாழுஞ் சிதம்பரனே."

எனவும்,

"வேல்கொடுத் தாய்திருச் செந்தூரர்க் கம்பியின் மீதுவைக்கக்
காலகொடுத் தாய்நின் மணவாள னுக்குக் கவுணியற்குப்
பால்கொடுத் தாய்மத வேளுக்கு மூவர் பயப்படச்செங்
கோல்கொடுத் தாயன்னை யேயெனக் கேதுங் கொடுத்திலையே."

எனவும் துதித்து அங்கே நடராசப்பெருமான் பஞ்சாக்ஷரப்படியில் ஐந்து பொற்காசு வைத்தருளத் திருவருளைப் புகழ்ந்து அதனாற் படிக்காசுப்புலவர் எனப் பெயர் வழங்க, அத்தலத்தை யகிதினகன்று தென்னாட்டை யடைந்து இரகுநாத சேதுபதியைக் கண்டு,

"மூவேந் தருமற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்றொருகு
கோவேந் தருமற்ற மற்றொரு வேந்தன் கொடையுமற்றுப்
பாவேந்தர் கற்றி லிலவம்பஞ் சாகப் பறககையிலே
தேவேந்த்ர தாருவொத் தாய்ரகு நாத செயதுங்கனே."

என்னுஞ் செய்யுளைப்பாடிச் சில பரிசுபெற்று, பல்லக்கு முதலிய விருதுகளுடன் மதுரையை யடைநதபொழுது, அந நகரத்தை யாண்டிருந்த திருமலை நாயகர் இவரது ஆரவாரத்தை நோக்கிக் கிளிகூட்டுச் சிறையிலே அடைத்து வைகக, அத்தருணத்து,

"நாட்டிற் சிறந்த திருமலை யாதுங்க நாகரிகா
காட்டில் வனத்திற் றிரிந்துழ லாமற் கலைததமிழ்தேர்
பாட்டிற் சிறந்த படிக்காச னென்னுமொர் பைங்கிளியைக்
கூட்டி லடைத்துவைத் தாயிரா தாவென்று கூப்பிடுதே."

என்னுஞ் செய்யுளைப்பாடி, அவரை வசப்படுத்தி, பரிசு பெற்றுத் தங்கியிருந்தனர்.

அதன் பின்பு, காயற் பட்டினத்தை யடைந்து,

"காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுநகண்க டோல்பலநூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணா நெஞ்ச மனுதினமும்
ஈந்து சிவந்தது மால்சீதக் காதி யிருகரமே"

எனவும்,

"தேட்டாளன் காயற் றுறைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்ப நாட்டிவைத் தான்புகழ் நாவலரை
ஒட்டாண்டி யாக்கி யவர்கடம் வாயி லொருபிடிமண்
போட்டா னவனு மொளித்தான் சமாதிக் குழிபுகுந்தே."

எனவும் வழங்குஞ் செய்யுண் முதலியவற்றால், சீதக் காதியைப் புகழ்ந்து, மிகவுயர்ந்த வைரமோதிர முதலிய பரிசுபெற்று, திருச்செந்தூரை யடைந்து, முருகக்கடவுளைத் தரிசித்து,

"முற்கரை யப்பரை யேறவிட் டாட்கொண் முதல்வருள்ளக்
கற்கரைக் கும்படி போதித் திடுங்கரு ணைக்கடலைச்
சிற்பரைக் குட்டியை யெங்கெங்குந் திதிக்குஞ் செங்கரும்பின்
சர்க்கரைக் கட்டியைக் கண்டேன்செந் தூரெனுந் தானத்திலே."

என்பது முதலிய செய்யுட்களாற் றுதித்து, மற்றுந் தலங்களைத் தரிசித்து வணங்கி, தண்டலைநீணெறி யென்னுந் தலத்தைத் தரிசித்து, அங்குள்ள அன்பர்கள் வேண்டுகோளின்படி இச்சதகத்தை யருளிச்செய்து சந்நிதியி லரங்கேற்றி வசித்திருந்து சின்னாட் சென்றபின், தருமபுர ஆதீனத்தில் அப்பொழுது விளங்கிய ஞானதேசிகரால் ஞான தீக்ஷையும் சந்நியாசமும் பெற்று வசிக்குங்கால், ஒரு தினம் காவிரிநதியில் ஸ்நானத்திற்குச் சென்றபொழுது தவசுப் பிள்ளையினிடம் தோய்க்கத் தந்த வஸ்திரங்களி லொன்றை வெள்ளம் இழுத்துக்கொண்டு போய்விட்டமையால் அவன் வருந்துதல் கண்டு,

"அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினு னம்மையது தப்பாதோ - அப்பாகேள்
இக்கலிங்கம் போனுலென் னேகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்க முண்டே துணை."

என்னுஞ் செய்யுளால் தமது ஆதீன சம்பிரதாயப்படி தமக்கு வழிபடுகடவுளாய் விளங்கும சொக்கலிங்கமூர்த்தியைத் துதித்து, அவ்வஸ்திரம் மீண்டுங் கரையில் வரப்பெற்றுத் தமது நியதிமுடித்து அவனையு மழைத்துச் சென்றனர்.

இவ்வாறு பல விசித்திரப் பாக்களை இயற்றிக்கொண்டு ஞானுசாரிய ருவக்குமாறு சிலகாலம் அணுக்கத்தொண்டராயமர்ந்திருந்து, பின்னர் அவ்வாசிரியர் ஆக்கினைப்படி வைத்தீசுரர் சந்நிதியை யடைந்து அக்கடவுளின் கட்டளையை நடாத்திக்கொண்டு படிக்காசுத் தம்பிரான் என அதிகப் பிரபலமாய் வாழுநாளில், அத்தலத்தைச் சுட்டிப் புள்ளிருக்கு வேளூர்க்கலம்பகம் என்னும் ஓர் பிரபந்த மியற்றி அச்சந்நிதியில் அரங்கேற்றி வசித்தனர்.

அதன் பின்பு, முன்னர்த் தமக்குப் படிக்காசுதந்து திருவருள் பாலித்த சிற்சபாநாயகர் சந்நிதியிலேயே தொண்டு செய்து கதியடைய வேண்டுமென்னும் அவா மேலீட்டால் ஞானுசாரிய ரனுமதிபெற்றுச் சிதம்பரத்தைச் சேர்ந்து, ஒரு திருமடம் வகுத்து அங்கிலிருந்துகொண்டு அக்கடவுளுடைய தொண்டை வகித்துத் தினந்தோறும் ஆலயத்தை யடைந்து சபாநாயகரைத் தரிசிக்கும்பொழுது, அக்கடவுள் பஞ்சாக்ஷரப்படியில் பொற்காசு ஐந்துவைத் தருளப்பெற்று, சைவாசாரியராகச் சில காலம் நன்மாணுக்கர்களுக்கு ஞானுபதேசம் பாலித்து வீற்றிருந்து, சில பிரபந்தங்களையும் அருளிச்செய்து, அக்கடவுளுடைய திருவடி நீழலை யடைந்தனர்.

இவ்வாசிரிய ரியற்றுஞ் செய்யுட்டிறத்தைப்பற்றிப் பல பட்டடைச் சொக்கநாதப்புலவர்,

“மட்டாருந் தென்களந்தைப் படிக்காச னுரைத்தகவி வரைந்த வேட்டைப், பட்டாலே சூழ்ந்தாலு மூவுலகும் பரிமளிக்கும் பரிந் தவேட்டைத், தொட்டாலுங் கைமணக்குஞ் சொன்னாலும் வாய் மணக்குந் துய்ய சேற்றில், நட்டாலுந் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினது நயப்புத் தானே.”

என்று புகழ்ந்திருக்கின்றனர். அன்றியும்,

“வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோ செயங்கொண்டான் விருத்தமென்னு, மொண்பாவி லுயர்கம்பன் கோவையுலா வந்தாதிக் கொட்டக்கூத்தன், கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசை பாடக் காளமேகம், பண்பாகப் பகர்சந்தம் படிக்காச லாதொருவர்ப் பகரொணாதே.”

எனவும் ஓர் செய்யுள் வழங்கி வருகின்றது; ஆனால் இந்நூலும் வேளூர்க்கலம்பகமுந் தவிர வேறு அரிய சந்தப் பாக்களொன்றும கிடைக்கவில்லை. இந்நூலும் பிரதி கிடைப்ப தருமையாதலால் கிடைத்த பிரதிகளைக்கொண்டு மிக முயன்று பரிசோதித்து அச்சிடப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

---

உ

கணபதிதுணை.

பழமொழிவிளக்கம் என்னும்

# தண்டலையார் சதகம்.



## காப்பு.

சீர்கொண்ட கற்பகத்தில் வாதாவி நாயகனைத் தில்லை வாழுங், கார்கொண்ட கரிமுகனை விகடசக்ர கணபதியைக் கருத்துள் வைப்பாம், பேர்கொண்ட ஞானநா யகிபாகன் றண்டலையெம் பெருமான் மீதில், ஏர்கொண்ட நவகண்ட மிசைந்தபழ மொழிவிளக்க மியம்பத் தானே.

வேதநெறி விளம்பியசொல் லாகமநூல் விளம்பிய சொல் லிருபுராணம், ஏதுவினிற் காட்டியசொல் லிலக்கணச் சொல் லிசைந்தபொரு ளெல்லா நாடி, ஆதிமுத லுலகுதனில் விளங்குபழ மொழிவிளக்க மறிந்து பாடச், சோதிபெறு மத வேழ முகத்தொருவ னகத்தெனக்குத் துணைசெய் வானே.

## அவையடக்கம்.

வள்ளுவர்நூ லாதிபல நூலினுள வரும்பொருளை வண் மை யாக, உள்ளபடி தெரிந்துணர்ந்த பெரியவர்கண் முன் னானு மொருவன் போலப், பள்ளமுது நீருலகிற் பரவுபழ மொழிவிளக்கம் பரிந்து கூறல், வெள்ளைமதி யினன்கொல் லத் தெருவதனி லூசிவிற்கும் வினைய தாமே.

## நூல்.

வாமனிக்குந் தண்டலையார் திருக்கோயி லுட்புகுந்து வலமாய் வந்தே, ஒருவிளக்கா யினும்பசுவி னெய்யுடன்று மனைநூலி னொளிர வைத்தால், கருவிளக்கும் பிறப்புமில்லை யிறப்புமில்லை கைலாசங் காணி யாகும், திருவிளக்கிட் டார் தமையே தெய்வமறித் திடும்வினையுந் தீருந் தானே. (க)

கூன்செய்த பிறையணியுந் தண்டலையார் கருணைசெய்து கோடி கோடி, யான்செய்த வினையகற்றி நன்மைசெய்தா லுபகார மென்று முண்டோ, ஊன்செய்த வுயிர்வளரத் தவந் தான நடந்தேற வுதவி யாக, வான்செய்த நன்றிக்கு வையக மென் செய்யுமதை மறந்தி டாதே. (உ)

அட்டதிசை யெங்கணும்போ யலைந்தாலும் பாதாள மதிற்சென் றாலும், பட்டமென வானூடு பறந்தாலு மென்ன வதிற் பயனுண் டாமோ, பிட்டுவா மண்சுமந்த தண்டலையா ரே முன்னாள் பெரியோர் கையில், இட்டபடி யேயொழிய வேறு சைப் படின்வருவ தில்லை தானே. (ங)

தன்மமதைச் செயல்வேண்டுந் தண்டலைநீ ணெறியாரே தயவு செய்வார், வன்மவினை செயல்வேண்டாம் பொய் வேண்டாம் பிறரையொன்றும் வருத்தல் வேண்டாம், கன்ம நெறி வரல்வேண்டாம் வேண்டுவது பலர்க்குமுப கார மா கும், நன்மைசெய்தார் நலம்பெறுவர் தீமைசெய்தார் தீமை பெற்று நலிவர் தாமே. (ச)

புல்லறிவுக் கெட்டாத் தண்டலையார் வளந்தழைத்த பொன்னி நாட்டிற், சொல்லறமா தவம்புரியுஞ் சௌபரியுந் துறவறத்தைத் துறந்து மீண்டான், நல்லறமாம் வள்ளுவர் போற் குடிவாழ்க்கை மனைவியுடனடத்திநின்றான், இல்லறமே பெரிதாகுந் துறவறமும் பழிப்பின்றே லெழில தாமே. (ரு)

முக்கணர்தண் டலைநாட்டிற் கற்புடைமங் கையர்மகிமை பொழியப் போமோ, ஒக்குமெரி குளிரவைத்தா ளொருத்திவில்வே டனையெரித்தா ளொருத்தி மூவர், பக்கமுற வமுதளித்தா ளொருத்தியெழு பரிதடுத்தா ளொருத்தி பண்டு, கொக்கெனவே நினைந்தனையோ கொங்கணவா வென்றொருத்தி கூறி னாளே. (௬)

நன்றிதரும் பிள்ளையொன்று பெற்றாலுங் குலமுழுது நன்மை யுண்டாம், அன்றியறி வில்லாத பிள்ளையொரு நூறு பெற்று மாவ துண்டோ, மன்றினடம் புரிவாரே தண்டலையா ரேசொன்னேன் வருடந் தோறும், பன்றிபல வீன்று மென்ன குஞ்சரமொன் றீன்றதனாற் பயனுண் டாமே. (௭)

அல்லமருங் குழலாளை வரகுணபாண் டியராச ரன்பா லீந்தார், கல்லைதனின் மென்றுமிழ்ந்த வூனமுதைக் கண்ணப்பர் கனிவா லீந்தார், சொல்லியதண் டலையார்க்குக் கீரையுமா வடுவுமொரு தொண்ட ரீந்தார், நல்லதுகண் டாற்பெரியோர் நாயகனுக் கென்றதனை நல்கு வாரே. (௮)

திருவிருந்த தண்டலையார் வளநாட்டி லில்வாழ்க்கை செலுத்து நல்லோர், ஒருவிருந்தா யினுமின்றி யுண்டபகல் பகலாமோ வுறவாய் வந்த, பெருவிருந்துக் குபசாரஞ் செய்தனுப்பி யின்னமெங்கே பெரியோ ரென்று, வருவிருந்தோ டுண்பதல்லால் விருந்தில்லா துணுஞ்சோறு மருந்து தானே.

பொற்குடையும் பொற்றுகிலும் பொற்பணியுங் கொடுப்பதென்ன பொருளோ வென்று, நற்கமல முகமலர்ந்தே யுபசார மிக்கவின்சொ னடத்த னன்றே, கற்கரையு மொழி பாகர் தண்டலையார் வளநாட்டிற் கரும்பின் வேய்ந்த, சர்க்கரையின் பந்தலிலே தேன்மாரி பொழிந்துவிடுந் தன்மை தானே. (௰)

குறும்பெண்ணு துயர்ந்தநல்லோ ராயிரஞ்சொன் னுலு மதைக் குறிக்கொ ளாமல், வெறும்பெண்ணு சையிற்சுழல் வேன் மெய்ஞ்ஞானம் பொருந்தியுனை வேண்டீட னந்தோ, உறும்பெண்ணு ரமுதிடஞ்சேர் தண்டலைநீ ணெறியேயென் னுண்மை தேரில், எறும்பெண்ணு யிரமப்பா கழுதையுங் கை கடந்ததெனு மெண்ணந் தானே. (கக)

துப்பிட்ட வாலம்விதை சிறிதெனினும் பெரிதாகுந் தோற்றம் போலச், செப்பிட்ட தினையளவு செய்தநன்றி பனையளவாய்ச் சிறந்து தோன்றும், கொப்பிட்ட வுமைபாகர் தண்டலையார் வளநாட்டிற் கொஞ்ச மேனும், உப்பிட்ட பேர்கடமை யுளவரையு நினைக்குமிந்த வுலகந் தானே. (கஉ)

மேட்டுக்கே விரைத்தவிரை வீணுக்கே செய்தநன்றி மேயும் பட்டி, மாட்டுக்கே கொடுத்தவிலை பரத்தையர்க்கே தேடியிட்ட வண்மை யெல்லாம், பாட்டுக்கே யருள்புரியுந் தண்டலையார் வீதிதொறும் பரப்பி டாமல், காட்டுக்கே யெறித்தநிலாக் கானகத்துக்கே பெய்தமழை கடுக்குங் காணே. ()

சங்கையறப் படித்தாலுங் கேட்டாலும் பிறர்க்குறுதி தனைச்சொன் னலும், அங்கனுல கிற்சிறியோர் தாமடங்கி நடந்துகதி யடைய மாட்டார், திங்களணி சடையாரே தண் டலையா ரேசொன்னேன் சிறிது காலம், கங்கையிலே படர்ந் தாலும் பேய்ச்சுரைக்காய் நல்லசுரைக் காயா காதே. (கச)

உழையிட்ட விழிமடவா ருறவுவிட்டும் வெகுளிவிட்டு முலக வாழ்விற், பிழைவிட்டு மின்னமின்ன மாசைவிடா தலக்கழியப் பெற்றே னந்தோ, தழையிட்ட கொன்றை புனை தண்டலைநீ ணெறியேயென் றன்மை யெல்லாம், மழை விட்டுந் தூவானம் விட்டதில்லை யாயிருந்த வண்மை தானே.

கோச்சையிற்பிள்ளைக்குதவுர் தண்டலையார் வளநாட்டிற் கொடிதாய் வந்த, வச்சிரப்பிள்ளைக்குமுன் மாதவனை புத்தி சொன்னான் வசையுஞ் சொன்னான், அச்சுதப்பிள்ளைக்கு மந்த வாண்டவரே புத்திசொன்ன ராத லாலே, துர்ச்சனப் பிள்ளைக்காரர் புத்திசொல்லு வாரென்றே சொல்லுவாரே.

கறுத்தவிட முண்டருளுந் தண்டலையார் வளநாட்டிற் கடிய தீயோர், குறித்துமனை யாளரையிற் றுகிலுரிந்து மைவர்மனங் கோபித் தாரோ, பறித்துரிய பொருண்முழுதுங் கவர்ந்தாலு மடித்தாலும் பழிசெய் தாலும், பொறுத்தவரே யரசாள்வர் பொங்கினவர் காடாளப் போவர் தாமே. (கஎ)

அள்ளித்தண் ணீறணியுந் தண்டலையார் வளநாட்டி லாண்மை யுள்ளோர், விள்ளுற்ற கல்வியுள்ளோர் செல்வமுள்ளோ ரழகுடையோர் மேன்மை நோக்கி, உள்ளத்தி லழுன்றழு நமக்கில்லை யெனவுரைத்திங் குழல்வா ரெல்லாம், பிள்ளைபெற் றவர்தமைப்பார்த் திருந்துபெரு மூச்செறியும் பெற்றியோரே. (கஅ)

மண்ணுலகா ளவுநினைப்பார் பிறர்பொருண்மே லாசைவைப்பார் வலுமை செய்வார், புண்ணியமென் பதைச்செய்யார் கடைமுறையி லலக்கழிந்து புரண்டே போவார், பண்ணுலவு மொழிபாகர் தண்டலையார் வகுத்தவிதிப் படிபல் லாமல், எண்ணமெல்லாம் பொய்யாகு மௌனமே மெய்யாகு மியற்கை தானே. (கசு)

சொன்னத்தைச் சொல்லுமிளங் கிள்ளையென்பார் தண்டலையார் தொண்டு பேணி, இன்னத்துக் கின்னதெனும் பகுத்தறிவொன் றில்லாத வீன ரெல்லாம், தன்னைத்துக் கண்டவுடன் காணுமன் முறைபேசிச் சாடை பேசி, முன்னுக்கொன் றுயிருந்து பின்னுக்கொன் றுய்நடந்து மொழிவர் தாமே. (உ0)

கோடியருக்கு நல்லபுத்தி சொன்னாலுந் தெரியாது
கொடையில் லாத, மடையருக்கு மதுரகவி யுரைத்தாலு
மவர்கொடுக்க மாட்டார் கண்டீர், படியளக்குந் தண்டலைநீ
ணெறியாரே யுலகமெலாம் பாசி மூடி, விடியன்மட்டு மழை
பெயினு மதிலோட்டாங் கிச்சின் முளை வீசி டாதே. (௨௧)

செங்காவி மலர்த்தடஞ்சூழ் தண்டலைநீ ணெறியேநின்
செயலுண் டாகில், எங்காகி லென்னவவ ரெண்ணியதெல்
லாமுடியு மில்லை யாகில், பொங்காழி சூழுலகி லுள்ளங்
கால் வெள்ளெலும்பாய்ப் போகவோடி, ஐங்காதம் போனா
லுந் தன்பாவந் தன்னுடனே யாகுந் தானே. (௨௨)

தாயறிவாண் மகளருமை தண்டலைநீ ணெறிநாதர்
தாமே தந்தை, ஆயறிவா ரெமதருமை பாவையிடந் தூது
சென்ற தறிந்தி டாரோ, பேயறிவார் முழுமூடர் தமிழருமை
யறிவாரோ பேசு வாரோ, நாயறியா தொருசந்திச் சட்டிபா
னையினந்த நியாயந் தானே. (௨௩)

கட்டுமாங் கனிவாழைக் கனிபலவின் கனிகளுப கார
மாகும், சிட்டருமவ் வணந்தேடும் பொருளையெல்லா மிர
ப்பவர்க்கே செலுத்தி வாழ்வார், மட்டுலவுஞ் சடையாரே
தண்டலையா ரேசொன்னேன் வனங்க டோறும், எட்டிமரம்
பழுத்தாலு மீயாதார் வாழ்ந்தாலு மென்னுண் டாமே. ()

ஓதரிய தண்டலையா ரடிபணிந்து நல்லவனென் றுலக
மெல்லாம், போதமிகும் பேருடனே புகழ்படைத்து வாழ்
பவனே புருட னல்லால், ஈதலுட னூக்கமின்றிப் பொன்
காத்த பூதமென விருந்தா லென்ன, காதவழி பேரில்லான்
கழுதையோ டொக்குமெனக் காண லாமே. (௨௫)

பரியாம விடுஞ்சோறு மூமைகண்ட கனவுமொன்று
பரிசி லீயான், அரிதான செந்தமிழி னருள்சிறிது மில்லா

தா னறிவு மேதான், கரிகாலன் பூசைபுரி தண்டலைநீ ணெறி யாரே கதித்த வோசை, தெரியாத செவிடன்கா தினிற் சங்கு குறித்ததெனச் செப்ப லாமே. (உசு)

முன்னரிய மறைவழங்குந் தண்டலையா ராகமத்தின் மொழிகே ளாமல், பின்னுயிரை வதைத்தவனுங் கொன்றவ னுங் குறைத்தவனும் பேருரைப்போனும், அங்கெறியே சமைத் தவனு முண்டவனு நரகுறுவ ராத லாலே, தன்னுயிர்போ லெந்நாளு மன்னுயிருக் கிரங்குவதுந் தக்க தாமே. (உஎ)

உருவெடுத்த நாண்முதலா வொருசாணும் வளர்க்கவுட லுழல்வ தல்லால், மருவிருக்கு நின்பாத மலர்தேடித் தினம் பணிய மாட்டே னந்தோ, திருவிருக்கு மணிமாடத் தண்டலைநீ ணெறியேயென் செய்தி யெல்லாம், சருகரிக்க நேரமன்றித் திக்காய நேரமில்லாத் தன்மை தானே. (உஅ)

காதிலே திருவேடங் கையிலே செபமாலை கழுத்தின் மார்பின், மீதிலே தாழ்வடங்கண் மனதிலே காவடமாம் வேட மாமோ, வாதிலே யயன்தேடுந் தண்டலைநீ ணெறியா ரே மனிதர் காணும், போதிலே மவுனமிராப் போதிலே ருத் ராக்ஷப் பூனை தானே. (உகூ)

மானென்று வடிவெடுத்து மாரீசன் போய்மடிந்தான் மானே யென்று, தேனென்று மொழிபேசிச் சீதைதனைச் சிறையிருக்கத் திருடிச் சென்றோன், வானென்று மாசிழந் தான் தண்டலையார் திருவுளத்தின் மகிமை காணீர், தானொ ன்று நினைக்கையிலே தெய்வமொன்று நினைப்பதுவுஞ் சக சந் தானே. (௩0)

கைசொல்லும் பனைகாட்டுங் களிற்றுரியார் தண்டலை யைக் காணார் போலப், பொய்சொல்லும் வாயினர்க்குப் போசனமுங் கிடையாது பொருணில் லாது, மைசொல்

னுங் காரளிசூழ் தாமரைமலர் பொய்சொல்லி வாழ்ந்த துண்டோ, மெய்சொல்லி வாழாதான் பொய்சொல்லி வாழ்வ தில்லை மெய்ம்மை தானே. (நக)

அந்தணரை நல்லவரைப் பரமசிவ னடியவரை யகந்தை யாலோர், நிந்தனைசொன் னுமென்ன வைதாலு மென்னவதி னிஷ்ட முண்டோ, சுந்தரர்க்குத் தூதுசென்ற தண்டலைநீ ணெறியானே துலங்கும் பூர்ண, சந்திரனைப் பார்த்துநின்று நாய்குரைத்த போதிலென்ன தாழ்சசி தானே. ()

கோடாமற் பெரியவர்பா னடப்பதன்றிக் குற்றமுடன் குறைசெய் தோர்கள், ஆடாகிக் கிடந்தவிடத் ததன்மயிருங் கிடவாம லழிந்துபோவார், வீடாகற் கதியுதவுந் தண்டலையா ரேசொன்னேன் மெய்யோ பொய்யோ, கோடாவிக் காம்பேதன் குலத்தினுக்குக் கேடான கொள்கை தானே. ()

சின்னமெங்கே கொம்பெங்கே சிவிகையெங்கே பரியெங்கே சிவிபா ரெங்கே, பின்னையொரு பாழுமில்லை நடக்கை குலைந் தானுடனே பேய்பே யன்றோ, சொன்னவிலுந் தண்டலையார் வளநாட்டிற் குங்கிலியத் தூபங் காட்டும், சன்னதமா னதுகுலைந்தாற் கும்பிடெங்கே வம்பரிது தனையென்றோ. (நச)

சிறுபிறைதுன் னியசடையார் தண்டலைசூழ் பொன்னிவளஞ் செழித்த நாட்டில், குறையகலும் பெருவாழ்வு மனைவியுமக் களும்பொருளாக் குறித்தி டாமல், மறை பயில்பத் திரகிரியும் பட்டினத்துப் பிள்ளையுஞ்சேர் மகிமை யாலே, துறவறமே பெரிதாகுந் துறவிக்கு வேந்தனொரு துரும்பு தானே. (நரு)

பேரியைக்குஞ் சுற்றமுடன் மைந்தருமா தருஞ்சூழப் பிரபஞ் சத்தே, பாரியையுற் றிருந்தாலுந் திருநீற்றிற் கழற்

காய்போற் பற்றில் லாமல், சீரிசைக்குந் தண்டலையா ரஞ்
செழுத்தை நினைக்கின்முத்தி சேர லாகும், ஆரியக்கூத் தாடி
னுங் காரியமேற் கண்ணாவ தறிவு தானே. (நஅ)

இரந்தனையித் தனைநாளும் பரந்தனைநா னென்றலைந்தா
யினிமேலேனும், கரந்தைமதி சடையணியுந் தண்டலைநீ
ணெறியாரே காப்பா ரென்னும், உரந்தனைவைத் திருந்த
படி யிருந்தவருக் குள்ளதெல்லா முண்டா முண்மை, மரந்த
னைவைத் தவர்நாளும் வாடாமற் றண்ணீரும் வார்ப்பர் தாமே.

நாற்கவியும் புகழுவருந் தண்டலையார் வளநாட்டி னல்ல
நீதி, மார்க்கமுட னடந்துசெங்கோல் வழுவாமற் புவி
யாளும் வண்மை செய்த, தீர்க்கமுள்ள வரசனையே தெய்வ
மென்பார் கொடுங்கோன்மை செலுத்தி நின்ற, மூர்க்க
முள்ள வரசனுந்தன் மந்திரியு மாழ்நரகின் மூழ்கு வாரே. ()

ஓதரிய வித்தைவந்தா லுரியசபைக் கழகாகு முலகில்
யார்க்கும், ஈதலுட னறிவுவந்தா லினியகுணங் களுக்கழகா
யிருக்கு மன்றோ, நீதிபெறு தண்டலையார் திருநீறு மெய்க்
கழகாய் நிறைந்து தோன்றும், காதிலணி கடுக்கனிட்டான்
முகத்தினுக்கே யழகாகிக் காணுந் தானே. (நகூ)

பாரதியா ரண்ணாவிப் புலவரென்பார் கல்வியினிற்
பழக்க மில்லார், சீரறியார் தளைபறியார் பல்லக்கே றுவர்
புலமைசெலுத்திக்கொள்வார், ஆரணியுந் தண்டலைநீ ணெறி
யாரே யிலக்கணநூ லறியா ரேனும், காரிகையா கிலுங்கற்
றுக் கவிசொல்லார் பேரிகொட்டக் கடவர் தாமே. (சo)

அருண்மிகுத்த வாகமநூல் படித்தறியார் கேள்வியையு
மறியார் முன்னே, இருவினையின் பயனறியார் குருக்களென்
றே யுபதேச மெவர்க்குஞ் செய்வார், வாமிகுத்த தண்டலை

நீ ணெறியாரே யவர்கிரியா மார்க்க மெல்லாம், குருடனுக்குக் குருடன்கோல் கொடுத்துவழி காட்டிவருங் கொள்கை தானே. (சக)

நேற்றுள்ளா ரின்றிருக்கை நிச்சயமோ வாதலினு னினைந்த போதே, ஊற்றுள்ள பொருளுதவி யறநதேடி வைப்பதறி வுடைமை யன்றோ, கூற்றுளள மலேயவருந் தண்டலையா ரேசொன்னேன் குடபால் வீசம், காற்றுள்ள போதெவருந் தூறறிக்கொள் வதுநல்ல கருமந் தானே. (சஉ)

வர்க்கத்தார் தமைவெறுத்த விருத்தருமாய் மெய்ஞ்ஞான வடிவ மானோர், கற்கட்டா கியமடமுங் காணியுஞ் செம் பொனுந்தேடுங் கரும மெல்லாம், பொற்கொத்தாஞ் செந்நெல்வயற் றண்டலையா ரேசொன்னேன் பொன்னு டாளும், சொர்க்கத்தே போம்போதுங் கக்கத்தே ராட்டினத்தைச் சுமந்த வாறே. (சங)

ஆம்பிள்ளா யெனக்கொடுக்கும் பெரியோரை யடுத்தவரை யவனிக் கெல்லாம், நாம்பிள்ளா யதிகமென்பார் நண்ணுரு மேவல்செய நாளும் வாழ்வார், வான்பிள்ளா யெனுமேனித் தண்டலையார் பூஷணமாய் வளர்ந்த நாகம், என் பிள்ளாய் கருடாநீ சுகமோவென் றுரைத்தவித மென்னலாமே. (சச)

வடியிட்ட புல்லர்தமை யடுத்தாலும் விடுவதுண்டோ டவிநீர்க் கங்கை, முடியிட்ட தண்டலைநா தரைப்புகழிற் பெருவாழ்வு முழுது முண்டாம், மிடியிட்ட வினைதீருந் தெய்வமிட்டும் விடியாமல் வீணர் வாயிற், படியிட்டு விடிவதுண்டோ வவாருளே கண்ணைப் பற்று வீரே. (சரு)

போலியவளம் பலதழைத்த தண்டலைநீ ணெறிபாதம் போற்றி நாளும், வலியவலஞ் செய்தறியீர் மறஞ்செய்வீர்

நமன்றூதர் வந்து கூடி, மெலியவரைத் திடுபொழுது கலக் கண்ணீ ருகுத்தாலும் விடுவ துண்டோ, எலியழுது புலம் பிடினும் பூனைபிடித் ததுவிடுமோ வென்செய் வீரே. (சசு)

மற்றவரோ தமிழ்பாடி நாட்டவல்லார் நக்கீரர் வலிய ராகி, வெற்றிபுனை மீனாக்ஷி சுந்தரநா யகரடுத்து விளம்பும் போதில், பற்றுளதண் டலைவாழுங் கடவுளென்றும் பாரா மற் பயப்ப டாமல், நெற்றிவிழி காட்டிடினுங் குற்றமே குற்ற மென நிறுத்தி னாரே. (சஎ)

சீரிலகுந் தண்டலையார் திருவருளா லகமேறிச் செழித்த நாளில், பாரியென வாயிரம்பேர்க் கன்னதா னங்கொடுக்கும் பலனைப் பார்க்க, நேரிடுமயஞ் சந்தனிலை யெவ்வளவா கிலுங்கொடுத்தா னீதி யாகும், மாரிபதின் கலநீரிற் கோடை தனி லொருகுடநீர் வண்மை தானே. (சஅ)

பிறக்கும்போ தொருபொருளுங் கொடுவந்த தில்லை யுயிர் பிரிந்து மண்மேல், இறக்குமபோ திலுங்கொண்டு போவதில்லை யென்றுசுமமா விருந்து வீணே, சிறக்குந்தா யினுமருள்வார் தண்டலையிற சேரமற் றேச மெல்லாம், பறக்குங்கா கமதிருக்குங் கொம்பறியா தெனததிரிந்து பயன் பெறுரே. (சகூ)

வைதிடினும் வாழ்த்திடினு மின்பதுன்பம் வந்திடி னும் வம்பு கோடி, செய்திடினுந் தண்டலைநீ ணெறியார்தஞ் செயலலன்றே தெளிவ தல்லால், மெய்தவிர வவாசெய்தா ரிவர்செய்தா ரெனநாடி வெறுக்க லாமோ, எய்தவர்தம் மருகிருகக வம்பைநொந்த கருமமென்ன வியம்பு வீரே. ()

வாங்கால முண்டசெழுந் தண்டலையா ரடிபோற்றி வணங்கி நாடிப், போங்காலம வருமுன்னே புண்ணியஞ்செய் தரியகதி பொருந்து றமல், ஆங்கால முள்ளதெல்லாம் விய

சாரமாகியறி வழிந்து வீணே, சாங்காலஞ் சங்கரா சங்கரா வெனின்வருமோ தருமந் தானே. (ருக)

சுற்றமாய் நெருங்கியுள்ளார் தனையடைந்தார் கற்றறிந் தார் துணையே வறில்லார், உற்றவே தியர்பெரியோர்க் குதவி யன்றிப் பிறர்க்குதவு முதவி யெல்லாம, சொற்றநான் மறை பரவுந் தண்டலையா ரேசொன்னேன் சுமந்தே நொந்து, பெற்றதாய் பசித்திருக்கப் பிராமணபோ சனநடத்தும் பெருமை தானே. (ருஉ)

துன்மார்க்கர்க் காயிரந்தான் சொன்னாலு மறந்துவிட் டுத் துடுக்கே செய்வார், சன்மார்க்கர்க் கொருவார்த்தை சொலுமளவே மெய்யதனிற் றழுப்பாக் கொள்வார், பன்மார்க்க மறைபுகழுந் தண்டலையா ரேசொன்னேன் பதமே யான, நன்மாட்டுக் கோரடியா நற்பெண்டீர்க் கொருவார்த்தை நடத்தை யாமே. (ருங)

காப்பார்க்கு நல்லகதி வருவதில்லை செங்கோலிற் கடல் சூழ் வையம், புரப்பார்க்கு முடிவிலே சுவர்க்கமல்லா னரக மில்லை பொய்யி தென்றால், உரப்பார்க்கு நலம்புரியுந் தண் டலையா ரேசொன்னே னொருமை யாக, இரப்பார்க்கு வெண் சோறு பஞ்சமுண்டோ வொருக்காலு மில்லை தானே. (ருச)

படுங்கோல மறியாமற் றண்டலையார் திருப்பணிக்கும் பங்கஞ் செய்வார், நெடுங்கோளுந் தண்டமுமாய் வீணரா வீணனைப்போ னீதி செய்வார், கெடுங்கோப மல்லாமல் விளைவுண்டோ மழையுண்டோ கேள்வி யுண்டோ, கொடுங் கோன்மன் னவனாட்டிற் கடும்புலிவா ழுங்காடு குணமென் பாரே. (ருரு)

உள்ளவரைக் கெடுத்தோரு முதவியற்று வாழ்ந்தோரு முரைபெற் றோருந், தள்ளிவழக் குரைத்தோருஞ் சற்குரு

வைப் பழித்தோருஞ் சாய்ந்தே போவார், பள்ளவயற் றண்டலையார் பத்தாடி பணிந்தோரும் பாடினோரும், பிள்ளைகளைப் பெற்றோரும் பிச்சையிட்ட நல்லோரும் பெருகுவாரே. (ருசு)

விற்பனர்க்கு வாழ்வுவந்தான் மிகவணங்கிக் கண்ணோட்ட மிகவுஞ் செய்வார், சொற்பருக்கு வாழ்வுவந்தாற் கண்டெரியா திறுமாந்து துன்பஞ் செய்வார், பறபலர்க்கு வாழ்வு தருந் தண்டலையா ரேசொனனேன் பண்பில் லாத, அற்பருக்கு வாழ்வுவந்தா லர்த்தராத் திரிகுடைமே லாகுந் தானே. (ருஎ)

விசையமிகுந் தண்டலையார் வளநாட்டி லொருத்தர் சொல்லை மெய்யா வெண்ணி, வசைபெருக வநியாயஞ் செய்து பிறர் பொருளையெல்லாம் வலிய வாங்கித், திசைபெருகுங் கீர்த்தியென்றுந் தன்மமென்றுந் தானமென்றுஞ் செய்வ தெல்லாம், பசுவினையே வதைசெய்து செருப்பினைத்தானங்கொடுக்கும் பண்பு தானே. (ருஅ)

சிறியவரா முழுமூடர் துரைத்தனமா யுலகாளத் திறம் பெற் றாலும், அறிவுடையார் தங்களைப்போற் சற்குணமுமுடையோர்க ளாக மாட்டார், மறிதருமான் மழுவேந்துந் தண்டலையா ரேசொன்னேன் வாரி வாரிக், குறுணிமைதானிட்டாலுங் குறிவடிவங் கண்ணாகிக் குணங்கொ டாதே. ()

கற்றவர்க்குக் கோபமில்லை கடந்தவர்க்குச் சாதியில்லை கருணை கூர்ந்த, நற்றவர்க்கு விருப்பமில்லை நலலவருக் கொருகாலு நரக மில்லை, கொற்றவருக் கடிமையில்லை தண்டலையார் மலர்ப்பாதங் கும்பிட் டேத்தப், பெற்றவர்க்குப் பிறப்பில்லை பிச்சைசோற் றினுக்கில்லை பேச்சுத் தானே. (௬௦)

பரங்கருணை வடிவாகுந் தண்டலையார் வளநாட்டிற் பருவஞ் சேர்ந்த, சாங்குலவு காமகலை தனையறிந்த வதிருபத்

தைய லாரை, வரம்புறுதா ளாண்மையில்லா மட்டிகளுக் கே
கொடுத்தால் வாய்க்குமோ தான், குரங்கினது கையினறும்
பூமாலை தனைக்கொடுதத கொள்கை தானே. (௬௧)

பிரசமுண்டு வரிபாடுந் தண்டலையார் வளநாட்டிற் பெ
ண்களோடு, சரசமுண்டு போகமுண்டு சங்கீத முண்டுசுகந்
தானே யுண்டிங், குறைசிறந்த வடிமையுண்டோ விடுக்க
ணுண்டோ வொன்றுமில்லை யுலகுக் கெலலாம், அரிசியுண்
டேல் வரிசையுண்டா மக்காளுண் டாகின்மச்சா னன்புண்
டாமே. (௬௨)

தத்தைமொழி யுமைசேருந் தண்டலையார் பொன்னி
வளந் தழைத்த நாட்டில், வித்தகமந் திரியில்லாச் சபை
தனிலே நீதியில்லை வேந்தர்க் கெல்லாம், புத்திநெறி நீதி
சொல்ல மந்திரியில் லாதொருவர் போதிப பாரோ, நித்தனு
முண் சோற்றின்முழுப் பூசிணிக்காய் மறைத்ததுவு நிசம
தாமே. (௬௩)

நேசமுடன் சபையில்வந்தால் வேளையறிந் திங்கிதமா
நிருபர் முன்னே, பேசுவதே யுசிதமல்லா னடுவிலொரு
வன்குழறிப பேச லெல்லாம், வாசமிகுந் தண்டலைநீ ணெறி
யாரே யபிஷேக மலிநீ ராட்டிப், பூசைபண்ணும் வேளை
யிலே காடியைவிட் டோட்டுவது போலுந் தானே. (௬௪)

மண்ணுலகிற் பிறர்குடியை வஞ்சனையிற் கெடுப்பதற்கு
மனதி னாலே, உன்னிடினு முரைத்திடினு மவன்றானே
கெடுவனென்ப துண்மை யன்றோ, தென்னவன்சோ ழன்
பணியுந் தண்டலைநீ ணெறியாரே தெரிந்து செய்யுந், தன்
வினைதன் னைச்சுடவோட் டப்பம்வீட் டைச்சுடவுந் தான்
கண் டோமே. (௬௫)

மூன்பெரியோர் தொண்டுபட்டு நடந்தவழி தனைப்பழி
த்து முரணை பேசிப், பின்பலரை யுடன்கூட்டி நூதனமா
நடத்துவது பிழைமா டெய்தில், துன்பறியாக் கதியருளுந்
தண்டலைநீ ணெறியாரே தூய ளாகி, அன்புளதா யைப்பழி
த்து மகளேதோ செயத்தொடங்கு மறிவு தானே. (சுசு)

தண்ணமரு மலர்ச்சோலைத் தண்டலைநீ ணெறியையநின்
றன்னைப் பாடில், எண்ணமிக விம்மையினு மறுமையினும்
வேண்டியதுண் டிதையோ ராமல், மண்ணின்மிசை நரஸ்
துதிகள் பண்ணிபலைந் தேதிரிபா வாண ரெல்லாம், வெண்
ணெய்தம இடத்திருக்க நெய்தேடிக் கொண்டலையும் வீணர்
தாமே. (சுஎ)

அந்தணர்க்குத் துணைவேத மரசருக்குத் துணைவயவா
ளவனிமீது, மைந்தருக்குத் துணைதாயார் தூதருக்குத்
துணைமதுர வார்த்தை யன்றோ, நந்தமக்குத் துணையான
தண்டலைநீ ணெறியாரே நண்ப ரான, சுந்தரர்க்குத் துணை
நாளு மேழையர்க்குத் தெய்வமே துணையென் பாரே. (சுஅ)

போரஞ்சா ரதிவீரர் பொருளஞ்சார் விதரணஞ்சேர்
புருஷர் தோயும், நீரஞ்சார் மறைமுனிவர் நெருப்பஞ்சார்
கறபுடைய நிறைசேர் மினைஞர், வாரஞ்சா முலையிடஞ்சேர்
தண்டலையா ரேசொன்னேன் மதமா வென்னுங், காரஞ்சா
திளஞ்சிங்கங் கனத்தவலி யாந்தூதன் காலஞ் சானே. (சுகூ)

உபசாரஞ் செய்பவரை விலக்கிடினு மவர்செய்கை யொ
ழிந்து போகா, தபசாரஞ் செய்வாரை யடித்தாலும் வைதா
லு மதுநில் லாது, சுபசாரத் தண்டலையார் வளநாட்டிற்
றிருடருக்கத் தொழினில் லாது, விபசாரஞ் செய்வாரை
மேனியெல்லாஞ் சுட்டாலும் விட்டி டாரே. (எ0)

சகமிக்க தண்டலையா ரடிபோற்று மகராசர் சபையில் வந்தால், சுகமிக்க வேசையர்க்குப் பொன்னூறு கொடுப்பர் தமிழ் சொன்ன பேர்க்கோ, அகமிக்க சோறிடுவா ரந்தணருக் கெனினுழி யரிசி யீவார், பகடிக்கோ பணம்பத்துத் திருப்பாட்டுக் கொருகாசு பாலிப் பாரே. (எக)

பணந்தானே யறிவாகும் பணந்தானே வித்தையுமாம் பரிந்து தேடும், பணந்தானே குணமாகும் பணமில்லா தவர் பிணமாம் பான்மை சேர்வர், பணந்தானே பேசுவிக்குந் தண்டலைநீ ணெறியாரே பார்மீ திற்றன், பணந்தானே பந்தியிலே குலந்தானே குப்பையிலே படுக்குந் தானே. (எஉ)

புனங்காட்டு மண்ணுவிண்ணு மஞ்சவருங் காலனையும் போடா வென்றே, இனங்காட்டு மார்க்கண்டன் கடிந்துபதி னாறுவய தென்றும் பெற்றான், அனங்காட்டுந் தண்டலையா ரடியாரெல் லாமொருவர்க் கஞ்சு வாரோ, பனங்காட்டு நரி தானுஞ் சலசலப்புக் கொருநாளும் பயப்ப டாதே. (எங)

சீரிலகுந் தண்டலையார் வளநாட்டி லொருதோழன் றீமை தீர, வாரமிகும் பிள்ளைதனை யரிந்துண்டா னொருவேந் தன் மணந்து கொண்ட, ஆர்வமிகு மனைக்கிழத்தி யாண்டிச்சி வடிவுகொண்டா ளாத லாலே, ஊரிலொரு வன்றோழ னொரு மற்ற தேதார முண்மை தானே. (எச)

தானவனு கியஞானச் செயலுடையார் மாதர்முலை சூழவி னாலும், ஆனதொழில் வகைவகையாச் செய்தாலு மனுபோக மவர்பா லுண்டோ, கானுறையுந் தண்டலையா ரடிபோற்றுஞ் சுந்தரனார் காமி போலாய், மேனவினுஞ் சுகம் படுக்கை மெத்தையறி யாதெனவே விளம்பி னாரே. (எரு)

சோறென்ன செய்யுமெல்லாம் படைத்திடவே செய்யு மருள் சுரந்து காக்கும், சோறென்ன செய்யுமெல்லா பழித்

திடவே செய்யுமதன் சொரூப மாக்கும், சோறென்ன வெளிதேயோ தண்டலையார் தப்பூசை துலங்கச் செய்யும் சோறென்ன செய்யுமெனிற் சொன்னவண்ணஞ் செயும்பழமை தோற்றுந் தானே. (எசு)

எத்தருக்கு முழுத்தருக்கு மீனருக்கு மூடருக்கு மிரக்கம் பாரா, மத்தருக்குங் கொடிதாமவ் வக்குணமே நற்குணமா வாழ்ந்து போவார், பத்தருக்கு நலங்காட்டுந் தண்டலையா ரேயறிவார் பழிப்பா ரேனும், பித்தருக்குத் தங்குணமே நூலினுஞ்செம் மையதான பெற்றி யாமே. (எஎ)

பன்னகவே ணிப்பரமர் தண்டலையார் நாட்டிலுள பலருங் கேளீர், தன்னறிவு தன்னினைவு தன்மகிமைக் கேற்ற நடை தகுமே யல்லால், சின்னவரும் பெரியவர்போ லே நடந்தா லுள்ளதும்போஞ் சிறிய காகம், அன்னநடை நடக்கப்போய்த் தன்னடையுங் கெட்டவகை யாகுந் தானே. ()

போரான கவிராச ருடன்சிறிய கவிகளுமோர் ப்ரபந்தஞ் செய்வார், வீராதி வீருடன் கோழைகளும் வாள்பிடித்து விருது சொல்வார், பாராளுந் தண்டலைநீ ணெறியாரே யிருவகையும் பகுத்துக் காணில், ஆராயு மகதேவ ராடிடதுப் பேய்களுநின் றாடு மாறே. (எகூ)

செழுங்கள்ளி நிறைசோலைத் தண்டலைநீ ணெறியாரே திருடிக் கொண்டே, எழுங்கள்ளர் நல்லகள்ளர் பொல்லாத கள்ளரினி யாரோ வென்றால், கொழுங்கள்ளர் தம்முடன்கும் பிடுங்கள்ளர் திருநீறு குழைக்குங் கள்ளர், அழுங்கள்ளர் தொழுங்கள்ள ராசாரக் கள்ளரிவ ரைவர் தாமே. (அ0)

தனத்திலே மிகுத்தசெழுந் தண்டலையார் பொன்னிவளந் தழைத்த நாட்டில், இனத்திலே மிகும்பெரியோர் வாசகுமன மொன்றாகி யெல்லாஞ் செய்வார், சினத்திலே

மிகுஞ்சிறியோர் காரியமோ சொல்வதொன்று செய்வ தொன்று, மனத்திலே பகையாகி யுதட்டிலே யுறவாகி மடி வர் தாமே. (அ௧)

தேரோடு மணிவீதித் தண்டலையார் வளங்காணுந் தேச மெல்லாம், போரோடும் விறல்படைத்து வீராதி வீரரென்னும் புகழ் பெற்றார், நேரோடு முலகத்தோ டொன்றுபட்டு நடப்பதுவே நீதி யாகும், ஊரோட வுடனோட நாடோட நடுவோட லுணர்வு தானே. (அ௨)

இழைபொருத்த முலைபாகர் தண்டலையார் வளநாட்டி லெடுத்த ராகம், தழுதழுத்துப் பாடுவதின் மௌனமா யிருப்பதுவே தக்க தாகும், குழைகுழைத்த கல்வியினுங் கேள்வியினுங் கல்லாமை குணமே நாளும், வழுவழுத்த வுறவதனின் வயிரம்பற் றியபகையே வண்மை யாமே. (அ௩)

அருப்பயிலுந் தண்டலைவாழ் சிவனடியா ரெச்சுலத் தோரானு லென்ன, உருப்பயிலுந் திருநீறுஞ் சாதனமுங் கண்டவுட னுகந்து போற்றி, இருப்பதுவே முறைமையல்லா லேழையென்றுஞ் சிறியரென்று மிகழ்ந்து கூறின், நெருப் பினையே சிறிதென்று முன்றானை தனின்முடிய நினைந்த வாறே. (அ௪)

உரங்காணும் பெண்ணாசை கொடிதாகும் பெண்புத்தி யுதவா தாகும, திரங்காணும் பெண்வார்த்தை தீதாகும் பெண்சென்மம் சென்ம மாமோ, வரங்காணுந் தண்டலைநீ ணெறியாசே பெண்ணிடத்தின் மயக்கத் தாலே, இரங் காத பேருமுண்டோ பெண்ணென்ற வுடன்பேயு மிரங்குந் தானே. (அ௫)

மையிலே தோய்ந்தவிழி வஞ்சியரைச் சேர்ந்தவர்க்கு மறுமை யில்லை, மெய்யிலே பிணியுமுண்டாங் கைப்பொரு

ளுங் கேடாகி விழல ராவார், செய்யிலே வளர்ந்தழைத்த தண்டலையார் வளநாட்டிற் றெளிந்த தன்றோ, கையிலே புண்ணிருக்கக் கண்ணாடி பார்ப்பதென்ன கருமந் தானே. ()

காலமறி தண்டலையார் வளநாட்டிற் கொலைகளவு கள்ளே காமம், சாலவருங் குருநிந்தை செய்பவர்பான் மேவியறந் தனைச்செய் தற்கும், சீலமுடை யோர்நினையார் பனையடியி லேயிருந்து தெளிந்த வாவின், பாலினையே குடித்தாலுங் கள்ளென்பார் தள்ளென்பார் பள்ளென் பாரே. (அஎ)

கைக்கெட்டா தொருபொருளுங் கண்டவர்க்கு நகையாகுங் கனமே யில்லை, இககட்டாம் வருவதெல்லாம் லாபமுண்டோ கவறுகையி லெடுக்க லாமோ, திக்கெட்டே றியகீர்த்தித் தண்டலையார் வளநாட்டிற் சிசி யென்னச், சொக்கட்டா னெடுத்தவர்க்குச் சொககட்டான் சூதுபோல லாச் சூது தானே. (அஅ)

தனமேவும் புற்றடிமண் குருந்தடிமண் பிரமகுண்டந் தன்னி லேய்மண், மனமேவு மணியுடனே மந்திரமுந் தந்திரமு மருநது மாகி, இனமேவுந் தணடலையார் தொண்டருக்கு வந்தபிணி யெல்லாந் தீர்க்கு, அனுபோகந் தொலைந்தவுடன் சித்தியாம் வேறுமுள வவிழ்தந் தானே. (அகூ)

கானமருங் கவரிமயொரு மயிரபடினு மிறக்குமது கழுதைக் குண்டோ, மானமுடன் வாழ்பவனே மாபுருஷன் சுயோதனனை மறந்தா ருணடோ, ஆனகஞ்சே ரொலிமுழங்குந் தண்டலையா ரேசொன்னே னரைக்கா சுக்குப, போன வபி மானமினி யாயிரம்பொன் கொடுத்தாலும் பொருந்திடாதே. (கூ0

நிலைசேரு மதிகவித ரணசுமுக துரைகளுட னேசமாகிப, பலநாளு மேயவரை யடுததவர்க்குப் பலனுண்டாம்

பயமு மில்லை, கலைசேருந் திங்களணி தண்டலையா ரேசொன்னேன் கண்ணிற் காண, மலைமீதி லிருப்பவரை வந்து பன்றி பாய்வதெந்த வண்ணந் தானே. (௩௰௧)

பொறுமையுட னறிவுடையா ரிருந்தவிடம் விளக்கேற்றிப் புகுத வேண்டும், செறுவமுட னகந்தையுள்ளா ரிறுமாந்து நடந்துதலை கீழாய் வீழ்வார், வறுமையினு மறுமையினுங் காணலாந் தண்டலையார் வாழு நாட்டில், நிறைகுடமோ தளும்பாது குறைகுடமே கூத்தாடி நிற்ப தாமே. ()

ஞாலமுறு நல்லவர்க்குச் செல்வம்வந்தா லெல்லவர்க்கு நாவலோர்க்கும், காலமறிந் தருமையுடன் பெருமையறிந் துதவிசெய்து கனமே செய்வார், மாலறியாத் தண்டலைநீ ணெறியாரே யவரிடத்தே வருவார் யாரும், ஆலமரம் பழுத்தவுடன் பறவையின்பாற் சீட்டெவரே யனுப்பு வாரே. (௩௰௩)

சேணிலகு மதிச்சடையார் தண்டலையார் வளநாட்டிற் சிறந்த பூணிற, காணவரு நாணுடையார் கனமுடையா ரல்லாதார் கருமமெல்லாம், ஆணவலம் பெண்ணவல மாடியகூத் தவலமென வலைந்து கேடாம், நாணமில்லாக் கூத்தியர்க்கு நாலுதிக்கும் வாயிலெனு நடத்தை யாமே. (௩௰௪)

அடுத்தமனை தொறுப்புகுவாள் கணவனுணு முனமூண்பா ளடக்க மில்லாள், கடுத்தமொழி பேசிடுவாள் சிறுதனந்தே டுவளிவளைக் கலந்து வாழ்தல், எடுத்தவிடைக் கொடியாரே தண்டலையா ரேயெவர்க்கு மின்ப மாமோ, குடித்தனமே கெடவேண்டிப் பிடாரிதனைப் பெண்டுவைத் துக கொண்ட தாமே. (௩௰௫)

களித்துவருஞ் செல்வருக்கு வலிமையுண்டு மிடியருக்குக் கனந்தா னுண்டோ, வளைத்தமலை யெனுஞ்சிலையார் தண்

டலைசூழ் தருமூலக வழக்கம் பாரீர், ஒளித்திடுவர் தம்பனை யிற் பெண்டீரைக் கண்டவரு மொன்றும் பேசார், இளைத் தவன்பெண் டென்று மெல்லார்க்கு மசினியா மியப்பு வாரே. (கூசு)

சோர்ந்தவரும் பசித்தவரும் விருந்தினரும் விரகினரு நோயுள் ளோருந், தந்தமது வருத்தமல்லாற பிறருடைய வருத்தமது சற்று மெண்ணார், இந்துலவுஞ் சடையாரே தண்டலையா ரேசொன்னே னீன்ற தாயின், அந்தமூலக் குத் துவலி சவலைமக வோசிறிது மறுந்தி டாதே. (கூஎ)

ஆழியெல்லாம் பாலாகி யவனியெல்லா மன்னமய மானு லென்ன, சூழவரு மிரவலர்க்குப் பசிதீர வுண்டிருக்குஞ் சுக ந்தா னுண்டோ, ஏழுலகும் பணியவருந் தண்டலையா ரேசொ ன்னே னெந்த நாளும, நாழிநெல்லுக் கொருபுடவை விற் றாலு நிருவாண நாய்க்குத் தானே. (கூஅ)

கோச்சையிலே பாலுமுண்டோ கூத்தியர்க டம்மிடத் திற் குணந்தா னுண்டோ, துச்சரிடத் தறிவுண்டோ துச்ச ரெங்கே போனாலுந் துரையா வாரோ, நச்சரவத் தொடை யாரே தண்டலையா ரேயிந்த நாட்டல் லாமல், அச்சியிலே போனாலு மகப்பையைக் காசதன்மேல் லார்கொள் வாரே. (கூகூ)

நித்தமெழு நூறுநன்றி செய்தாலு மொருதீது நேரே வந்தால், அத்தனையுந் தீதென்பார் பழிகருமக் கயவர்குண மகற்ற லாமோ, வித்தகஞ்சேர் தண்டலையார் வளநாட்டிற் சாம்பலிட்டு விளக்கினாலும், எத்தனைசெய் தாலுமென்ன பித் தளைக்குத் தன்னுற்ற மியற்கை யாமே. (கoo)

பழமொழிவிளக்கமென்னும் தண்டலையார் சதகம்

முற்றிற்று.

## சில பிரதிகளிலே அதிகமாகக் காணப்படும் பாடல்கள்.

வம்பரெல்லா மாதிக்க மிருந்திருந்தா லென்னவது மாறி யேயந்த,பம்பரமாய் மூலையினிற் கிடந்திட்டா லென்ன வதிற் பலனுண் டாமோ, கம்புலவுந் தண்டலையார் வளநாட் டில் வருந்துபல கழுதை தாமும், அம்புவியிற் கிடந்தென்ன பாதாளந் தனிற்கிடந்தென் ணுருந் தானே. (க)

தண்டலையா ரடிபணிந்து தவந்தான முபகாரந் தருமஞ் செய்து, கொண்ட பொருள் விலைவாசி காணித்தே டிக்கோடி கொடுப்ப தல்லால், வண்டருமா யொன்றுபத்து விலைகூறி யநியாய வட்டி வாங்கிக், கண்டவர்தங் கடுந்தேட்டுக் கண் ணையறக் கெடுக்குமிது கருமந் தானே. (உ)

இதுகரும மிதனாலே யிதைமுடிப்பா யெனத்தொழிலை யெண்ணிச் செய்தால், அதுகருமம் பாரமற் றிருடியுமள் ளியும் புரட்டா யலைவ தெல்லாம், மதியணியுந் தண்டலை யார் வளநாட்டி னீரம் மாதர் தங்கள், முதுகினைத்தே யெனச் சொன்னால் முலைமீது கையையிட்ட முறைமை தானே. (ந)

பார்க்குளறி விருந்தாலும் படித்தாலுங் கேட்டாலும் பணிந்து வேத, மார்க்கமுட னடந்தாலுஞ் சிறியவர்க்குப் பெரியவர்த மகிமை யுண்டோ, ஆர்க்குமருங் கதியுதவுந் தண்டலையா ரேசொன்னே னாகா யததில், ஊர்க்குருவி தானு யரப் பறந்தாலும் பருந்தாகா துண்மை தானே. (ச)

வல்லமையான் முடிவதுண்டோ தலைகீழாய் நின்றாலும் வருவ துண்டோ, அல்லதுதா னவன்செயலே யல்லாம றன்செயலா லாவ துண்டோ, புல்லறிவான் மயங்காம

றண்டலையா ரடிபணிந்து புத்தி யுண்டாய், இல்லதுவா ராது நமக் குள்ளதுபோ காதெனவே யிருக்க லாமே. (ரு)

பேருரைகண் டறியாது தலைச்சுமையே கேள்சுமந்து பிதற்று வோனும், போரினடந் தறியாது பதினெட்டா யுதஞ்சுமந்த புல்லி யோனும், ஆரணிதண் டலைநாத ரகமகிழாப் பொருள்சுமந்த வறிவி லோனும், காரியமொன் றறியாக்குங் குமஞ்சுமந்த கழுதைக்கொப் பாவர் தாமே. (சு)

கற்பூர வல்லியொரு பாதர்செழுந் தண்டலையார் கடலேழ் சூழ்ந்த, நற்பூமி தனிற்பிறந்தோ ரெல்லோரு மக்களென நாட்ட லாமோ, அற்பூரும் பண்புடையார் நற்குணமும் பண்பிலா ரழகுங் காணிற், பொறபூவில் வாசனையும் புன்முருக்கம் பூவுமெனப் புகல லாமே. (எ)

சலியாமற் றண்டலையிற் றூயகனா ரருள்கொண்டு தருமஞ் செய்யப், பொலிவாகிக் கொழுமீதில் வந்தபொரு ளீந்தவைதாம போக மீந்தால், மலிவாகிச் செல்வமுண்டாம் வயன்முழுதும் விளைந்திடுநன் மாரி யாகும், கலியாணப் பஞ்சமில்லை களப்பஞ்ச மில்லையொரு காலுந் தானே. (அ)

இரக்கத்தா லுல்காளுந் தண்டலையா ரேசிவனே யெந்த நாளும, இரக்கத்தான் புறப்பட்டே ரென்றனையு மிரக்கவைத்தீ ரிதனை யென்ன, இரக்கத்தா னதிபாவ மிரப்பதுதீ தென்றுனு மிளமை யாலே, இரக்கபோ னுமவர் சிறக்கப்போவதுகரும மென்ன லாமே. (கூ)



தண்ட

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

## சதகத் திரட்டு

[முதல் பாகம்: விலை அணா 9]

இதிலடங்கிய ஏழு சதகங்களின் பெயர்:

1 அறப்பளீசுர சதகம்.
2 குமரேச சதகம்.
3. திருவேங்கடசதகம்.
4. தண்டலையார்சதகம்.
5. கோவிந்த சதகம்.
6. எம்பிரான் சதகம்.
7. சிவசங்கர சதகம்.

[இரண்டாம் பாகம்: விலை ரூபா 1]

இதிலடங்கிய பத்து சதகங்களின் பெயர்:

1. கைலாசநாதர் சதகம்.
2. ஜெயங்கொண்டார் சதகம்.
3. குருநாத சதகம்.
4. அவையாம்பிகை சதகம்.
5. அருணாசல சதகம்.
6 அண்ணாமலைச் சதகம்.
7. வடவேங்கடநாராயண சதகம்.
8. தொண்டைமண்டல சதகம்.
9 கோகுல சதகம்.
10. திருத்தொண்டர் சதகம்.

## கட்டளைப் பிரபந்தம்

விலை அணா 8.

இதிலடங்கிய 14 கட்டளைகளின் பெயர்:

1 நாநாஜீவவாதக் கட்டளை.
2. ஞானக் கட்டளை.
3. தத்துவாமிர்தக் கட்டளை.
4 வேதாந்ததத்துவக் கட்டளை.
5. வேதாந்தசசாவத்தைக்கட்டளை
6 வேதாந்த தசகாரியக்கட்டளை.
7. உபதேச சித்தாந்தக் கட்டளை.
8. உபதேச உண்மைக் கட்டளை.
9. பிரமோபதேசக் கட்டளை.
10 சிவப்பிரகாசக் கட்டளை.
11. திருவாலவாய்க் கட்டளை.
12 சித்தாந்தக் கட்டளை.
13. சித்தாந்த சாதனக் கட்டளை.
14. சித்தாந்ததசகாரியக்கட்டளை.

## நீதி நூற் கொத்து.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை, வாக்குண்டாம், நல்வழி நன்னெறி: இவை மூலமும், உரையும் [ஒரே கட்டடம்] விலை அணா 6.

ஸ்ரீராமஜயம்.

நாராயணபாரதியார்

இயற்றிய

# கோவிந்த சதகம்.

இஃது

மகாவித்வான்

காஞ்சீபுரம்-இராமசாமிநாயுடு அவர்களால்

பார்வையிடப்பெற்றது.

---

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி. சென்னை.

---

[2-வது பதிப்பு]

1917

விலை ணை 9

ஸ்ரீ:

ஸ்ரீராமஜயம்.



# கோவிந்த சதகம்.

## காப்பு.

### கட்டளைக்கலித்துறைகள்.

மாவேழங்கூப்பிடவந்தாயுலகவழக்கச்சொல்லென்
பாவேறயானுனக்கோர்சதகஞ்சொலப்பாரதியென்
நாவேறவாழ்த்துகின்றேனுனைக்காத்தருணான்முகற்கும்
கோவேசக்ராயுதனேயச்சுதானந்தகோவிந்தனே.

---

## நூல்.

### படிக்காச னிருந்தாற் குடிக்குச் சேதமில்லை.

சேடிக்கொருவேங்கைகுடிகொண்டகாடெனத்தேசத்திலே
அடிக்கொருதீம்புசெய்வாரைத்துரந்தரசாளவிந்தப்
படிக்கொருமன்னனுண்டானாலுழுதுபயிரிடுமக்
குடிக்கொருசேதமுண்டோவச்சுதானந்தகோவிந்தனே. (க)

### கோட்டினுற் றேள் கோட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சி.

கட்டாண்மைவேந்தர்பொறுமையெண்ணுதவன்கண்ணரடி
பட்டாலல்லாமல்வணங்கார்விடமுட்படாமற்சும்மாத்
தொட்டாலதுபிள்ளைப்பூச்சியென்பார்முட்சுறுக்கெனவே
கொட்டாமற்றேளென்பரோவச்சுதாநந்தகோவிந்தனே. (உ)

### புண்ணிலே கோலிட்டதுபோல.

பாலிட்டதாகியநீர்போற்கலந்துபகருங்கல்வி
நூலிட்டகேள்விக்குள்ளாவர்நல்லோரிருநூறுதரம்
மேலிட்டபுத்திசொன்னாலுங்கயவர்க்குவெந்தபுண்ணிற்
கோலிட்டவாறொக்குமேயச்சுதாநந்தகோவிந்தனே. (ஙு)

### மழுக்கட்டி பேர்க்கிற பன்றிக்குக் கொழுக்கட்டி விட்டதுபோல.

கழுக்கட்டியேற்றினுங்காசொன்றிலையெனக்கைவிரித்
தே, மழுக்கட்டியேந்தவல்லாரையுத்யோகத்தில்மன்னர்
வைத்தல், முழுக்கட்டிபேர்த்துக்கிழங்குண்ணும்பன்றியின்
மூஞ்சியிலே, கொழுக்கட்டிவிட்டதன்றோவச்சுதாநந்தகோ
விந்தனே. (ச)

### காலத்துக்குத் தக்க கோலம்.

நீலங்கவர்விடப்பாம்பைப்பிடாரனியமிக்கவே
ஆலங்கரந்திட்டெலியுடன்வாழுமரசர்க்கஞ்சிக்
காலங்கருதிவலியாரெளியரைக்காண்கிலனு
கூலரைபபோலிருப்பாரச்சுதாநநதகோவிநதனே. (ரு)

### குட்டிக்கரணம் போட்டாலுங் கொடுக்கிற தரிது.

தடிப்பார்புலியையும்பாம்பையும்வாய்கட்டித்தாங்கிக்கையா
லெடுப்பார்மழுவைத்தண்ணீர்மேனடப்பரெவருமெய்ச்ச
அடிப்பார்சபையினினூற்றெட்டடிக்கம்பத்தாடுவர்பொன்
கொடுப்பாரரியர்கண்டாயச்சுதாநந்தகோவிந்தனே. (சு)

### அயன் கணக்கு ஆருக்கும் தப்பாது.

ஆலிக்கவாழ்ந்துண்டிருந்தாலும்யார்க்குமயன்வகுத்த
சோலிக்கணக்கின்படி தப்புமோமெதாழுவார்க்குமுத்தி
பாலிக்கும்வெள்ளிமலையான்பிரம்படிபட்டுப்பிட்டின்
கூலிக்குமண்சுமந்தானசசுதாநந்தகோவிந்தனே. (எ)

### கொடுத்தாற் குறைவராது.

எடுத்தாலுமூறுமிறைத்தாலுமூறுமிடைநடுவே
மடுத்தால்மறிபடுமோமணற்கேணித்தண்ணீரதுபோல்
அடுத்தாரைவாழ்விக்கக்கல்வியுண்டானவரன்புடனே
கொடுத்தாற்குறைவருமோவச்சுதாநந்தகோவிந்தனே. (அ)

### குளத்துக்கு மழை குந்தாணிபோற் பெய்யுமா?

எந்தாயெனசசென்றிரப்பவர்க்கிபவரெள்ளளவு
தந்தாலும்போதுமிகமழவொன்றுதெங்குஞ்சஞ்சரித்து
வந்தார்பருகுங்குளத்துக்குப்பெய்யுமழைத்துளிகள்
குந்தாணிபோற்பெய்யுமோவசசுதாநந்தகோவிந்தனே. (கூ)

### கோடாலிக் காம்பு குலத்துக் கீனம்.

பீடார்குலத்தினிலாகாதபிள்ளைதற்பெற்றெடுத்ததோர்
வாடாதுவாடக்குலநாசமாக்கிடுமற்றது தான் [ம்
தாடாண்மையாளர்கைக்குள்ளாய்த்தருக்குலஞ்சாயவெட்டு
கோடாலிக்காம்பல்லவோவச்சுதாநந்தகோவிநதனே. (க0)

### அரைக் காசுக்குப்போன கற்பு ஆயிரங் கொடுத்தாலும் வராது.

எடுத்தாலும்பிசசையமுதுநன்றேறயில்லையாகிலுயிர்
விடுத்தாலும்வாசிநட்பிலவார்மனையில்விருந்தெனப்போய்
அடுத்தாவதேததரைக்காசுக்குப்போனகறபாயிரம்பொன்
கொடுத்தாலுந்தான்வருமோவச்சுதாநந்தகோவிநதனே. ()

### பொல்லாக் குணத்துக்கு நல்ல மருந்துண்டோ?

உணத்தக்கநன்மருந்தாற்பிணிபோமென்றுலகிலுள்ளோர்
பணத்துக்குக்கொண்டுபரிகரிப்பார்விடம்பாய்நதுசெதத
பிணைததுக்கும்பச்சிலையுண்டுபுலலோர்க்குப்பிறக்கும்பொல்
குணத்துக்குநன்மருந்தேததச்சுதாநந்தகோவிந்தனே. [லாக்

### கவி கொண்டார்க்குங் கீர்த்தி கலைப்பார்க்குங் கீர்த்தியா?

மலைப்பாற்குறுமுனிபோலுமபுலவர்வடிதததமிழ்,விலைப்பாற்படுத்திற்கொள்வார்க்குண்டுகீர்த்தி விதண்டைசெய்து, கலைப்பார்க்குமபேய்கொண்டநாய்களைப்போர்பல்லைக்காட்டி நின்று, குலைப்பார்க்குங்கீர்த்தியுண்டோவச்சுதாநந்தகோவிந்தனே. (கங)

### வெள்ளாட்டிமேற் சன்னதம் வந்தால் விழுத்து விழுந்து கும்பிடவேண்டும்.

எள்ளாடும்வாணியர்செக்கடித்துண்டிடுமீனரென்று
விள்ளாரவர்க்குப்பவிஷுவந்தானிதம்வேலைசெய்யத்
தள்ளாதடிபடும்வெள்ளாட்டிமேற்சன்னதங்கும்பிடு
கொள்ளாமற்போவதுண்டோவசசுதாநந்தகோவிந்தனே. ()

### கெடுப்பாரைத் தெய்வங் கெடுக்கும், கொடுப்பாரைத் தடுக்கலாகாது.

உடுப்பாருண் பார்தமைப் போனிலை யாதொரு வன் பிழைபவைக், கெடுப்பாரைத் தெய்வங் கெடுக்குமென் றே சொல்லக் கேட்டிருந்தும், விடுப்பாரன் றேபுல்லர் துர்க்குண முற்றும் விதரணத்தார், கொடுப்பார் தமைத்தடுப் பாரச்சுதாநந்த கோவிந்தனே. (கரு)

### தோட்டத்து நரி கூட்டத்திலே வராது.

நாட்டம்பணத்தில்வைக்குங்கள்ளலோபர்நன்னுவலர்கள்
ஈட்டந்தனைக்கண்டுகிட்டுவரோவிரைதேடிமனைத்

தோட்டம்புகுநரியஞ்சாமனெஞ்சந்துணிந்துசந்தைக்
கூட்டந்தனில்வருமோவச்சுதாநந்தகோவிந்தனே. (கரு)

நாய்வாலைக் குணக்கெடுக்க ஆராலாகும்?

இணக்காதிரார்வல்லிரும்பொடிந்தால்வைத்திருதலையும்
வணக்காதிரார்வின்னிமிர்ந்ததென்றேற்புல்லர்மாறுபடும்
பிணக்கார்தடுப்பவர்நாய்வாலைநிளப்பிடித்திழுத்துக்
குணக்காரெடுக்கவல்லாரச்சுதாநந்தகோவிந்தனே. (கஎ)

குளப்படி நீரிறைத்தாற் கடற்பள்ளம் நிரம்புமா?

இறைமுறையேழைக்குடிகளைநோவச்செய்தேபசும்பொன்
அறையிடும்பொக்கசநதானிரம்பாதரசர்க்கியல்போ
நிறைகடற்கென்னகுறைவோகுளப்படிநீரிறைத்துக்
குறைவறச்செய்பவராரச்சுதாநந்தகோவிந்தனே. (கஅ)

எருதீன்றதென்றுற் கொட்டாயிற் கட்டென்பவருண்டு.

கிட்டியொருவன்றலைக்குளிரத்னங்கிளைத்ததென்றால்
வெட்டிவெளிசெய்யவேணுமென்றேவிரும்பார்பெரியோர்
எட்டினைமாத்திரம்புத்தியில்லாரெருதீன்றதென்றுற்
கொட்டிலுட்கட்டுமென்பாரச்சுதாநந்தகோவிந்தனே. (கக)

முத்து குலத்தாற் பெருமைப்படும், மூடர் குலத்தாற்
பெருமைப்படார்.

சலத்தால்விளைகின்றசிப்பியின்வாய்முத்தைத்தற்குலந்தான்
சொலத்தானெவருமிகழார்விரும்பித்தொகுத்தணிவார்
அலத்தாமதவறிவீனர்செனனமதாகியநற்
குலத்தாற்பெருமைபெறுரச்சுதாநந்தகோவிந்தனே. (உ0)

நாயைக் குளிப்பாட்டி நடுவீட்டில் வைத்ததுபோலாம்.

குளிப்பாற்றுரைகளறிவீனரைக்கைப்பிடித்துசெல்வம்
அளிப்பாரெனிற்பின்னகைக்கிடமாமென்றுமாவதில்லை

வெளிப்பாற்றிரிகின்றநாயானதைநடுவீட்டுக்குள்ளே
குளிப்பாட்டிவைத்தசெதாப்பாமச்சு தாநந்தகோவிந்தனே. ()

ஆண்டி கையில் அகப்பட்ட குரங்காய் அலைவார்.

வரங்காதலிக்குந்தவமுடையோர்வங்கணமெவர்க்கும்
உரங்காணுநன்மைபெறலாங்கயவருடன்கலந்தால்
அரங்காஞ்சபையிற்சடையாண்டிகையிலகப்பட்டதோர்
குரங்காயலைவர்கண்டாயச்சுதாநந்தகோவிந்தனே. (உஉ)

வம்புத் துரைத்தனத்தாரைக் கும்பிடத் தகுமோ?

செம்பிடுமேனியுருக்கொண்டதெய்வத்தைத்தெண்டமிட்டு
க்கும்பிடவேண்டுப்பதம்பெறலாகம்பினோர்க்குதவா
வம்பிடும்லோபத்துரைத்தனப்பேய்களைமன்னரென்று
கும்பிடவுந்தகுமோவச்சுதாநந்தகோவிந்தனே. (உங)

குருவிக்கூட்டைக் கோலாலே குலைப்பார்களா?

சோட்டைப்புனைந்துரணவேட்டையாடுநதுரைகடங்கள்
நாட்டைப்புரப்பதுஞாயங்கெடுப்பதுஞாயமன்றே
வீட்டுக்குணம்பியடைக்கலச்சிட்டுவெண்முட்டையிடும்
கூட்டைக்குலைபபர்களோவச்சுதாநந்தகோவிந்தனே. (உச)

பொன்னின் குடத்துக்குப் பொட்டிட்டுப் பார்க்கவேண்டுமா?

சடத்துக்கழகென்பர்தான்கற்றகல்விகருமதல்லால்
இடத்தக்கபூஷணந்தானணியாவிடிலேசுவரோ
புடத்துட்படத்தங்கக்கட்டியுருக்கிப்புதுக்கியபொற்
குடத்துக்குப்பொட்டழகேனச்சுதாநந்தகோவிந்தனே. ()

படியாள்வார் நீதிதப்பிற் குடியாரிருப்பார் குவலயத்தில்?

படியாளுமன்னர்மனுநீதிதப்பும்படிநடந்தால்
விடியாதுநாடுமழைபொழியாதுவிளைவுகுன்றும்
பொடியாம்பசும்புன்னெருப்பெழக்காபுடைப்பூமிதனிற்
குடியாரிருக்கவல்லாரச்சுதாநந்தகோவிந்தனே. (உரு)

### கோவுக்கழகு செங்கோல்.

பாவுக்கழகுபொருட்சுவைசொற்சுவைபன்மலர்ப்பூங்
காவுக்கழகுமயிலுங்குயிலுங்கண்டாய்கமலப்
பூவுக்கழகுமணமுந்திருவும்புவிபுரக்கும்
கோவுக்கழகுசெங்கோலச்சுதாநந்தகோவிந்தனே. (உஎ)

### தட்டுப்பட்டாலும் மோதிரக்கையாற் றட்டுப்படவேண்டும்.

மட்டுப்படாதவநுமாரசோகவனமழித்துக், கட்டுப்பட்டாரிந்த்ரசித்தன்கையாற்கர்த்தன்காரியத்தால், முட்டுப்பட்டாலுஞ்செயங்கொள்வராகிற்பொன்மோதிரக்கைக்,குட்டுப்பட்டாற்குறைவோவச்சுதாநந்தகோவிந்தனே. (உஅ)

### திக்குவிசயங் கொள்பவனுக்குஞ் செயாபசெயகாலந் தெரியாது.

இயல்புடன்றிக்குவிசயங்கொள்வேந்தரென்றாலுமப
செயம்வருங்காலந்தெரிபவரார்திருவுந்திறமும் [ய்க்
புயபெலமுன்னின்றவோவிக்ரமாதித்தன்போர்பொரப்பேர்
குயவன்கையான்மடிந்தானச்சுதானந்தகோவிந்தனே. (உகூ)

### பாலைப் புகட்டுவாள் பாக்கியத்தையும் புகட்டுவாளோ?

சலிக்கக்கணக்கென்னதான்பெற்றபிள்ளைக்குத்தாய்முலைப்
ஒலிக்கக்கனிந்தழவூட்டிவளர்ப்பள்பின்னூழ்வினையால்[பால்
பலிக்குட்படிலன்னையென்செய்வள்பாக்கியம்பாலடையில்
குலுக்கிப்புகட்டுவளோவச்சுதாநந்தகோவிந்தனே. (௩௦)

### எல்லை பாழ்பட்டாலுங் கொல்லைக் கடமைவிடார்.

சொல்லைப்புரட்டுங்கொடுங்கோன்மணியத்தர்தோஷமெண்
கல்லற்படுத்திக்குடிகளைநோவக்கணக்கெழுதி [ணார்
எல்லைக்குளாநிலம்பாழ்படினும்பிடித்தேருழுத
கொல்லைக்கடமைவிடாரச்சுதாநந்தகோவிந்தனே. (௩க)

கப்பலேறிப் பட்ட கடன் கோட்டை நூற்றே விடியும்?

இட்டுநோற்றுப்பிறந்தாற்செல்வமுற்றுமிடாதவிதி
பட்டுநூற்றுக்கிருந்தேயுழைத்தாலும்பலிசெய்துமோ
விட்டுநோக்குங்கப்பலோடியுமேவிடியாமலோயிற்
கொட்டைநூற்றேவிடியுமச்சுதாநந்தகோவிந்தனே. (கஉ)

மானுக் கொரு புள்ளி யேறினலென்ன
குறைந்தாலென்ன?

நிறைந்தேவருங்கபபலாயிரந்தம்மினின்றோர்கப்பல்
தான், மறைநதே திகைதப்பிற் றூழ்வென்றெண் ணோர்வர்த்த
கர்கள்வனத், துறைந்தேவளர்புள்ளிமானுக்குடம்பினிலோர்
புள்ளிதான், குறைந்தேதல்லான்மிகுந்தேதச்சுதாநந்தகோ
விந்தனே. (கங)

கங்கா நதியில் முழுகினலும்
காக்கை அன்னம் ஆமா?

ஒளித்தாலுந்தூர்க்குணம்போமோகுருவுபதேசமந்த்ரம்
அளித்தாலும்புல்லர்நல்லோராவரோசென்றடுத்தடுத்துக்
களித்தாயிரந்தரங்காகமுழுகிக்கங்காநதியிற்
குளித்தாலுமன்னமொவ்வாதச்சுதாநந்தகோவிந்தனே. ()

கொல்லை பாழானலும் குருவிக்கிரை பஞ்சமா?

தருவிற்பனமன்னர்கையிலைத்தாலென்னதம்மைநம்பி
மருவித்திரியுஞ்சனங்கள்பசிகொண்டுவாட்டமெய்தார்
பருவக்குறிப்பின்றிச்சாவிபட்டாலும்பயிர்க்கொல்லையிற்
குருவிக்கிரைபஞ்சமோவச்சுதாநந்தகோவிந்தனே. (கரு)

இராவுத்தனைத் தள்ளின குதிரை குழியும்
பறித்ததுபோல.

மொழியின்படிநடவாடன்கணவனைமோசஞ்செய்து
பழியுஞ்சுமக்கும்படிசெய்தனம்பப்படர்விசிகம்

பொழியுஞ்சமரிடைராவுத்தனைத்தள்ளிப்போட்டசுவம்
குழியும்பறித்ததொப்பாமச்சுதாநந்தகோவிந்தனே. (௩௬)

கொடிக்குக் காய் கனமா ?

அடித்தமுதூட்டிவளர்த்திடுந்தாய்தன்னகமெலிவாய்
மிடித்திடினும்பெற்றபிள்ளைகளைக்கைவிடநினையாள்
பொடித்தெழும்பிஞ்சுதிரளாயும்பாரம்பொறுக்கும்படர்
கொடிக்கென்னகாய்கனமோவச்சுதாநந்தகோவிந்தனே. ()

நெருப்பு சிறிதென்று முன்றானையில் முடியலாமா ?

தண்டாரணியும்மரசிளம்பாலகர்தம்மையெதிர்
கண்டாலிளையரென்றெண்ணவொண்ணாதுகண்டாரெவரும்
அண்டாநெருப்பைச்சிறிதென்றுமுன்றானையின்முடிந்து
கொண்டாலதுசுடுங்காணச்சுதாநந்தகோவிந்தனே. (௩௮)

மீன்குஞ்சுக்கு நீச்சுப் பழக்கவேண்டுமோ ?

பிஞ்சுப்பருவமுலைவிலைப்பெண்கள்பெறும்பொருட்கா
வஞ்சிக்கும்வித்தைகுலவித்தைதானேவருமவர்க்கு
விஞ்சுக்குளப்புனனீச்சுப்பழக்குவித்தாரெவர்மீன்
குஞ்சுக்குத்தற்குணங்காணச்சுதாநந்தகோவிந்தனே. (௩௯)

நீந்த அறியாதவனை ஆறிழுத்துக்கொண்டுபோம்.

விடுபோர்முகத்தில்நகைப்பாரெனச்சுத்தவீரர்சண்டை
இடுபோதொளித்துப்பிழையாமலாண்மையிலார்மதிகெட்
டடுபோரினிற்புகினீஞ்சறியான்றனையாறிழுத்துக்
கொடுபோனவாறொக்குமேயச்சுதாநந்தகோவிந்தனே. (௪௦)

முற்ற நனைந்தார்க்குக் குளிரில்லை.

தளிரேயனையமெய்ப்பெண்டீர்கணவன்றனையிகழ்ந்து
வெளியேபுறப்பட்டுக்கற்பழிந்தாற்பின்னைவெட்கமென்னை

நளிரே தரும்புனமேறுய்ந்துடம்பெங்குநனைந்தவர்க்குக்
குளிரேதப்பாலென்பரேயச்சுதாநந்தகோவிந்தனே. (சக)

நூற்றுக் கிருப்பவர்க் கைம்பதிற் சாவில்லை
நூற்றுக் கிருந்தாலும் கூற்றுக் கிரை.

சோற்றுக்கடன்கொண்டிருக்குஞ்சரீரந்தொலையுநில்லா
தாற்றுப்புனலிற்குமிழியைப்போலென்றமுங்கிலென்றும்
நூற்றுக்கிருப்பவர்க்கைம்பதிற்சாவில்லைநூற்றுக்கப்பால்
கூற்றுக்கிரையென்பரேயச்சுதாநந்தகோவிந்தனே. (சஉ)

நன்றி செய்த கீரியைக் கொன்ற பழங் கதைபோல்.

நன்றிசெய்தாரென்றறியாமற்றீங்குநமக்குச்செய்தா
ரென்றுசெருக்கவொண்ணுதுகுழந்தையிளந்தசையைத்
தின்றெதிர்வந்தநகீரியென்றந்தணன்றேவிமுன்னாள்
கொன்றபழங்கதையாமச்சுதாநந்தகோவிந்தனே. (சங)

கரையான் புற்றில் அரவங் குடிகொண்டதுபோல்.

அடிகொண் டளந்திட்டுக் கோட்டை யரண்செய்தென் ஞண்மையில்லார், கெடிகொண்ட வேந்தர்கைக் கொள்வா ரவரைப்பின் கிட்டவொட்டார், படிகொண்ட மண்ணிற் கரையா னிடும்புற்றிற் பாம்புவந்து, குடிகொண் டிருப்பது வாமச்சு தாநந்த கோவிந்தனே. (சச)

பன்றிக்குட்டிக் கொருசந்தியேன்?

தேட்டிப்பறிக்கின்றவேசியர்வீட்டிற்றிரிந்தலையு
மட்டிக்குக்குலாமருக்காசாரமேன்றெய்வவந்தனையேன்
பட்டிக்கொழுங்கியடிபடுமூர்க்கரும்பன்றியிட்ட
குட்டிக்கொருசந்தியேனச்சுதாநந்தகோவிந்தனே. (சரு)

அப்பருக்குப் பவிஷுவந்தால் அர்த்தராத்திரியிலுங்
குடைபிடிக்கச் சொல்வார்.

நடைகற்குமுன்னங்கொடைகற்றபேர்க்குநடக்கைவந்தாற்
புடையுற்றெவருந்துதிக்கவணங்கிப்புகழ்பெறுவார்

அடையற்பருக்குப்பவிஷ—வந்தாலர்த்தாத்ரியினுங்
குடையைப்பிடியென்பர்காணச்சுதாநந்தகோவிந்தனே. ()

**பிடாரியைப் பெண்டுவைத்துக் கொண்டவன் பேயன்.**

கண்டனுக்கேற்றவளாக்குலமானுஷிக்கற்பினளாத்
தெண்டனைக்கஞ்சிநடப்பவளாமணஞ்செய்வதல்லாற் [க்
பிண்டமுந்துண்டமுநேர்ந்தேபிடாரியைப்பெண்டுவைத்து
கொண்டவன்பேயனன்றோவச்சுதாநந்தகோவிந்தனே. ()

**கொழுமீதிகொள்ளும் குடிச்செல்வமே செல்வம்.**

பொடிச்செல்வம் யாசகச் செல்வம் கொடுமைப் பொரு
ட்செல்வமோர், நொடிச்செல்வ மீதலில் லாச்செல்வம்
வீண்செல்வ நூற்றுக்குமே, மிடிச்செல்வ மின்றிச் சுகசீவி
யாக்கொழு மீதிகொள்ளும், குடிச்செல்வ மேசெல்வங்
காணச்சு தாநந்த கோவிநதனே. (சஅ)

**கசக்கி முகரலாகாது.**

வண்டானதுமெள்ளப்பூமணங்கொள்ளும்வகையதுபோற்
பெண்டாசையுள்ளவர்காமசம்போகம்பெறுவதல்லாற்
கண்டாதரவின்மலரெடுத்தேகசக்கிம்முகர்ந்து
கொண்டானமணந்தருமோவச்சுதாநந்தகோவிந்தனே. ()

**தானே கனியாத காய் தடிகொண்டடித்தாற் கனியாது.**

அண்டினர்க்கீபவர்தாமேதருவதல்லாதிரப்போர்
தெண்டனைக்காகக்கொடுப்பதுண்டோசெழுங்காய்மரத்திற்
கண்டிடிற்றானேகனியாதமுன்கனியத்தடிகைக்
கொண்டடித்தாற்கனியாதச்சுதாநந்தகோவிந்தனே. (௩0)

**கிளியை வளர்த்துப் பூனைகையிற் கொடுப்பாருண்டா?**

விடுப்பார்பிழைக்கும்வழியினல்லோரன்றிவேறுபடக்
கெடுப்பார்வசஞ்செய்வரோநம்பினோரைக்கிளிப்பிள்ளையை

எடுப்பார்கையாரவளர்ப்பதல்லாலெட்டிப்பூனைகையிற்
கொடுப்பாருலகிலுண்டோவச்சுதாநந்தகோவிநதனே. ()

எய்தவனிருக்க அம்பை நோகலாமா?

உண்டானகுற்றஞ்சகியாமல்வேந்தனுத்தாரமிட்டால், திண்டாடத்தெண்டனை செய்வார்க்குக்குற்றமுந்தெண்டமுமோ, அண்டாமல்விற்பிடித்தெய்தோனிருக்கக்கண்டம்பைநொந்து, கொண்டாலவ்வம்பென்செயுமசசுதாநந்தகோவிந்தனே. (ருஉ)

ஒரு புத்திரனும் குருபுத்திரனுகான்.

வருபுத்ரவாஞ்சைசயிற்றெய்வத்தைவாழ்த்திவணங்கிவரந்
தருபுதரனைப்பெறிற்காவடிகடடித்தன்றாய்தந்தையை
ஒருபுத்ரனேனுஞ்சுமந்ததுண்டோவுலகம்புகழக்
குருபுத்ரனேசுமந்தானச்சுதாநந்தகோவிந்தனே. (ருங)

கொக்கரிப்பார்க்கா சொர்க்கம்
தீயில் குதிப்பவர்க் கல்லவோ சொர்க்கம்.

கதிப்பா னடத்துங் குதிரையும் யானையுங் காற்பலமும், மதிப்பா லிகல்சுத்த வீரர்க்குச் சொர்க்கம் வருவதுபோல், துதிப்பார்க்கும் கொக்கரிப் பார்க்குமுண் டோதுணிந்தேநெருப்பிற், குதிப்பா ளொருதிக்கன் றோவச்சு தாநந்த கோவிந்தனே. (ருச)

பரத்தைக்குக் கொடுக்கும் பணயத்தைக்
குடிப்பெண் வாங்கிக் குலங்கெடுவாளா?

மிடியிற்கொடுமைக்கிரப்பதல்லாற்குலமேன்மைகுன்றப்
படியிற்பசும்பொன்றரிற்கொள்வரோபரிவாற்பெரியோர்
கொடியபரத்தையர்க்குக்கொடுக்கும்பணயங்கொளென்றாற்
குடியிற்பெண்வாங்குவளோவச்சுதாநந்தகோவிந்தனே. ()

கொடுங்கோல் அரசர்க்கீழ்க் குடியிருக்கலாகாது.

திறமுஞ்செங்கோலுமுளமன்னர்நாட்டிற்சிந்தாகுலந்தீர்ந்
துறவுங்குடிசதமென்றிருப்பார்பயிரிட்டுண்பர்காண்
அறவுங்கொடுமைசெயுமன்னர்சீமைக்குள்ளாமிருப்புக்
குறவன்குடியிருப்பேயச்சுதாநந்தகோவிந்தனே. (௫௬)

நல்லவர் கண்ணிற்பட்ட நாகமுஞ் சாகாது.

பல்லால்விடங்கக்குநாகந்திகைத்துப்பயநதொதுங்கி
நல்லார்கண்காணவந்தாலுங்கொல்லார்நண்ணலார்வரினும்
பொல்லாதவரிவரென்னார்மனம்பொறுத்தேயவரைக்
கொல்லாமற்றுங்குவர்காணச்சுதாநந்தகோவிந்தனே. (௫௭)

புலையனுக்கு வாக்கு சுத்தியும் ஆணையுமில்லை.

செல்வாய்ப் படும்பனை யேட்டெழு தாமறைச் செம் மொழிபோற், சொல்வார்சொ னம்பத் தகுவதல் லாமற் சொல் லைப்புரட்டும், வல்வாய்ப் புலையர்சொ னம்புவ ரோ நித மாடுதின்னக், கொல்வார்க்கொ ராணையுண் டோவச்சு தாநந்த கோவிந்தனே. (௫௮)

பனங்காட்டி லிருந்துகொண்டு பாலைக்குடித்தாலும் கள்ளென்பார்கள்.

மிடித்தாலுமெத்தப்பசித்தாலுநல்லவர்மேறைதப்பி
வடித்தாயிரந்தரங்கட்குடிப்பார்மனைவாசல்புகார் [போய்க்
படித்தார்கள்கள்ளிறக்கும்பனங்காட்டினிற்பால்கொண்டு
குடித்தாலுங்கள்ளென்பரேயச்சுதாநந்தகோவிந்தனே.

பட்சி பசித்தாலும் எட்டிக்கனியைத் தின்னுது.
கொள்ளிகொண்டு தலை சொறிந்துகொள்ளார்.

தெள்ளாரமுதக்கடற்கரையெட்டிச்செழுங்கனியைப்
புள்ளானதுபசிகூர்ந்தாலுமேபுசியாதுகண்டாய்
தள்ளாதுகொள்ளிகொண்டேதினவென்றுதலைசொறிந்து
கொள்ளாரெவருஞ்சொன்னேனச்சுதாநந்தகோவிந்தனே.

பூவிற்குங் கடையிலே புல்லு விற்பதுபோல.

தேறியமானுஷ்யமுள்ளோர்பெருமைசிறுமைபட
மாறியவினையிருத்திக்குள்ளாய்நின்றுவாழ்வரென்றால்
வீறியபூமலர்விற்குங்கடையிற்புல்விற்கவிலை
கூறியவாறெக்குமேயச்சுதாநந்தகோவிந்தனே. (கூக)

குங்குமஞ் சுமந்த கழுதை மணமறியாது.

தமத்திலொளிசெய்யும்பொற்பூஷணங்கடலைச்சுமையாய்ச்
சுமத்தலுமாதர்க்கழகோகணவறனெழாதிருந்தால்
கமத்திற்பொறிசுமையாய்ச்சுமந்தாலென்கழுதையுங்கு
குமத்தின்மணங்கொள்ளுமோவசசுதாநந்தகோவிந்தனே.()

பெருமாள் நினைத்தால் வாழ்வு குறைவா?
பிரமா நினைத்தால் ஆயுசு குறைவா?

நிறையாயரசன்றயவுசெய்தாற்கலிநீங்கியிளம்
பிறையாவளர்ந்துநிரம்புநல்வாழ்வுபிரியப்பட்டு
மறையால்விளங்கும்பிர்ம்மாநினைந்தால்வர்த்திக்கும்வயது
குறையாதெனச்சொல்வரேயச்சுதாநந்தகோவிந்தனே. ()

தம்மினந் தம்மைத் தாங்கும்.
முலை சரிந்தால் வயிறு தாங்கும்.

தம்மினமானவர்கையிலைத்தேசரணென்றடைந்தால்
வம்மினென்றுதரிக்கத்தகுந்தள்ளவழக்கல்லவே
விம்முமென்கொங்கைசரிந்தேவயிற்றில்விழிலதுதாங்
கும்மெனச்சொல்லுவரேயச்சுதாநந்தகோவிந்தனே. (கூச)

கழுதைக்கு விரிகட்டினதினாலே குதிரையாமா?

சதிசெய்யுநீவியைப்பெண்ணென்றுகொள்ளிற்றனதுகெடு
மதியதுவாமவண்மேற்குறையில்லைவையாளிவிட்டால்
கதிபெறவோநடவாவிரிகட்டுங்கழுதையைநற்
குதிரையென்றேற்றங்கொள்ளாரச்சுதாநந்தகோவிந்தனே.

ஏர் பிடித்தவன் என்ன செய்வான்
பானை பிடித்தவள் பாக்கியம்.

பெண்டாட்டியில்லவள்வந்தமுகூர்த்தம்பெருகுஞ்செல்வம்
உண்டவள்வாழுமனையிலெந்நாளுமுடுக்கைபொற்பூண்
பண்டமிலையெனிற்பானைபிடித்தவள்பாக்கியமேர்
கொண்டவனென்னசெய்வானச்சுதாநந்தகோவிந்தனே. ()

உடும்பு போனாலும் போகட்டும்
கையைவிட்டாற் போதும்.

அடும்பழிகாரனைவெட்டாமல்மன்னித்தனுப்பிவிட்டால்
தொடும்பழிபேசவழக்குமுண்டோதொடர்ந்தேபிடித்த
உடும்பதுபோயினும்போகட்டுங்கைவிடென்றுண்மைசொல்
கொடும்பழியேன்சுமப்பாரச்சுதாநந்தகோவிந்தனே. [வோர்

*கரும்பு ருசியென்று வேரோடே பிடுங்கலாகாது.

வள்ளலெனத்தருந்தாதாவென்றேதினம்வருந்துவந்து
கள்ளமனத்திற்பொருள்கேட்கொணுதுகண்டாய்திரளா
யுள்ளகரும்புதித்திப்பெனவேருடனேபிடுங்கிக்
கொள்ளநினைப்பர்களோவச்சுதாநந்தகோவிந்தனே. (சு அ)

அழிந்த நந்தவனத்திலே
அசுவ மேய்ந்தென்ன கழுதை மேய்ந்தென்ன?

விதிமுறைநீதிசெங்கோல்கெடத்தேசமெலிந்தலைய
மதிலரண்செய்தலெவர்க்காகநந்தவனமழிந்தால்
எதிரெதிரோடிக்கழுதைகள்மேயிலென்னேற்றந்தரும்
குதிரைகள்மேய்நதிடிலென்னச்சுதாநந்தகோவிந்தனே. ()

ஆடு கொழுக்கிறது இடையனுக்கு லாபம்.

செழித்திடுஞ்செல்விபிறந்தகம்போய்த்திரும்பாமையினல்
கழுதகிடுதாலிக்கையாற்கட்டினேன்பலகாலும்வந்தே

அழைத்திடக்கூட்டிவிடாரேவிடையனுக்காடுநன்றாய்க்
கொழுத்தவிலாயமன்றேவச்சுதாநநதகோவிந்தனே. (எ0)

பன்றியின் பின்போன பசுக்கன்றும் மலந் தின்னும்.

பன்றியுடனுறவாகப்பழகினும்பாற்பசுவின்
கன்றுமலத்தைபபுசிக்குமென்பாரக்கதையதுபோல
சென்றுறவாடிக்கயவர்பின்னேதிரிந்தாலறிவு
குன்றும்வசைக்கிடமாமச்சுதாநந்தகோவிந்தனே. (எக)

கொள்ளைக்குப் போனலுங் கூட்டாகாது.

தேட்டாளர்தம்மிச்சையாய்த்தேடுவர்பொருள்தேடும்வழி
காட்டாரெவர்க்கும்பின்னில்லங்கயாகுமெனக்கதவு
பூட்டாதபொக்கசவீட்டினிற்கொள்ளைக்குப்போய்ப்புகினும்
கூட்டாகுமோவென்பரேயச்சுதாநந்தகோவிந்தனே. (எஉ)

ஆனை கட்டச் சங்கிலி
தானே யெடுத்துக் கொடுக்கும்.

தொடுத்திடுமூழ்வினைபோகாதெவர்க்குந்தொடருமுற்றும்
இடுக்கண்வருமதுதன்னல்வருங்குற்றமென்பர்தன்னைத்
தடுத்துத்தன்காலிலிடுநிகளந்தனைத்தானெடுத்துக்
கொடுத்திடும்யானைகண்டாயச்சுதாநந்தகோவிந்தனே.(எஙு)

குளத்தைக் கலக்கிப் பருந்துக் கிரையிட்டதுபோல்.

தளத்தைக்கண்டஞ்சிக்குறுமன்னர்கப்பந்தரக்கொள்வர்போர்க், களத்துட்படவவர்சீமையைவேந்தர்கைக்கொண்டழித்தல், விளர்த்திட்டமீன்களைக்காகம்பருந்துவிருந்துணவே, குளத்தைக்கலக்கியதாமச்சுதாநந்தகோவிந்தனே. ()

தோட்டிபோ லுழைக்கவேண்டும் துரைபோற் சுகிக்கவேண்டும்.

தோட்டியைப்போலுழைப்பார்பொருடேடிச்சுகிப்பதல்லாற்
பூட்டியறைக்குட்புதைத்துவைத்தாற்புசியாரெவர்க்கோ

ஈட்டிடத்தேன்பலபூவினிற்சென்றுசென்றீயெடுத்துக்
கூட்டியிழப்பதுவாமச்சுதாநந்தகோவிந்தனே. (எரு)

## துர்ச்சனப் பிள்ளைக்கு ஊரார் புத்தி சொல்வார்.

சற்சனராயுறவுற்றூரைப்பேணித்தவத்தியல்பாய்
நற்சனனங்களெடுத்தாரைமெச்சுவர்நாணமில்லாத்
துற்சனப்பிள்ளைகட்கூரார்சொல்வார்புத்தியென்றுலகோர்
குற்சிதஞ்சொல்வர்மெய்யேயச்சுதாநந்தகோவிந்தனே. ()

## வயிற்றைப் பீறிக் காட்டினாலும் மகேந்திரசாலம் என்பார்.

தேறியநெஞ்சிற்பரிசுத்தனென்றுதெளிந்திடினும்
மாறியவன்கண்ணருண்மைகொள்ளாரொருவன்வயிற்றைப்
பீறிமுன்காட்டினுமாகேந்திரசாலப்பிரமையென்றே
கூறியலைப்பர்கள்காணச்சுதாநந்தகோவிந்தனே. (எஎ)

## கோழி கூப்பிட்டு விடிகிறபொழுது துக்கல் துரைத்தா விடியும்?

நிரைத்தோரியிட்டதிரைப்பாண்டின்மேலிட்டநித்திரைகொ
தரைத்தோகையர்வந்தெழுப்புந்தபனன்சமயமறிந [ஞந்
திரைத்தோவெனக்குக்கிடங்கூப்பிடாமலிரவிடைநாய்
குரைத்தோவிடியுமென்பாரச்சுதாநந்தகோவிந்தனே. (எஅ)

## உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாது.

தருவையொப்பாமைந்தருவென்பரோவுத்தமபுருஷன்
உருவையொப்பாருத்தமராவரோகுணமொப்பதல்லால்
கருவியொப்பாயுயரப்பறந்தாலுங்கருடனுக்கூர்க்
குருவியொப்பாமென்பரோவச்சுதாநந்தகோவிந்தனே. ()

ஐங்காதம் போனாலும் அகப்பை விலை அரைக்காசுதான்.

ஐங்காதம்போயுமகப்பைவிலையரைக்காசென்பர்காண்
எங்காகிலும்பணமிட்டுக்கொள்ளாரறிவினர்சென்றால்
சிங்காரமானபொற்பூஷணமாடைதியாகம்பெறார்
கொங்கார்துளபத்தனேயச்சுதாநந்தகோவிந்தனே. (அ0)

மழைக்குத் தண்ணீர் மொண்டு வார்ப்பவர் ஆர்?

மழைக்குத்தண்ணீர்மொண்டுவார்ப்பவராரிந்தவையகத்தோர், பிழைக்கபொழிவதுநற்குணங்காண்பெறும்பேற்றினுக்காய், அழைக்கக்கசேந்திரன்மூலமென்றன்றதினன்பினுளம், குழைக்கக்கராவரிந்தாயச்சுதாநந்தகோவிந்தனே.()

நரிவால் பற்றி நதி கடக்கலாகாது.

திண்டாடவெட்டும்ரணகளத்திற்செயங்கொள்ளும்வலி
கண்டாலெதிர்நிற்பர்கூளபடையைக்கைக்கொண்டுபுகார்
அண்டாதவெள்ளத்திலோடங்கொளாமலடுநரிவால்
கொண்டாறுதாண்டுவரோவச்சுதாநந்தகோவிந்தனே (அ௨)

குடியிருக்கிற வீட்டிலே கொள்ளி வைத்தாற்போல.

நள்ளிருட்போதில்விளக்கிட்டதாலல்லவிருந்தால்
தெள்ளியசீர்பெறும்வீட்டுக்கழகென்பர்தீம்பர்வந்தால்
தள்ளிவிடாமற்குடிவைத்துக்கொள்ளிற்றமதிறப்பிற்
கொள்ளிவைத்துக்கொண்டதாமச்சுதாநந்தகோவிந்தனே.()

தலைவன் நிற்கத் தண்டு நிற்கும்.
தலைவன் மயங்கச் சேனை மயங்கும்.

போரக்கத்திருட்டிக்கிராண்டேதுரையானவன்போர்முகத்
வரக்கொக்கரிநகெதழுஞ்சேனையஞ்சாதுவரும்விசயம் [தில்

அரக்கர்க்கிராமனெதிர்நிற்கலங்கையழித்ததன்று
குரக்குப்படையல்லவோவச்சுதாநந்தகோவிந்தனே. (அச)

குழந்தையுந் தெய்வமுங் கொண்டாடின இடத்திலே.

அண்டாரெவருங்குணவீனர்செல்வர்களாயிருந்தும்
கண்டாதரவினழைத்தால்வருவர்கரிசினம
துண்டாய்க்குழந்தையுநதெய்வமுநித்தமுறவுசெய்து
கொண்டாடமுன்னிற்குமேயச்சுதாநந்தகோவிந்தனே. ()

கோணக்கொம்பேறியென்ன குதிரையேறியென்ன,
வீணர்க்குங் கீர்த்திக்கும் மெத்தவுந் தூரம்.

பூணத்தகும்புகழ்ப்பூஷணங்கொள்ளபபொருளுதவா
வீணர்க்குங்கீர்த்திக்குமெத்தவுந்தூரமிகுஞ்செல்வராய்க்
கானத்தையுண்ணுங்குதிரையிலேறிற்கவிக்குலம்போற்
கோணக்கொம்பேறிலென்னுமச்சுதாநநதகோவிந்தனே. ()

பன்றிக்குட்டி பருத்த யானைக்குட்டியாமா?

வெஞ்சரக்குபபைதொடுத்தெய்யவேவெற்றிராகவன்கைச்
செஞ்சரத்துக்கிணையாமென்பரோவிட்டதீனிதின்று
சஞ்சரிக்கும்பன்றிக்குட்டிகடாமதத்தாரைபொங்கும்
குஞ்சரக்கன்றுக்கொவ்வாவச்சுதாநநதகோவிந்தனே. (அஎ)

தன்னைக் கொல்லவந்த பசுவைத்
தான் கொன்றாற் பாவமில்லை.

ஆறியவெஞ்சினத்தீமுளச்செய்யினரசர்கொல்வார்
தேறியநெஞ்சன்றனைக்கொல்லவந்தசினப்பசுவை
மாறிடக்கொன்றிடிற்பாவமிலையென்றுவையகத்தோர்
கூறியவார்த்தைபொய்யோவச்சுதாநந்தகோவிந்தனே. ()

செம்பாலடித்த காசுங் கொடார்.

வம்பாவசைக்கவிநூறுசொன்னாலும்வைதாலுமெண்ணூர்
கம்பாடுசொல்லிவழிவிடுவார்கடனைப்புலையர்

செம்பாலடித்திடுங்காசுங்கொடார்செய்யமோகுநிரைக்
கொம்பாகிலுமகொடுப்பாரச்சுதாநந்தகோவிந்தனே. (அகூ)

பொருளும் போக்குங் கூடவரா.

கூடவராதிட்டபொற்பூஷணங்கடுரையெனக்கொண்
டாடவராதுசதுரங்கசேனையுமாண்மையும்போம்
ஓடவராதெமதூதர்வந்தாலுள்ளரொக்கமுந்தன்
கூடவராதென்றெண்ணாரச்சுதாநந்தகோவிந்தனே. (கூ0)

இயல்பாய் மணமில்லாத சந்தனக்கட்டை
யிழைத்தாலுங் குழைத்தாலு மணக்காது.

அழைத்தாயிரந்தரம்புத்திசொன்னாலடங்காதவம்பர்
தழைத்தாலுமென்னவர்கெட்டாலுமென்கந்தமற்றகுற
டிழைத்தாயிரந்தரஞ்சாணையிற்சுற்றியெடுத்துநன்னீர்க்
குழைத்தாலும்வாசந்தராதச்சுதாநந்தகோவிந்தனே. (கூக)

கூடியிருந்து குலாவுவார் வீட்டில்
ஓடியுண்ணுங் கூழினிதே.

கூழாதுவண்டினஞ்செண்பகப்பூவைத்தொடாதுவெறும்
பாழானநத்தத்தெருக்கின்றபூமணம்பற்றிப்புல்லும்
தாழாதுநட்பினுறவுகொண்டாடத்தக்கார்மனையில்
கூழாகிலுமினிதேயச்சுதாநந்தகோவிந்தனே. (கூஉ)

ஆயிரம் பசுக்களி லொருபசு வுதைத்துக்
கொண்டால் என்ன?

தண்டாதருள்செயுந்தாதாக்களிலொருத்தன்மறுத்தல்
கண்டாலதுகொண்டுதாழ்வல்லவேகவியாவிரப்போர்க்
குண்டானபால்கறக்கும்பசுவாயிரத்தொன்றுதைத்துக்
கொண்டாற்குறையென்பயோவச்சுதாநந்தகோவிந்தனே. ()

இறந்தவன் பிள்ளை இருந்தவ னடைக்கலம்.

இடைப்படச்செத்தவன்பிள்ளைநன்றாகவிருந்தவன்கை
அடைக்கலமென்றுலகஞ்சொலுமேயதுபோற்றமியேன்
மிடைப்படப்பார்த்திருநதாற்றகுமோபசுமேய்த்தவந்நாள்
குடைக்குவடேந்தினையேயச்சுதாநந்தகோவிந்தனே. (கூசு)

கரும்பு கசப்பது வாய்க்குற்றம்.

வணங்காருன்பாதங்கள்வாழ்த்தாருன்னாமங்கள்வாழ்த்
திநித்தம், இணங்காரறிவற்றபுல்லர்நலமோர்தம்மியற்கை
குன்றார், கணங்காணுங்கட்டிக்கரும்புதின்பார்க்குக்கசப்பதூர்
வாய்க், குணங்காண்கரும்பதென்றாரச்சுதாநந்தகோவிந்த
னே. (கூரு)

நடந்தார்க்கு நாடெங்குமுறவு, கிடந்தார்க்குப் பாயேயுறவு.

நடந்தார்க்குநாடெங்குநல்லுறவாகுநடையொழிந்து
கிடந்தார்க்குப்பாயவுறவன்றியென்னென்றுகேட்பவரார்
இடந்தாவெனக்குன்பதமேகதிசிற்றிடைச்சியர்பாற்
குடந்தாவியமுகுந்தாவச்சுதாநந்தகோவிந்தனே. (கூசா)

கரும்பு தின்னக் கூலி கொடுப்பார்களா ?

வாலியைக்கொன்றுசுக்ரீவனைப்பட்டத்தில்வைத்துமுந்நீர்
வேலிகடந்திலங்கைவீடணனைவிளங்கவைத்தாய்
காலியைமேய்த்துள்ளபால்குடித்தாய்நற்கரும்புதின்னக்
கூலிகொடுப்பவராரச்சுதாநநதகோவிந்தனே. (கூஎ)

வல்லார் இளைத்தால் வந்திளைப்பாறுமென்று
சொல்லாதிரார்கள் சுத்தவீரர்கள்.

வல்லாரமர்செய்துகையிளைத்தாலவர்வம்மினெனச்
சொல்லாதிராரிளைப்பாறுமென்பார்சுத்தவீரர்படை
எல்லாமிழந்துநிராயுதனாய்நின்றராவணனைக்
கொல்லாதுவிட்டனையேயச்சுதாநந்தகோவிந்தனே. (கூஅ)

வஞ்சகர்க்கெத்தனை வாஞ்சையாய் நடக்கினும்
நெஞ்சகந்தன்னில் நேசங் கொள்ளார்.

நெஞ்சாரவஞ்சகர்க்கெத்தனைசெய்யினுநேசங்கொள்ளார்
அஞ்சாயன்மென்குயின்முட்டையைத்தன்முட்டையாமென்
றெஞ்சாதடைகிடந்துங்கருங்காகமிகல்விளைக்கக் [றெண்ணி
குஞ்சாகிப்பூங்குயிலாமசசுதாநந்தகோவிந்தனே. (௯௯)

மஞ்சனந்தேடிமலர்தேடியுன்னைவணங்கப்பெற்றேன்
நெஞ்சகந்தன்னினினைக்கப்பெற்றேனினியாவிடினும்
அஞ்சலென்றென்னவுனக்கேபரமடலாழிகொண்டு
குஞ்சரங்காத்தவனேயசசுதாநந்தகோவிந்தனே. (க00)

தேனேயெனுமொழிமாணர்கலவியிற்சேர்ந்துறினும்
தானேயெனக்குன்பதந்தருவாயன்றுசானகிக்கா
மானேயெனவந்தமாரீசன்மேற்செலவாளிதொட்ட
கோனேசக்ராயுதனேயச்சுதாநந்தகோவிந்தனே. (க0க)

முந்தச்செனனத்தில்யான்செய்தபூசைமுயற்சியிற்கோ
விந்தச்சதகம்விண்ணப்பஞ்செய்தேனென்வினைதொலைத்தே
இந்தச்செனனத்திற்றுன்பப்படாமலிருநதிடவை [ன்
குந்தப்பதவிபெற்றேனச்சுதாநந்தகோவிந்தனே. (க0உ)

கோவிந்தசதகம் முற்றிற்று.



ஸ்ரீ:

## கோவிந்த சதகத்தின்

# செய்யுள் முதற்குறிப் பகராதி.

செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீராமஜயம்.

கோபாலகிருஷ்ணதாசர்

இயற்றிய

# எம்பிரான் சதகம்.

இஃது

மகாவித்வான்

காஞ்சீபுரம்-இராமசாமிநாயுடு அவர்களால்

பார்வையிடப் பெற்றது.

---

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி. சென்னை.

[2-வது பதிப்பு]

1917

விலை அணா 1

ஸ்ரீ:



ஸ்ரீராமஜயம்.

# எம்பிரான் சதகம்

## பாயிரம்.

### காப்பு.

என்றுந் திருமாற்கே யாளாவே னெம்பெருமான்
என்று மெனக்கே பிரானாவான்—என்றும்
பிறவாத பேறளன் பேரா யிரமும்
மறவாது வாழ்த்துகவென் வாய்.

ஆழ்வார்கள் பன்னிருவர் பாடல் போற்றும்
அரிபக்தன் கோபால கிருஷ்ண னன்பால்
கேள்வியாற் றனதறிவின் மிகுதி யாலுங்
கிருபைகூர் குருகடாக்ஷத்தி னாலும்
தாழ்வில்லா வெம்பிரான் சதகந் தன்னைச்
சாற்றினான் போற்றியன்ப ரோதும் வண்ணம்
கேள்வியா லனுதினமுங் கீர்த்திப் பார்கள்
கிளர்விஷ்ணு வைகுந்தத் துளராய் வாழ்வார். (௧)

பிடிபடா மறைபடித்து வேத மார்க்கப்
பிரதிஷ்டா பனாசார்ய ருபதே சத்தை
அடைவுடனே யெழுபத்து நால்வர்க் கீந்தே
அவர்கள்சிங்கா தனக்குருக்க ளாக வைத்தோர்

உடையவரெம் பெருமானர் பாஷ்ய காரர்
உயர்பூதூர் வள்ளலார் நினைந்தோர்க் கெல்லாம்
இடராறுக்கு மெதிராசர் விப்பிர துங்கர்
எங்களிரா மாநுசர்தா ளிறைஞ்சு வோமே. (உ)

கிம்புருடர் கருடர்காந் தருவர் சித்தர்
கின்னரர்வித் தியாதரர்சங் கீதம் பாடத்
தும்புருநா ரதர்சனகர் தியர்நற் சேடன்
சுரருடனே ரிஷிமுனிவர் பலரும் போற்ற
அம்புயனுன் மறையோத வீற்றி ருக்கும்
அச்சுதனே யுனக்கென்றன் புன்சொல் லாலே
எம்பிரான் சதகமென விருத்தத் தாலே
இசைப்பதற்கே முன்னிற்பா யெம்பி ரானே. (௩)

பாயிர முற்றிற்று.

## நூல்.

திருமாது வீற்றிருக்குங் கமல மார்பா
திகிரிசங்கந் தரித்தருளுஞ் செய்ய கையா
கருமாணிக் கக்கிரியோ னிறத்த மெய்யா
கதிரிரவி மதியிரண்டுங் கண்ணுங் கண்ணு
அருமாம றைப்பொருளா மாதி தேவா
அனைத்துலகும் படைத்தளித்திட் டழிக்கு மையா
இருபாத மலர்போற்று மெய்யர் நெஞ்சில்
இருந்திநா ராயணனே யெம்பி ரானே. (க)

மாதவனீ திருமங்கைக் குபதே சித்த
மந்திரஞ்சே னைபதிமெய்ச சடகோ பன்சீர்
நாதமுனி யுடனுய்யக் கொண்டார் மிக்க
ஞானமணக் காலநம்பி யாள வந்தார்

நீதிபுனை பெரியநம்பி யுலகம் போற்றும்
  நிகரிலிரா மாநுசனல் லுபதேசமபெற்
றேதமற வெழுபத்து நாலு பேருக்
  கெதிராச னுரைக்கவைத்தா யெம்பி ரானே. (௨)

பூதலத்தி லுண்டான தலங்க டம்மில்
  புண்ணியகோ டித்தலமொன் றுய்ந்து பார்த்தே
வேதநெறி யாலாதிப் பிரமன் றானும்
  மிக்கதிருக் கச்சியில்வந் திறங்கி யுற்றே
ஆதரவா யத்திகிரித் தலத்தி லோமம்
  அன்றவன்றான் பண்ணவந்த வோம குண்டத்
தேதமற வந்துதித்தே வரங்க ளீந்தாய்
  எண்ணரிய வருளாளா வெம்பி ரானே. (௩)

உன்னுடைய வுடன்மயமே பூமி யெல்லாம்
  உனதுசெவ்வாய் நீர்மயமே யுதக மெல்லாம்
மின்னியநின் கண்மயமே தேயு வெல்லாம்
  வீறியநின் சுவாசமய மேகாற் றெல்லாம்
நின்னினைவின் மயமேயா காய மெல்லாம்
  நின்மூர்த்தி மயமுயிர்க ளுணர்வி லெல்லாம்
என்னுடலோ டுயிர்செய்கை யெல்லா நீயே
  இரண்டுபண்ணி யலைப்பதென்றோ வெம்பி ரானே. (௪)

அருளாளா வேகவதி நதிசூழ் கச்சி
  அத்திகிரி நாதாவே தாக மத்தின்
பொருளாநா ராயணனே வாசு தேவா
  புண்ணியகோ டிக்கிறைவா தேவ ராசா
மருளான விரணியன்றான் குறித்த தூணில்
  வந்துதித்த நரசிங்கா வரத ராசா
இருளான தனுகாம நின்றாள் போற்றி
  ஈடேற நினைவளிப்பா யெம்பி ரானே. (௫)

பண்ணியிடும் பணிபலவே பொன்னென் றேயாம்
பாண்டத்தின் பேர்பலவே மண்ணென் றேயாம்
வண்ணமிகும பசுப்பலவே பாலொன் றேயாம்
வகையேழி னுடல்பலவே சீவ னென்றும்
நண்ணுமறு சமயங்கள் பேர்வே றல்லால்
நாதனீ யொருவனே யவர்க டம்மை
எண்ணியே செயுந்தொண் டருச்சைக் கெல்லாம்
இரங்கிவரந் தருகின்ற யெமபி ரானே. (௬)

கேசவநா ராயணமா தவகோ விந்த
கிளர்விஷ்ணு மதுசூத கேடி லாத
நேசதிரி விக்ரமனே வாம னாசீர்
நிறைந்தருளுஞ் சிதரா விருடி கேசா
மாசிலெழில் சேர்பதும நாபா வெங்கும
வளர்தாமோ தரவெனும்பேர் பன்னி ரண்டிற்
கீசனு யெண்டிசையுட் புறம்பு கீழ்மேல்
இவையீரா றிடத்துறைவா யெம்பி ரானே. (௭)

சங்கர்ஷ ணவாசு தேவா முத்தி
தருமபிரத்தி யும்மனு வனிருத் தாசீர்த்
துங்கபுரு டோத்தமனே யதோட்ச சாவெஞ்
சுடர்நார சிங்கவெழி லச்சு தாநீள்
அங்கசனுர்த் தனவுபேந் திரனே மிகக
வரிகிருஷ்ண வென்றுதிரி சந்தி தோறும்
எங்குமுள்ள பூசுரர்கள் சந்தி பண்ண
இருத்திநா ராயணனே யெம்பி ரானே. (௮)

அச்சுதனே மாதவனே தேவ தேவா
ஆதிபுரு ஷோத்தமனே யரியே மாலே
பச்சைநிறக் காகுத்தா வாசு தேவா
பரந்தாம னேமுகுந்தா பதும நாபா

நச்சரவின் மிசைநடித்த கோவிந் தாஸ்ரீ
நாராய ணாகேச வாவென் றுன்னை
இச்சையுடன் றுதிப்பதுவே யெனக்குப போதும்
இதற்கிணையா யேதுமில்லை யெம்பி ரானே. (௯)

பரபிரம மாமாதி மூல மேநீ
படைத்தளித் திட் டழித்துவிளை யாட வென்றே
திருதகமுடன் பிரமாவாய்ச் சிருஷ்டித் தன்றே
ஸ்ரீபதியாம் விஷ்ணுவா யுயிரைக் காத்து
உருத்திர னா யுயிரையெல்லாஞ் சங்க ரித்திட்
டோருருவே மூன்றுருவாய் மூன்று மொன்றாய்
இருக்குமெழி லச்சுதநின் மகிமை சற்றும்
இமையவர்க்குங் காணவரி தெம்பி ரானே. (௧0)

சிட்டிக்கப் பிரமாவைக் கருணை யாலுன்
திருநாபிக் கமலத்தே செனிக்கச் செய்தாய்
மட்டற்ற செனனமெல்லாங் காமத் தாலே
வர்த்திக்க மன்மதனை மனத்திற் றந்தாய்
கெட்டுற்ற விப்புவியிற் பிறந்த வெல்லாம்
நீருக்க வுருத்திரனைப் பிரம னீந்தான்
இட்டத்தே யேகனா யிராதே யிங்ஙன்
ஏன்செய்தா யச்சுதனே யெம்பி ரானே. (௧௧)

பலர்கூடி யிருந்தசந்தை கலைந்த தொக்கும்
பழுத்தாவிற் பறவைகள்சேர்ந் தகன்ற தொக்கும்
நலமாகச் சூளையொன்றில் வெந்த பாண்டம்
நாற்றிசையும் போயுடைந்து போவ தொக்கும்
சலமீதில் மிதந்திரண்டு சாஷ்டங் கூடிச்
சடக்கெனவே பிரிந்ததொக்குஞ் சமுசா ரந்தான்
இலதாகத் தெளிந்துனது திருத்தாள் போற்றி
ஈடேற நினைவளிப்பா யெம்பி ரானே. (௧௨)

அறக்கொடிய பவமெடுத்தா லதினூ றாண்டில்
ஐம்பதுநித் திரைபோய்மற் றைம்ப தாண்டில்
சிறுக்குழந்தை பேதையொடு பால னென்றே
திரிந்துபசி பிணிமூப்புத் துன்ப மேவிக்
கறுத்தமயிர் வெளுத்துடலங் கூனிப் பல்போய்க்
காதுகெட்டுக் கண்மூடிக் குழறிப் பேசி
இறக்கமுற்றுக் கிடந்திறக்கும் பிறவி வேண்டேன்
இனிக்கரையேற் றச்சுதனே யெம்பி ரானே. (கங)

பாதத்திற் பிரியாம லிருக்குங் கங்கை
பரமேட்டி பிறந்ததுந்திப் பதுமத் தண்பூ
தீதற்ற கௌத்துவமா மணிபூ ணாரம்
தேசுளபீ தாம்பரநீ யுடுக்குங் கூறை
வேதத்தை விரிஞ்சனுக்கு நீபோ தித்தாய்
விண்ணவர்க்குன் றிருக்கையா லமுத மீந்தாய்
ஏதுற்று நாரணனே யுனைப்பூ சிப்பேன்
இமையவர்தம் பெருமானே யெம்பி ரானே. (கச)

அன்னாதி யாமரியே யுனது நாமம்
ஆயிரத்திற் பலவாத லொன்றே யாதல்
பனையேறுங் கீழ்க்குலத்தோ ரெண்ணி னாலும்
பாலிருக்குங் கோபாலர் பாண்ட மொப்பார்
சின்னமெ மெண்ணமற் றர்க்கம் பேசும்
நெறியில்லார் குலம்பார்ப்பா ரானக் காலும்
இன்னாத கள்ளிருக்கு நவபாண் டத்திற்
கிணையிதுசத் தியமரியே யெம்பி ரானே. (கரு)

வளைவான பெரும்பல்லு மெரிந்த கண்ணும்
மைம்மலைபோற் காத்திரமு முடைய காலன்
அளவான பெரும்பாசங் கொண்டே யென்றன்
அங்கத்தைப் பிணமாக்கி யாவி யென்னும்

ஒளிவேறு யாதனு சரீரக் கூட்டில்
 உறப்பண்ணித் தெண்டிக்கு மிடரா னயேன்
இளையாம லிப்பொழுதே யடிமை கொள்வாய்
 இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (கசு)

அசசுதநின் மெய்யடியா ருகந்தே யிட்ட
 தனுவெனினு மகமேரு வாகக் கொள்வாய்
நிச்சயமா யுனைநம்பி யெண்ணு மூடர்
 நினைந்திடி லோர் நூறறையொன் றுயுங்கொள் ளாயால்
நச்சிமற்ற பிதிர்க்களுக்குந் தேவ ருக்கும்
 நமஸ்கரித்துப் படைத்தவெல்லா நதியின் வெள்ளம்
இச்சையுடன் சமுத்திரத்தே சேரு மாபோல்
 எல்லாங்கைக் கொள்கின்று யெம்பி ரானே. (கஎ)

தந்தைதாய் தினும்பண்டம் பிள்ளை வாயில்
 தானிட்ட சேடத்தைக் கேட்டு வாங்கிச்
சிந்தைமகிழ்ந் தின்பமுறத் தின்னு மாபோல்
 தேவாவுன் னுடைமையைநீ யடியார்க் கீய
அந்தவுன்றன் மெய்யடியார் பத்தி யாலே
 அளித்தகூ ழமுதினையுண் டேப்ப மிட்டே
இந்திரைக்கு மிதுதிட்டங் காட்டித் தொண்டர்
 ஏற்றமதைத் தெளியவைத்தா யெம்பி ரானே. (கஅ)

மன்னவராய் வாழ்ந்துசுகித் திருந்த பேரை
 வறுமையராய்ச் சலித்திரந்து திரிய வைப்பாய்
அன்னமரி தாயிரந்து திரிந்த பேரை
 அதிகராய் வாழ்ந்துசுகித் திருக்க வைப்பாய்
நின்னருளே யல்லாமல் யாவ ருக்கும்
 நினைத்தபடி நேரொண்ணு தாகை யாலே
தென்னதிரு விளையாட்டுன் மகிமை சற்றும்
 இமையவர்க்குங் காணவரி தெம்பி ரானே. (கசு)

அருணுடன்மீன் பார்த்தக்காற் சினைதான் குஞ்சாம்
ஆமைமுட்டை தாய்நினைந்தாற் குட்டி யாகும்
பரிசததாற் பறவைமுட்டை குஞ்ச தாகும
படிபிவைவை யிற்கடையாக் கிடக்கு நாயேன்
கருணையினுற் குருமூர்த்தி பார்த்த தாலும்
கருத்தாரத் திருவுளத்தே நினைத்த தாலும்
இருபதத்தைத் தலையில்வைத்த பரிசத் தாலும்
இருளறுத்தே னச்சுதனே யெம்பி ரானே. (உ0)

சக்கரஞ்சங் கிருபுயத்திற் பொறித்த பின்பு
தயவுடனே பன்னிரண்டு திருமண் சாத்திச்
சிக்கெனவே தாசனென்று நற்பே ரிட்டுச்
செவிகுளிர மந்திரமு முபதே சித்து
அக்கினியிற் செந்துளவக் காஷ்டங் கூட்டி
ஆவினெய்யாற் புனர்செனன வோமம் பண்ணி
இக்கிரியை யைந்தினுற் றிருத்திக் காக்கைக்
கெழிற்குருவா யுதித்தனையே யெம்பி ரானே. (உக)

மணியிசைக்கா வந்திடுமான் செவியான் மாயும்
மகிழ்புணர்ச்சிக் காகவிப மண்ணிற் சிக்கும்
கனில்விளக்கைக் கண்டுவிட்டில் வீழ்ந்து பொன்றுங்
கடுந்தூண்டிற் கவ்விமச்சம் வாயான் மாளும்
அனுகியளி நாசியிற்செண் பகமோர் தெய்க்கும்
ஐம்பொறியு முடையநா னலைந்தி டாமல்
இனையிலுப தேசத்தாற் றிருத்திக் காக்கைக்
கெழிற்குருவா யுதித்தனையே யெம்பி ரானே. (உஉ)

ஆகார நித்திரைமை துனம்ப யந்தான்
அனைத்துயிர்க்கு முண்டுநரர்க் கதிகம் ஞானம்
சேகாரு நல்வினைதீ வினையி ரண்டால்
சிற்றின்பம் பேரின்பஞ் சேர்ந்தி டாமல்

நாகாரி வாகனனே கேச வாநின்
  நற்பதங்கண் டீடேறக் குருவு ரைக்கும்
ஏகாந்த வுபதேசப் பொருளை நம்பி
  எண்ணமெய்ஞ்ஞா னந்தருவா யெம்பி ரானே. (உ௩)

பெருத்திருந்த பூசினிப்பூ வின்கீழ்க் கொட்டை
  பெருத்துயர்ந்து காயாய்ப்பூத் தேய்ந்துற் றூற்போல்
கருத்திலுறு நல்லறிவை வீறெட் டாமல்
  கபடமுறும் புல்லறிவு மேலிட் டந்நாள்
குருப்பகரு முபதேசப் பொருளை நம்பிக்
  குறைவறவே யுருவேறத் திருவு மேறி
இருட்பறந்து மெய்ஞ்ஞானம் விளங்கச் செய்தாய்
  இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (உ௪)

உப்புததி தேனுததி கருப்பஞ் சாற்றின்
  உததிநெய்யி னுததிதயி ருததி யுன்றன்
வைப்பெனும்பா லுததிநன்னீ ருததி யென்னும்
  வளைகடலே ழுண்டாக்கித் தீவுண் டாக்கித்
கப்பலுடன் சோங்குமரக் கலமுண் டாக்கிக்
  கடலோடிக் கரையேறக் கறபித் தாற்போல்
இப்பிறவிக் கடலேழுங் கடந்தே யுய்யக்
  கெழிற்குருவா யுதித்தனையே யெம்பி ரானே. (உ௫)

ஸ்ரீராமா வெனவொருகா லுரைத்தா லுன்றன்
  திருநாம மாயிரத்துக் கிணையா மென்றே
சீராருஞ் சடையான்பா கத்து மைக்கு
  நிகழ்த்திடலம் மத்திரத்துக் கிணையொன் றுண்டோ
பாராரு மதுதனையுச் சரித்தீ டேறப்
  பத்துருவில் ராமனென்றே முக்கால் வந்த
ஏராரும் பரசுரா மாஸ்ரீ ராமா
  எழிற்பலபத் திராமா வெம்பி ரானே. (உ௬)

சீரரியே நின்கோயிற் றுவார பாலர்
    செயவிசய ரிருவருநின் னேவ லாகும்
காரணத்தா லிரணியனே டிரணி யாட்சன்
    கடியரா வணனுடனே கும்ப கர்ணன்
மாரிநிகர் சிசுபால னுடனே தந்த
    வக்கிரனு மாகமுக்கால் வதைத்து மீண்டும்
ஈரமுடன் பண்டையிலுஞ் சாரூ பந்தந்
    தேற்றமுற வைத்தனையே யெம்பி ரானே. (உஎ)

கரியுன்னி மூலமே யென்ற மட்டிற்
    கராவைவதைத் தொருநொடியிற் கரியைக் காத்தாய்
உரிகின்ற துகில்வளர க்ருஷ்ணா வென்றே
    உரைத்தளவிற் றுரௌபதைக்கு மானங் காத்தாய்
அரியெங்கு முளனென்றோர் பாலன் சொல்ல
    அக்கணத்திற் றூணினர சிங்க மாகி
எரிகின்ற பெருந்தணலை யவனுக் கன்றே
    இமசலமாக் கினையரியே யெம்பி ரானே. (உஅ)

திருமணிட்டு நீறுமிட்டுத் திகழ்வை தீகச்
    சிபெரிய வயிட்டிணவர் சைவர் புத்தர்
அருகர்சம ணர்கள் துருக்கர் கர்த்தா வுண்டென்
    னறுசமயத் தோர்களுக்கு மிறைவ னீயே
தருமநெறி பதிவிரத மறையொ ழுக்கம்
    தயவுசமஞ் சத்தியஞ்சூ ளுடைய பேர்க்கு
இருளறுத்து மெய்ஞ்ஞானம் விளங்கச் செய்வாய்
    இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (உகூ)

திருக்கச்சி நம்பியுனை நம்பிச் செம்பொற்
    றிருவால வட்டகயிங் க்ரியஞ் செய்து
பெருக்கமழிந் தேதிருவாய் மலர்ந்து பேசிப்
    பேதமற்றுத் திட்டமா யிருக்க வோர்நாள்

கருக்கலினி லருளாளன் மறைவிற் றூங்கக்
காணும லருளாளா வென்ன நீவந்
திரக்கமுடன் கைவிளக்குப் பிடித்துச் சென்றாய்
இயலசக்க ராயுதனே யெம்பி ரானே. (௰)

திறத்தபொய்கை யார்பூதத் தார்பே யாழ்வார்
திருமழிசை யார்வில்லி புத்தூ ராழ்வார்
அறிக்கைமிகுங் குலசேக ராழ்வார் ஞான
ஆரணத்தைத் தமிழ்செயுநம் மாழ்வார் பத்தி
குறைச்சலில்லாத் தொண்டரடிப் பொடியாழ் வார்பண்
குளிர்ந்தசொல்லா லிசைபாடுந் திருப்பா ணாழ்வார்
இறககவெட்டிப் பறித்ததிரு மங்கை யாழ்வார்
இவர்பதின்மர்க் கருளினையே யெம்பி ரானே. (௰க)

பத்துப்பே ராழ்வார்கள் தமினம் மாழ்வார்
பாதார விந்தத்தைப் பணிந்து பாடி
முத்திபெற வருமதுர கவியாழ் வாரும்
மூதறிவா லுயர்வேதப் பொருளைக் கொண்டு
உத்தமமாம் பாமாலை யொடுபூ மாலை
உகந்துனக்குத் தருங்கோதை யாருங் கூட
இத்தலத்திற் பன்னிரண்டு பேராழ் வாரென்
றெண்ணுற வைத்தனையே யெம்பி ரானே. (௰உ)

அருளுடனே பொய்கையா ருறங்கப் பூதத்
தாழ்வார்வந் திருவரா யிருக்கப் பேயார்
சொரிமழையிற் போய்மூவ ராகி நிற்கச்
சொலற்கரிய நீநாலாம் பேராத் தோன்றிக்
கருணையுட னம்மூவர் பாடல் கேட்டுக்
கமலமலர்த் திருவடிவீ டாகப் பாலித்
திருளறவே கோவலூ ராய ஞரென்
றிடைகழியி னின்றனையே யெம்பி ரானே. (௰௩)

வெயிற்காயு மாதித்தன் கனகத் தேர்க்கு
விடநாகம் வடஞ்சகடோன் றேழு வாசி
சயத்தாலா காயத்திற் றேர்ந டாத்தும்
சாரதிகா லிரண்டுமில்லா முடவ னுன்றன்
மயத்தான்மா மேருவைத்தேர் சுற்றிச் சுற்றி
மறைநதுதிபப தேதினமா நின்வே தத்தின்
இயற்சேரும பிரமகற்பங் கிராண நன்னுள்
இதிற்றேன்ற வைத்தனையே யெம்பி ரானே. (௩௪)

உதித்துவரும் போதுமத்தி யானப் போதும்
உயாதத மலைவாயிற் புகுதும் போதும்
மதத்தசுர ரருக்கனைத்தேர் நடத்தொட் டாமல்
வளைந்துபொரத் திருநாபிக் கமலம் வந்த
விதிக்கடவு ளுரைத்ததிரு மாநதி ரத்தால்
விப்பிரர்கள் யாவருமுச் சந்தி தோறும்
எதிர்த்திறைத்த நீர்க்கணையா லசுரர் கீழ்ப்பட்
டெதிர்நடக்கப் பண்ணுகின்றா யெம்பி ரானே. (௩௫)

திண்ணமுடன் பாண்டுவுக்குச் சாப முற்றும்
திறற்றரும னுற்பவித்தா னென்ற மட்டில்
கண்ணில்லாத் திரிதராட் டிரன்றன் றேவி
காந்தாரி கெற்பம்விழப புடைத்துக் கொள்ள
மண்ணிலது பொன்றாமுன் முனிவி யாசன்
வந்தெடுத்துப் பலகலசத் தடைத்து பின்பேர்
எண்ணவது நூற்றுவராய்ப் பிறக்கச் செய்தாய்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (௩௬)

விண்ணுலகு மண்ணுலகு மசுரர் மிஞ்சி
வேதமற்று வேள்வியற்று நீதி யற்றுண்
பெண்ணென்னுங் குலமிரண்டும் வரம்பு கெட்டுப்
பிரமாவும் படைப்பொழிந்திட் டிருந்த நாளில்

இன்னமுடன் கெருடவா கனமீ தேறித்
 திறலசுர ரனைவரையுங் கொன்று தேவர்
எண்ணவுல கீரேழும் படியப் பண்ணும்
 இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (௬எ)

வன்னியினன் புகழ்விசுவ தேவன் சுத்த
 வருணன்வயிஷ்க் காரணிய னிந்தி ரன்சீர்
நன்னெறிசேர் தேவமுனி யேக பாதன்
 நமன்வாயு வுமைபிதுர்க்க டனக் குபேரன்
கொன்னமருஞ் சங்கரனூர் விதியோ னென்னும்
 குறைவிலா விவர்கள்பதி னைந்து பேரும்
இன்னமுத மதிக்கலையைத் தினமொன் றாக
 என்றுமுண வைத்தனையே யெம்பி ரானே. (௬அ)

முதற்பிறையா மென்னுமோர் கலையிற் கூடி
 மூவைந்தும் வளர்நதுகலை பதினா றாகும்
மதிக்கலையிற் பதினைந்தைச் சுரருண் டென்று
 வந்திதனைக் கூடுமமா வாசை நாளில்
கதிர்ப்பருதி பசும்பயிர்புல் கன்ம ரத்திற்
 கலந்தணைந்து பசுவிடத்தே வந்து கூடி
இதிற்பஞ்ச கவ்வியத்தால் பணுமோ மத்தால்
 இந்துதிக்கப் பண்ணுகின்றா யெம்பி ரானே. (௬௯)

காமனுரு விலிபுரவி கிளிதேர் காற்று
 கடல்முரசங் குயில்காளஞ் சேனை மின்னார்
மாமகரங் கொடிகருமபு சிலைநாண் வண்டு
 மலர்கணைக ளிவைகொண்டே மதனைப் வீறிப்
பூமியுயர் வானமெங்குஞ் சஞ்ச ரித்துப்
 பூங்கணையெய் தாண்பெண்ணைப் பொருத்திக் கூட்டி
ஏமநிறத் தயன்படைப்பு மிவனால் வர்த்தித்
 தேற்றமுற வைத்தனையே யெம்பி ரானே. (௭௦)

பட்டமற்றுப் பதினுலாண் டடவி யுற்றுப்
பத்தினியுஞ் சிறைபோய்ப்பின் றேனு நீயும்
மட்டறவே சலித்திருக்கச் சுககி ரீவன்
வந்துதவக் கவித்திரளாற் சேது கட்டித்
துட்டனெனும் ராவணனைக் கொன்று தேவர்
தோத்திரிக்க வீடணற்குப் பட்டங் கட்டி
இட்டமுட னுலகாண்ட ஸ்ரீரா மாவென்
றெண்ணவிரு ளறுக்கின்று யெம்பி ரானே. (சக)

மீதான மச்சகெந்தி மகன்செத் தில்லாள்
வியாசமுனிக் குப்பெற்ற பாண்டு தநதை
மாதாக்கள் குந்தியுமத் திரையென் பாளும்
மந்திரத்தா லைவருக்கை வரையும் பெற்றூர்
சூதாடிப் பொய்யுரைத்துக் குருவைக் கொன்றூர்
துரௌபதையே பஞ்சவர்க்குத் தேவி யாளுள்
ஈதார ணப்பொருள்பா ரதமா மென்றே
எண்ணவிரு ளறுக்கினறு யெம்பி ரானே. (சஉ)

நண்ணியொரு பாகவதன் வறுமை தன்னல்
நாகரசன் பாற்சென்று நலிவு கூற
மண்ணிலவ னிருபதாண் டினுக்குச் செல்லும்
மனைவர்த்திக் கீந்துபின்னும் வாவென் றேதக்
கண்ணதனுற் கானகத்திற் பதித்த வேங்கை
கண்டவனுங் கலங்கியந்தக் கலக்கந் தீர
எண்ணரியே யெனக்கேட்ட புலிக்கு முத்தி
ஈந்தனைவேங் கடத்தரியே யெம்பி ரானே. (சங)

அறுசமயத் துறைகளுக்கு மிறைவ னீயென்
றறியாமற் பாண்டியன்முன் றர்க்கத் தூற்றூல்
விறலரசன் பொற்கிழியை யுயரக் கட்டி
விழப்பாடிக் கொடுபோங்கள் பெரியோ ரென்ன

மறைகளொன்று மோதறியாப் பெரியாழ் வாரை
மாமறைநீ யோதுவித்துக் கிழிய றக்கண்
டிறைவணங்கிப் பட்டர்பிரான் வந்தா னென்றே
எண்ணவிரு ளறுத்தனையே யெம்பி ரானே. (சச)

நந்தவனங் கொத்தநிலத் தெழுந்த பெண்ணை
நம்மாழ்வார் புத்திரியா வளர்த்த நாளில்
சிந்தைமகிழ்ந் துனக்காழ்வார் கட்டி வைத்த
திருமாலை யவள்சூடி நிழல்பார்த் தீய
உன்றனக்கு மற்புதமாத் தினமுஞ் சாத்த
உகந்துசூ டிக்கொடுத்த நாசசி யாரென்
றிந்திரைக்கு மிதுதிட்டங் காட்டித தொண்டர்
இருதயத்து ளிருக்கின்ற யெம்பி ரானே. (சரு)

மச்சகூர் மவராக நார சிங்க
வாமனமு மிராமபுத்த கற்கி யாம்பத்
தச்சமூன்ற னவதார மாகு மென்றே
அகிலாண்டந் தெளியவிவற் றிரண்டாம் ராமன்
கச்சமரா டக்குறுகும் பரசு ராமன்
கைச்சிலையை வாங்கியே நாரி யேறிட்
டிச்சகத்தி லெப்பொழுதும் பரசு ராமன்
இருத்துமுறை செய்திட்டா யெம்பி ரானே. (சசு)

பிறக்குமுன்னே வயிற்றுக்குட் கருவி றந்து
பிணத்தைப்பெற் றழுதுசிலர் புரளவைப்பாய்
குறுக்கப்பட் டேவயிற்றிற் பிணமா வீங்கிக்
கூற்றுவஞ்ச் சிலதாயர்க் கொல்லச் செய்வாய்
மிறுக்கமற்று மகப்பெற்று முன்னஞ் செய்த
வினைகடன்மை யனுபவித்திட் டிறக்கச் செய்வாய்
இறக்குமிடர் பிறக்குமிட ரிரண்டும் வேண்டேன்
இனிக்கரையேற் றச்சுதனே யெம்பி ரானே. (சஎ)

ஆவணிரோ கிணிநாளி லபர பக்ஷத்
தஷ்டமியிற் சசியுதிக்கும் வேளை தன்னில்
தேவர்தொழும் வடமதுரா புரியிற றோன்றிச்
சிசுவடிவாய் வசுதேவன் கைமீ தேறி
நீவரிற்ச யந்திநாள் வனத்துக் காளி
நேயமுடன் கனிகடரி லுகந்து கொண்டே
யாவருக்கு மரியபத மவளுக் கீந்தாய்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (சஅ)

அரிதிவச மாமேகா தசிநன் னாளை
அனுஷ்டித்த ருக்குமாங் கதனைக் கண்டவ்
விரதமனுஷ் டித்தளவி லாத பேர்கள்
மிகக்கதிசே ருகையாலே சுரர்சோ தி
உருவமிகு மோகினியை விடுத்த மட்டில்
உறுதியாத் தன்மகனை வெட்டுங் கூர்வாள்
இருபுயத்திற் பூந்தொடையா வைகுந் தத்தே
இனத்தோடும் வைத்தனையே யெம்பி ரானே. (சகூ)

பத்தியுடன் றுவாதசியன் றம்ப ரீஷன்
பாரணைசெய் வதுதவிர்ப்பான் றாரு வாசன்
குத்திரமா வந்தொளிக்க வுண்ண வஞ்சிக்
கோவிந்தா வென்றுனைறு தீர்த்தங் கொண்டான்
உத்தமமென் றெண்ணமை விடுஞ்சா பத்தால்
உயர்முனியைத் தூரந்தண்டத் துறவொட் டாமல்
இத்தலத்தி லம்பரீஷ நீயே காவென்
றிரந்தடையப் பண்ணினையே யெம்பி ரானே. (ருo)

பாதகக்கண் டாகன்ன னெனு மியக்கன்
பத்தியற்றுன் பெரும்புகழைக் கேளா மென்று
காதிரண்டிற் சத்தமிகு மணியைக் கட்டிக்
கணப்பொழுது மோயாம லசைத் திருக்கத்

தீதுநினைந் தானென்றுன் மனத்தெண் ணாமல்
சிந்தையினால் மறவாமல் தியானித் தானென்
றோதமற வவனுக்கு மவன்றம் பிக்கும்
இரங்கிமுத்தி யளித்தனையே யெம்பி ரானே. (௫௧)

கடிக்கினிர தித்தமாங் கனியை மீளக்
கடியாமற் கல்லையில்வைத் துனக்கா மென்றே
படைத்துவைத்த வேடுவிச்சி சபரி நெஞ்சிற்
பரிவுகொண்டு ரகுராம வவதாரத்தில்
சடக்கெனவே முன்றின்ற கனியைத் தானே
தக்கவிதிப் படிபடைத்த தாக வுட்கொண்
டிடுக்கணறச சாரூப மவளுக் கீந்தன்
றீடேற்றி விட்டனையே யெம்பி ரானே. (௫௨)

திண்ணமுடன் கோபாலர் மனையில் வெண்ணெய்
திருடினதைக் கண்டவர்க டுரத்தும் போது
கண்ணிலாத் ததிபாண்டன் மனையுட் புக்குக்
கண்கொடுத்தோர் சாடியிற்புக் கொளித்துக் கொள்ள
புண்ணிகராங் கண்வேண்டேன் கதிதா வல்லால்
போகவிடே னெனச்சாடி மூடிக் கொள்ள
எண்ணரிய பரமபத மவனுக் கீந்தாய்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (௫௩)

மிடித்தில்லாள் பசிதொறுக்கிற் குசேல னென்னும்
விப்பிரன்று னஞ்சியுன்றன் பதிக்கு வந்தால்
அடுத்தசிநே கிதன்வந்தா னென்றே சிந்தித்
தறிந்தழைத்தென் கொடுவந்தீர் தாரு மென்றே
மடிக்கனுறு பொரியவலா மதனை வாங்கி
மகிழ்ந்துவிர லாலள்ளி யிருகா லுட்கொண்
டிடுக்கணறச் சம்பத்து முத்தி வீடும்
இரங்கியவற் களித்தனையே யெம்பி ரானே. (௫௪)

நந்தகோ பாலனுறுந் திருவாய்ப் பாடி
நகர்மீதிற் படையெடுத்து மண்ட லீகர்
வந்திடிலப் பகைவரெல்லா மடிவ ரென்றே
வரங்கொடுத்துப் பின்னகரங் கட்டு வித்தாய்
அந்தவரத் தாற்கஞ்சன் வரவே யஞ்சி
அசுரர்களிற் பலரைவிடுத் துன்னைக் கொல்லைக்
கெந்தவகை தொடுத்தாலுஞ் செயித்த நேக
ராட்சதரை வதைத்தனையே யெம்பி ரானே. (ருரு)

உக்கிரசே னன்றனைப்போல் வடிவு கொண்டே
உத்தமியைப் போரசுரன் வந்து கூடி
அக்கிரமக் கஞ்சனுதித் தசுர னாகி
அரக்கரைக்கூட் டிக்கொண்டே பிதாவைத் தள்ளி
திக்கெல்லா மவனாளின் மதுரைக் கேகித்
திரளுடனே கஞ்சனைக்கொன் றவன்பி தாவை
இக்குவலை யம்புரக்கப் பண்ணி வைத்தாய்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (ருசு)

நின்னினைவா நித்திரையைத் துற்கை யாக்கி
நிகரினந்த கோபனுக்குப் பெண்ணா தாக்கி
அந்நிசியி லனைவரையு மயங்கப் பண்ணி
அருளுடனே வசுதேவன் கைமீ தேறி
நன்னெறிசேர் திருவாயர் பாடி புக்கு
நந்தனுக்கு மகவான துற்கைப் பெண்ணை
இந்நிசியிற் றேவகியார் பெற்றா ரென்றே
இனிதுரைக்கப் பண்ணினையே யெம்பி ரானே. (ருஎ)

கடியகர்த்த பாசுரனுஞ் சத்த மாகக்
கத்துவது கேட்டளவிற் கஞ்ச னஞ்சிப்
படையெடுத்துக் கவசந்தொட் டநேக ரோடும்
பதிலமாய் வந்திடத்தே வகியார் கண்டே

இடமுடையா னல்லபெண்ணே யென்று போதும்
  சீக்கிரமாக் கல்லிலடித் திடவே யோங்க
இடியிடித்தாற் போன்மார்பி னுதைத்தே தூற்கை
  ஏகுகினைத் தருளினையே யெம்பி ரானே. (ருஅ)

மூலையில்விட மருத்தியுனைக் கொல்ல வெண்ணி
  மோகினியாய் வந்தபூ தகியென் பாளோர்
மலையெனவீழ்ந் திடமூலையி னஞ்சும் பாலும்
  வல்லுயிருந் திருபபவள வாயா லுண்டே
கொலைசெய்ய வந்தவடன் பகையென் னுமல்
  கொடுத்தனைசா யுச்சியவீ டென்னிற் போற்றும்
இலகியமெய்த் தொண்டருக்குக் கதிதா னீவ
  தெளிதுனக்குச் சீரரியே யெம்பி ரானே. (ருகூ)

குறைச்சலறக் கனிக்கரிசி யள்ளி மூடிக்
  குதித்துவர மோதிரத்தின் வழியாச் சிந்தி
முறத்திலிட வெறுங்கையாய்த் திகைத்து நிற்க
  முகம்பார்த்துத் தின்கனியிட் டப்பா வென்ன
நிறத்தநவ மணிகள்கனி விற்பாள் கூடை
  நிறையவவ ளஞ்சிநந்த கோப னென்னும்
இறைக்குரைக்கி லுனது சொம்மே கொடுபோ வம்மா
  என்றுரைக்கப் பண்ணினையே யெம்பி ரானே. (சுO)

மன்னனைப்பா டாமற்போ கின்றே னீயும்
  வாவரியே யென்றழைத்த புலவன் பின்னே
பன்னகப்பாம் பணைசுருட்டிக் கொண்டே யேகிப்
  படுத்துக்கொ ளென்றமட்டிற் படுத்துக் கொண்டாய்
சொன்னவண்ணஞ் செய்தபெரு மாளே யென்று
  சுரர்துதிக்கக் கச்சியில்வீற் றிருக்கின் றாய்நீ
என்னுயிரு மென்னுணர்வு மெல்லா நீயே
  இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (சுக)

கருதலர்க்குத் தோலாத வரத்தால் வந்த
காலயவ னன்போரிற் பின்னிட் டோடி
வரைமுழைழயிற் றனையுறக்க மெழுப்பும் பேர்கள்
மடிவரென்றே முசுகுந்தன் வரத்தாற் றுஞ்சும்
பரிமளிக்க விடத்தொளிக்கத் துயிலு வானைப்
பதறிநீ யென்றுதைக்கின் முசுகுந் தக்கோன்
இருகண்விழித் திடக்கால யவந னீறாய்
இறக்கவகை யிட்டனையே யெம்பி ரானே. (கூஉ)

சயிந்தவனை யிப்பகலே கொல்வேன் றப்பில்
தழலிறப்பே னெனவிசயன் சபதங் கூறப்
பயந்தவன்பெட் டிக்குளுறச் சக்க ரத்தால்
பகலைமறைத் திரவாக்கித் தருமன் சேனை
மயங்கிடச் சயிநதவனு மொளிப்பு நீங்கி
வரவிரவைப் பகலாக்கி விசயா வெய்யென்
றியம்பியந்தச் சயிந்தவனை வதைத்துப் பார்த்தன்
இறவாமற் காத்தனையே யெம்பி ரானே. (கூங)

மைந்தனெனுஞ் செயத்திரதன் சிரத்தை யிந்த
மண்ணில்விழச் செய்தவர்கள் மடிக வென்றே
சிந்துபதி தபசுபண்ணி யிருக்கப் பார்த்தன்
செயத்திரதன் றலையறவே யெய்த பாணம்
சந்திபண்ணுங் கையிற்சிரத்தைக் கொடுபோய் வைக்கத்
தரையிலிட்டுச் சிந்துபதி தானே சாக
இந்தவகை தொடுத்ததனு லன்று பார்த்தன்
இறவாமற் காத்தனையே யெம்பி ரானே. (கூச)

கன்னனெய்யுங் கடுநாகக் கணையாற் பார்த்தன்
கழுத்தறுந்து மாயாமற் றேரைத் தாழ்த்த
மின்னுமணி முடிக்கிலக்காய்க் கொடுபோய்ச் சர்ப்பம்
மிகவெட்கித் தனைமீண்டுந் தொடுக்கச் சொன்னல்

உன்னருளால் முன்னாளிற் குந்தி தேவிக்
குரைத்தசொற்காத்தொடுத்தகணையினித்தொடேன்போ
என்னவந்தப் பாம்புதலை யடித்துக் கொண்டே
இறக்கவகை யிட்டனையே யெம்பி ரானே. (சுரு)

தினம்பன்னீ ராயிரங்கோ தானம் பண்ணும்
திறலரசன் முன்னைநா ளீந்த வோரா
தனதுகீ தாரத்திற் சேரி லத்தை
தானுமொரு வர்க்களித்த சாபத் தாலே
மனநடுங்கிக் கிணற்றினிற்பச் சோந்தி யாகி
மயங்கியுற நீயெடுக்கச் சாப நீங்கி
இனனிறமா யுலகமெல்லாம் புரக்க வைத்தாய்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (சுசு)

வரத்திலர னுங்கணமும் வாசல் காக்க
மதத்தவா ணசுரன்மே னீவந் தக்கால்
உருத்திரனக் கினிவிடாீ குளிரை யேவ
உஷ்ணமுடன் குளிருமா யானுற் றக்கால்
கரத்திரளிற் படையெடுத்தே யெதிர்த்த வாணன்
கைகளோ ராயிரத்தி லிரண்டு கையை
இருத்திமற்றைக் கரங்களெல்லாந் துணித்துக் காத்தாய்
இலகுசக்ரா யுதத்தரியே யெம்பி ரானே. (சுஎ)

பொன்னுலகைச் செயித்தநர காசு ரன்றான்
பூதலத்திற் கொடுவந்து வைக்குந் தேவ
கன்னியர்கள் பதினாறு யிரம்பேர் தம்மைக்
கலியாண முகூர்த்தமொன்றிற் பண்ணிக கொண்டே
நன்னெறிசே ரவரவர்க்கோர் புருட னாகி
நாடோறு மவரவர்க ளுடனே கூடி
என்னகத்தி லேயிருப்பா ரெங்கும் போகார்
என்னவுற்றாய் மாயவனே யெம்பி ரானே. (சுஅ)

உருக்குமணிக் கொருபூநீ யளித்தத் தாலே
உன்னுடன்சத் தியபாமை பேசா தூற்றல்
தருக்கொடுவாந துனக்களிப்பே னென்று சொல்லிச்
சயகருடன் மீதேறி வானுக் கேகி
மருக்கமழும் பாரிசா தங்கொள் போது
மறித்தசுர ரிந்த்ரன்விழச் சங்க மூதி
இரக்கமொடத் தருக்கொணர்ந்து மனைவிக் கீந்தாய்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (சுகூ)

பயிர்க்கிறைத்துக் காலில்வருங் கிணற்று நீரைப்
பாகவதன் கைச்செம்பான் முகந்து கொண்டு
வெயிற்சுடுகால் குளிரவே நனைத்துக் கொள்ள
வேளாள னிறக்கவெம தூதர் பாசக்
கயிற்றினிற்கட் டொட்டாமன் முகுந்தா வுன்றன்
கணநாத ராதரவா யழைத்து வந்தே
இயற்சுருதி முழங்கியசீர் வைகுந் தத்தில்
இனதொடும்வைத் திடச்செய்தா யெம்பி ரானே. (எ0)

பாதகவெஞ் சினமுடைய கிராத கன்றன்
பதியிழந்த விதவையைப்பெண் டாக்கிக் கொண்டே
யாதையினில் வீடுகட்டி யிருக்க வோர்நாள்
பாகவதர்க் கமுதளிக்கும் பொருட்டா லுச்சிப்
போதொராடி யவனவன்பந் தலிலே நின்று
போகவடி யார்க்குநிழ லீந்தா னென்றே
ஏதமற விவனோடுஞ் சாலோ கத்தில்
ஏற்றமுற வைத்தனையே யெம்பி ரானே. (எக)

அடவிதனி லரிதாச னெறியே செல்ல
அறியாமற் பறிக்கவந்தோர் கள்ளன் கிட்ட
படைவிற்கொண் டோர்வேடன் கூடி யத்தால்
பறியாக்கள் ளன்றொலைய வூர்போய்ச் சேர்ந்தே

திடமுற்ற பத்தியினு லுன்னைப் போற்றி
திருவாரா தனஞ்செய்ய வேட னாலே
இடாற்று னென்றவனை வைகுந் தத்தே
எண்ணமுற வைத்தனையே யெம்பி ரானே. (எ௨)

உன்னாம மாயிரத்தி லொருபேர் சொல்லான்
உனதடியார்க் கொருநாளும் வணங்கிப் பேசான்
சொன்னாலும் பெரியோர்கள் புத்தி கேளான்
சொல்வதெல்லாம் பொய்கொலையுங் களவுஞ் செய்வான்
அந்நீசன் திருடிவந்த திருவ ரங்கத்
தரிசியென்று விற்றதனா லவனுக் காவந்
தென்னூரின் பேர்சொன்னு னென்பேர் சொன்னான்
என்றுமுத்தி யளித்தனையே யெம்பி ரானே. (எ௩)

தாய்தாய்நற் றந்தையாய்க் குருவாய்த் தேவனாய்த்
தாரமாய்ப் புத்திரரா யுறவாய் நானாய்
நீயாகி யெள்ளிலெண்ணெய் போலே யெங்கும்
நிறைந்துபரி பூரணமாய் நிற்குஞ் சோதி
மாயாகண் ணாவரதா வாசு தேவா
மாதவா வென்றுசுரர் வணங்கிப் போற்ற
ஏயாவென் றோயாமல் வேயால் வாயால்
இசையூதி நின்றனையே யெம்பி ரானே. (எ௪)

கன்றுடனே கோபால ரநேகம் பேரைக்
கமலயய னபகரித்துக் கொடுபோய் வைக்க
வென்றியுட னந்தந்த வடிவ மாகி
வேற்றுமையற் றனைத்துமுற வேசிட் டித்தாய்
அன்றிருந்து மற்றைநா ளயன்வந் தக்கால்
அனைத்துமுறக் கண்டஞ்சித் தெண்டன் பண்ணி
இன்றடியேன் செய்தபிழை பொறுத்துக் காவென்
றேத்தவளித் தனையரியே யெம்பி ரானே. (எ௫)

பலவிசையச் சராசந்த னுன்றன் பேரிற்
படையெடுக்க முறிந்தோடிப் பின்பொ ருக்கால்
மலைமிசைநீ யேறத்தீ மூட்டி நீதான்
மடிந்தனையென் றெண்ணிமிகச் சயமா யுற்றால்
அலைவின்றி நீயுதித்து மாறு பாகம்
ஆகவொரு துரும்பினைத்தான் பிளந்தெ றிந்தே
இலகுபல முளவீம சேனன் கையால்
இருபிளவாக் கினையரியே யெம்பி ரானே. (எசு)

நிருவாணத் துடன்குளித்துப் பனைகள் போல
நின்றமையாற் சுரர்கள்முனி சாபத் தாலே
மருதாகி நிற்குமிடத் துன்னை யாயர்
மதியாமல் வெண்ணெய்க்கா யுரலிற் கட்ட
வெருவாம லேதவழ்ந்து மருதைக் கிட்டி
விறற்றிகிரி யாவிரலா லறுத்து வீழ்த்தி
இருளான சாபந்தீர்த் தவரைப் பண்டில்
ஏற்றமுற வைத்தனையே யெம்பி ரானே. (எஎ)

நிலமாது மோகித்தே யுனக்குப் பெற்ற
நிருதநர காசுரனை யும்பர்க் காநீ
கொலவேண்டி வந்துபொர வவன்வி டுத்த
கொடுங்கணைநின் னெற்றியிற்பட் டுதிரத் தாற்கண்
மலர்மூடிக் கொள்கையினின் கரத்தி லுற்ற
வரிசிலையிற் சத்தியபா மைப்பெண் ணெய்ய
இலகாழி யெய்தாற்போ னரகன் மேற்பட்
டிறக்கவினைத் தனையரியே யெம்பி ரானே. (எஅ)

சயமிருக்த சாம்புவனைப் பொருது வென்றே
சாம்பவதிப் பெண்ணையுங்கைக் கொண்ட வந்நாள்
நயமுடனே சிமந்தகமா மணியுங் கொண்டே
நாடனைத்தும் போற்றவெழி லாக வந்தாய்

அயனையளித் துலகனைத்தும் படைக்கப் பண்ணும்
அச்சுதனே யென்றமரர் முனிவ ரெல்லாம்
இயலிசைசேர் வேதத்தாற் றுதிக்க வேவீற்
றிருக்குநா ராயணனே யெம்பி ரானே. (எகூ)

திட்டமுட னுயரில்லில் வெண்ணெய் நெய்பால்
திருடுகைக்கே கண்டபெண்க ளுனைக்க யிற்றால்
கட்டிவைத்து நந்தன்மனை தன்னிற் சென்றே
கைதொழுத சோதையுடன் முறையிட் டக்கால்
தொட்டிலிலே பார்க்கமிக்க கொறுக்கை விட்டே
தூங்குதல்கண் டஞ்சியந்தப் பெண்க ளெண்டன்
இட்டறியா தேசொன்னோம் பொறுமா தாவே
என்றுரைக்கப் பண்ணினையே யெம்பி ரானே. (அ0)

மகரத்திற் சூரியன்வந் துதித்த காலில்
வந்திக்க விந்திரனை நோக்கிப் பொங்கல்
மிகவிட்டுக் கயிலைமலை போலே வைக்க
விளையாட்டா யத்தனையும் நீயே யுண்ணக்
ககனத்தி லிந்திரனும் வந்து பார்த்துக்
கன்மழையை நிரைமீதில் விடுத்த மட்டில்
இகபரத்துக் கிறையவனே நிரைக்காக் குன்றை
எடுத்துமழை தடுத்தனையே யெம்பி ரானே. (அக)

தீமையினால் மக்கள்பழிக் காக்கண் ணில்லாத்
திருதராட் டிரன்வீமற் கொல்ல வெண்ண
வீமனைப்போல் வல்லிரும்பாற் சமைப்பித் தந்த
விழியிலான் முன்னிறுத்தி வீமன் பேச
மாமிடுக்காற் கைநெருக்க விருப்பு வீமன்
வலியதலை தெறித்துயரப் பரக்க வேகண்
டேமமுடன் வீமனையாள் கண்ணு வென்றே
எல்லோருந் தொழவிருந்தா யெம்பி ரானே. (அஉ)

உலகங்க ளீரேழுங் கற்பாந் தத்தில்
ஒருங்கவே யோர்கணத்தி லெளிதா யுட்கொண்
டலேவின்றிக் கறபாந்த வெள்ளந் தன்னில்
ஆலிலேமேற் குழவியாய்த் துயின்ற வந்நாள்
சலிலமற மதுகயிட வரையுண் டாக்கிச்
சக்கரத்தாற் பிளந்துடலாற் சலத்தை மூடி
இலகமுனுண் டருளுலகை யுமிழ்ந்தே பண்டில்
ஏறறமுற வைத்தனேயே யெம்பி ரானே. (அங)

அருமறையா மிருக்கெசுர்சா மத்தி னேடும்
அதர்வணமா கியசதுர்வே தங்க டம்மைத்
திருடியெடுத் துக்கொண்டே யுததி சேரும்
தீயனுக்கா மச்சாவ தார மாய்நீ
ஒருசெலுவிற் சமுத்திரத்தைச் சுருக்கி யேவைத்
துக்கிரத்தாற் சோமுகா சுரனேக் கொன்றிட்
டிருளறவே விதிபடைக்க வவ்வே தத்தை
இரங்கியளித் தனேயரியே யெம்பி ரானே. (அச)

மந்தரமத் தமிழ்ந்தாமற் பாற்க டற்குள்
வளர்ந்தாதி கூருமமாய் மலேயைத் தாங்கிச்
சுந்தரவா சுகியைவட மாகச் சுற்றிச்
சுராசுரர்நின் றமிர்தங்க டைந்த வந்நாள்
ஐந்தருசிந் தாமணிநன் னிதிக ளொன்ப
தானேபரி மூதேவி தாரை தேனு
இந்திரைபொற் கௌத்துவமா மணியோ டாலம்
இளம்பிறையுந் தந்தனேயே யெம்பி ரானே. (அரு)

புண்ணியந்தெய் வதமுஞ்சேர் பூலோ கத்தைப்
புற்பாய்போற் சுருட்டிக்கொண் டேபா தாளம்
நண்ணிரணி யாட்சனேப்பின் றொடர்ந்தே யேகி
நலமுடனே யாதிவரா கத்தே வாகி

மண்ணுலக மனைத்துமிடந் தெடுத்தோர் கோட்டில்
வைத்துவர வவன்மறிக்க வதைத்துத் தேவர்
எண்ணவுல கீரேழும் படியப் பண்ணும்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (அசு)

நலமருவு பிரகலாத னிரணி யாய
நமவென்று சுக்கிரனன் றோதச் சொன்னால்
அலைவின்றி யரிகரிநா ராய ணாவென்
றறிந்துரைக்கப் பிதாசுதனைக் கொல்ல விட்ட
பலமல்லர் மதகரிபாம் பனல்நீர் வெற்பு
படுபடைகண் மித்துருவாக் காக்கப் பண்ணி
இலகியபொற் றூணினர சிங்க மாய்வந்
திரணியனை வதைத்தனையே யெம்பி ரானே. (அஎ)

சுராசுரர் முனிவர்நரர் கையிற் பாரிற்
சுடர்வானிற் பகலிரவி லுள்பு றம்பிற்
பெருமடையிற் றன்சாகா விரண்யன் றன்னைப்
பிரகலாதன் தற்கித்துண் டென்ற தூணில்
நரகரியாப் பொழுதுபுகு நேரந் தன்னில்
நாடியுதித் துயர்வாசற் படிமீ தேறி
இரணியனைத் தொடைமிசைவைத் துகிரி னாலே
இருபிளவாக் கினையரியே யெம்பி ரானே. (அஅ)

தீமையினால் மாவலிதான் வாழ்நா ளந்தத்
தேவர்செயும் வேள்வியைத்தான் செய்கை யாலே
வாமனனாய் மூவடிமண் டாரை யேற்று
வானிலயன் பூசிக்க வொருதா ணீட்டிப்
பூமியோ ரடியாக்கித் தாரை வார்த்த
பூதானக் குறையடியுந் தந்து போவென்
றேமவுல கிற்சுகமாப் பாதா ளத்தில்
எழிற்பலியைச் சிறையில்வைத்தா யெம்பி ரானே. (அகூ)

உலகளந்த போதுவளர்ந் தண்ட கோளத்
துதைந்ததிரு வடியையயன விளக்குந் தீர்த்தம்
பலமுகமா யாகாச கங்கை யாகிப்
பகிரதன்மெய்த் தவந்தாற்பார்க் கிறங்கும் போதச்
சலமிருந்தே யரன்சடையிற் றங்கி யந்தச்
சங்கரனைச் சிவனாக்கி யிழிந்த தீர்த்தம்
இலகுபுகழ்க் காசியிலே கங்கை யாய்வந்
திடர்தீர்க்கப் பண்ணினையே யெம்பி ரானே. (௬0)

தசரதன்பா லுதித்துமுனி யாக முற்றித்
தாளிணையாற் கல்லைப்பெண் ணாக்கி யார்க்கும்
வசமலாப் பினாகத்தைக் குனித்தொ டித்து
மனமகிழச் சீதையைநன் மணமுஞ் செய்து
குசலைபண்ணிக் கவித்திரளாற் சேது கட்டிக்
கொடியரா வணகும்ப கருண னைக்கொன்
றிசைபெறவே வீடணற்குப் பட்டங் கட்டி
ஏற்றமுற வைத்தனையே யெம்பி ரானே. (௬௧)

வசுதேவன் சுதராறு பேரைச் கஞ்சன்
வதைத்தபின்னே ழாங்கருவால் வழுவி யேவீழ்ந்
தசரீரி யாலந்த நந்த கோபன்
அடைக்கலமா முரோகிணியார் வயிற்றிற் புக்குச்
சசிவடிவாய்ச் சங்கரு ஷணனாய் வந்தே
தக்கதிறற் கண்ணனுக்குத் தமைய னாகி
இசைவாக வலாயுதத்தா லுலகைக் காத்தாய்
எற்பலபத் திராமா வெம்பி ரானே. (௬௨)

வசுதேவ னிடத்துதித்து நந்த கோபன்
மகவாகிச் சுரர்பணிந்து போற்ற வீறி
அசுரேச ர்நேகருடன் கஞ்ச னைக்கொன்
றைவருக்காப் பாரதப்போர் பொருது வென்று

சிசுபாலன் வசைகேட்டுப் பொருது சாபந்
தீர்த்தருளிப் பரமபத மவனுக் கீந்தே
இசையாகத் திருவிளையாட் டநேகஞ் செய்தாய்
ஏற்றமுள்ள கோவிந்தா வெம்பி ரானே. (கூங)

நம்பியமெய்க் குருராமா நுசனைப் போற்றி
நலமுடனே கசசியில்வாழ் கடாம்பி யாச்சான்
தும்பையூர்க் கொண்டியென்பா ளவபாண் டத்திற்
றேய்த்ததயிர் விலைபேசிக் கொண்டு வந்தே
உம்பர்தொழு முனக்கேத்தித் தானு முண்ண
உளத்திருள்போய்த் தயிர்க்குவிலை வாங்காக் கொண்டிக்
கெம்பரமென் றச்சான்சொற் கேட்டு முத்தி
ஈந்திட்டா யச்சுதனே யெம்பி ரானே. (கூச)

பாகவத கிருஷ்ணயங்கா ரென்பார் நின்பால்
பத்திகொடு சங்கீதம் லட்சம் பாட
நீகருணை கூர்ந்துதிருப் பதிநூற் றெட்டும்
நிமிடத்தி னேசமுடன் றோன்ற வைத்தாய்
மோகமுட னெடுத்தவனை விழுங்கிக் காட்டி
முடியிலவன் றரித்தபட்டும் வாயிற் காட்டி
ஏகமாய்க் கூடியநா ளிட்டங் காட்டி
எல்லாரு மறியவைத்தா யெம்பி ரானே. (கூரு)

சக்கரஞ்சங் குயர்கதைவா ளனுவோ டைந்தும்
தரித்தருளும் பரம்புருடா கமலக் கண்ணா
மிக்கபரா பரமூர்த்தி துளபத் தாமா
விறலுடனே மண்ணளந்துண் டுருக்குஞ் சோதி
அக்கரமைம் பத்தொன்றாய்ச் சொல்லாய்ச் சொல்லின்
அருத்தமுமா யெட்டெழுத்தின் வடிவு மாகி
எக்கணிலு மணுவுக்கு மணுவாய் நின்றும்
எழிற்குருவா யுதிக்கின்றா யெம்பி ரானே. (கூசு)

திருமாதும் நிலமாதும் பத்தி யாலே
திருவடிகள் வருடியிட விழித்து றங்கும்
கருணாக ராமுத்தி வீடா யெங்கும்
கலந்துருவா யருவாகி யிருக்கு மாயா
அருளாளா வுயர்சனகன் சனக்கு மாரன்
அனந்தன்கரு டன்விசுவச் சேன னென்றும்
இருள்சேரா மார்க்கண்டன் பிருகு போற்ற
இருக்கின்றாய் நாரணனே யெம்பி ரானே. (சுஎ)

கண்ணிரண்டா யிரமுண்டைய சேஷன் பன்னாள்
காத்திருந்து முன்னுடைய வடிவங் காணான்
பண்ணுறத்தன் னாவிரண்டா யிரத்தா லோதிப்
படித்துமுன்றன் பெருமைதனைப் பகர மாட்டான்
மண்ணுலகிற் சிறியவனோர் நாவா லுன்றன்
மகிமையைக்கண் டுரைக்கவென்றால் வசமோ வானோர்
என்னரிய மாயவனே கச்சி வாழும்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (சுஅ)

பட்டமரந் தளிர்த்துமிகப் பூத்துக் காய்க்கப்
பாற்பசுக்கள் சுரந்தொழுக்க மலடு மீனத்
துட்டவியாக் கிரமமுமா னினமு மொன்றாத்
தோகைமயில் படநாக முடனே யாட
வட்டமுலைக் கன்னியர்கள் மாலாய் நிற்க
வானவருந் தானவரும் வணங்கிப் போற்ற
இட்டமுட னேவேணு கானம் பண்ணாய்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (சுசு)

ஆருமுனே நவமாகப் பாட வேதம்
ஆகமசாஸ் திரமனைத்தும் நீயு ரைத்தாய்
பேருமுனக் குண்டான பழைய பேரே
பெருங்கதையு மியலிசையும் பழைய வேயாம்

காருததி நீர்தனையே முகந்து பெய்யிற்
கடலிலது நீத்தமதாய்க் கலந்துற் றாற்போல்
ஈரமுடன் மெய்யடியார் நவமாப் பாடில்
இரங்கியதுட் கொள்கின்றா யெமபி ரானே. (௧0௦)

திருநாம மறவாவுன் றாசர்க் கெல்லாம்
சீர்பாதத் தூளிநா யடியே னுன்றன்
அருளாலே யெம்பிரான் சதக மென்றே
அறைந்தகவி நூறதனி லொன்றா னாலும்
பரிவாகக் கற்றவர்க்குங் கேட்ட பேர்க்கும்
படிமிசையிற் றுன்பமறுத் தின்பம் பாலித்
திருவடியின் மெய்ஞ்ஞானம் விளங்கச் செய்வாய்
இறைவாநா ராயணனே யெம்பி ரானே. (௧0௧)

எம்பிரான் சதகம்

முற்றிற்று.



உ

சிவமயம்.

எழூமூர்

வீராசாமி உபாத்தியாயர்

இயற்றிய

# சிவசங்கர சதகம்.



இஃது

மகாவித்வான்

காஞ்சீபுரம்-இராமசாமிநாயுடு அவர்களால்

பார்வையிடப்பெற்றது.



மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.



[2-வது பதிப்பு]

1917

விலை பை 9

உ

சிவமயம்.

# சிவசங்கர சதகம்.



### காப்பு.

வெண்பா.

சிற்சபையிலாடுஞ்சிவசங்கரேசுரன்மேற்
பொற்சதகநாளும்புகலவே—எற்கருளும்
மாதங்கவத்திரத்தான்மாமலரோனும்பணிய
மாதங்கவத்திரத்தான்வந்து.

இதுவுமது.

தேவாதிதேவன்சிவசங்கரேசுரன்மேற்
கோவாமணிச்சதகங்கூறவே—மூவாத்
தவளமதவாரணத்தான்றன்பரவுமெங்கள்
கவளமதவாரணத்தான்காப்பு.

---

## நூல்.

கார்கொண்டமே னியன்மன்றல்சூழ் களிகொண்டசெங் கமலன்றருத், தார்கொண்டவிந் திரன்வானவர் தயைகொண்டமா தவரந்தணர், நீர்கொண்டநின் னருள்கொண்டலோ நிறைகொண்டனர் கறைகண்டனே, சீர்கொண்டசங் கரிபாகனே சிவசங்கரா சிவசங்கரா. (௧)

புல்லாடராவணிவேணியும்பொன்மான்மழுத்திரிசூலமும்
இல்லாமனல்லறனுதிகளினிதாகவன்றொருநால்வருக்
குல்லாசமாவுரைசெய்திடவொளிர்தக்ஷிணாமூர்த்தங்கொடு
செல்லார்சிலைக்கல்லாலின்வாழ்சிவசங்கராசிவசங்கரா. (௨)

நாணகவாசுகிமந்தரநன்மத்ததாய்த்திருமாலுடன்
கோணமல்வானவர்தானவர்கூடிக்கடல்கடையன்றெழுஉ
வாணனைமாய்த்திடவந்தவவ்வன்னஞ்சையுண்டுயவைத்திடுஞ்
சேணார்பிறையணிவேணியாசிவசங்கராசிவசங்கரா. (௩)

தேராகமானிலமான்மகன்றிறல்சூதனங்கியுமாலுடன்
கூராகவெஞ்சரமாமறைக்கொடுவேகவெம்பரியாகவே
போராரடற்சயவீரர்போற்போய்ப்புன்னகைசெய்தகுறும்
சேரார்திரிபுரமட்டதென்சிவசங்கராசிவசங்கரா. (௪)

மூலாகயநெறிகண்டநன்மிருகண்டுமாமுனிபுத்திரன்
மேலாய்மிகுசீற்றங்கொடுமேதிப்பிடர்வருகாலனைக்
காலாலுதைத்தவன்பனைக்காத்தேதாயிடர்தீர்த்தாளனைச்
சேலார்விழியுமைபாகனேசிவசங்கராசிவசஙகரா. (௫)

தேடாவரும்பொருடேடிகீட்டிசைநோக்கியேசெலும்வாணிபன்
காடாருமவவழிகங்குலிற்கார்மாரியாற்சவலைப்பட
வாடாதெனவொருதோழனாய்வந்தாண்டவாறெனையாளுவாய்
சேடாதனன்பணிபாதனேசிவசங்கராசிவசங்கரா. (௬)

ஆறுடுமாமுடியும்பணித்தலர்தூவுமாவடிகாணவே
மாறுடுமைந்தன்றந்தையும்மாவன்னமாவாய்க்காண்கிலார்
சீறுடுபாம்பணிவேணியைசசேய்க்காய்வளைத்தருள்செய்ததென்
சேறுடுகுங்குமவண்ணனேசிவசங்கராசிவசங்கரா. (௭)

ஐயாவுனக்கணிசெய்ததேனலர்மாலையையந்நாளிலேர்
மையார்குழற்கணிகைக்கணிமறையாளனீவாழ்கோயில்வந்,
தையானவருள்செய்கெனவணிகேசமார்முடிகாட்டிநீ
செய்யாவதிசயமென்சொல்வேன்சிவசங்கராசிவசங்கரா. (௮)

அம்பொன்முடிவல்லாளனார்க்கருளீந்திடுஞ்சேயின்றியே
பைம்பொன்மணிப்பலவீந்துநற்பயனில்லையென்றதனாலுனை

நம்பித்துதிசெயுநாளையினற்பாலனாய்வந்தாண்டசீர்ச்
செம்பொற்சபாபதியெற்கருள்சிவசங்கராசிவசங்கரா. (௯)

வாணாடனைநிலையென்றெழின்மடவார்மயற்கடன்மூழ்கியே
வீணாள்கழித்தேயுன்னிருவிரையார்மலர்ப்பதநாடியே
பேணாதுழன்றிடுமெற்குநீபெருவாழ்வளித்தருள்செய்குவாய்
சேணாகர்பணிதேவனேசிவசஙகராசிவசங்கரா. (௧௦)

மகத்தாதிசைவர்கள்பூசைசெய்மலராய்மதித்துயர்கல்வினை
யகத்தாவலாலுனையேயெறிந்தன்புற்றிடுமச்சாக்கியற்
கிகத்தார்க்கரும்பொருடந்தநீயெனையாளிலவ்விசைநீங்குமோ
செகத்தாதியேயொளிர்சோதியேசிவசங்கராசிவசஙகரா. (௧௧)

காட்டையுடுப்பூராகவோர்கவிகைக்குளேயரசாண்டிடும்
வேட்டைத்தொழிலெயினப்பிரான்வேதாந்தநின்வதனத்திலார்
ஓட்டைக்கணிற்றன்கண்களையுறவைத்தல்போலென்செய்வன்யான்
சேட்டைப்பொறியற்றோர்பணிசிவசங்கராசிவசங்கரா. (௧௨)

வில்லார்மணிமுடிசூடியவிதுவின்குலத்துறுபார்த்தன்முன்
பொல்லாதவைம்புலவாதையைப்போக்கித்தவஞ்செயவந்துநீ
வில்லாலடியுண்டேயருள்வேடிக்கையேமிகநன்றுகாண்
செல்லாரழற்கிரிவாசனேசிவசங்கராசிவசங்கரா. (௧௩)

பாண்டிப்பதிதனில்வாழ்வுகொள்பரிசுத்தவாணிபமாதுனை
வேண்டித்துதித்திடவந்தவள்வீதத்தொழிற்கேகூலியா
யாண்டிட்டபிட்டுண்டவ்வினையாகாமையாலடிநீபடச்
சேண்டங்குவோர்க்கும்பட்டதென்சிவசங்கராசிவசங்கரா. (௧௪)

உனைநிந்தைசெய்வோர்வாழ்வுதானுடைபட்டிடுமெனவுண்மையே
யெனவெண்ணயாவரும்வானவர்க்கிறையாமுனையிகழ்வானசொற்
றனையேயுரைத்தேதககனற்றலைபோய்த்தகர்த்தலையாகினான்
சினமின்மையோர்பெறுசெல்வமேசிவசங்கராசிவசங்கரா. (௧௫)

ஆதித்தனையொருபாத்திரமாய்க்கொண்டுநீயந்நாளிலே
பூதிப்புனைந்தொளிர்மெய்யொடும்போந்தேகுலாலன்றன்மனஞ்
சோதித்தவர்கூனீக்கிமுற்சுகமீந்தநின்மலதேவமால்
சேதித்துனைத்தொழவெற்கருள்சிவசங்கராசிவசங்கரா. (கசு)

தீதாஞ்சவுமியர்கூடியேதிருநாவினுக்கரசன்றனை
வாதாடிநீற்றறையுய்த்துமேவன்கற்பிணித்தேயத்தியின்
மீதாயெறிந்திடவேயதைமிதப்பிக்குநின்விளையாட்டெனே
சேதாம்பல்போன்றொளிர்வாயனேசிவசங்கராசிவசங்கரா. (கஎ)

தொண்டென்றுநீமுறிகாட்டிமுன்சுருதிப்பிராமணனாயவை
யண்டிச்செயுமணநீக்கியெம்மாரூரனுக்கருள்செய்ததைக் [ய்
கண்டிங்குனைத்தொழுவேன்றனைக்காத்தாள்கிலாப்பவமென்சொலா
செண்டேர்விரனதிமோகனாசிவசங்கராசிவசங்கரா. (கஅ)

மாலஞ்சிவாரிதிபுக்கவுமலரோனரூபமதாகவும்
வேலஞ்சுகண்சசிகேள்வனும்விலகுஞ்சலந்தாரூரநின்
பாலஞ்சுவெண்மலைநண்ணவப்பதகன்றனைக்கண்டித்திடுஞ்
சேலஞ்சமாரலைவாயனேசிவசங்கராசிவசங்கரா. (க௯)

அஞ்சாதவன்கொலைசெய்திடவறியாதவன்னிலையெய்திட
மஞ்சார்குழன்மடவார்மயல்மாறாதுழல்வசையாளனியான்
எஞ்சாமனீயெனையாள்வதேயெழிலாகுமீதறியாய்கொலோ
செஞ்சாந்தணிவரைமார்பனேசிவசங்கராசிவசங்கரா. (௨௦)

யோகுற்றவர்க்கருள்செய்யுநீயோகுற்றனையென்றெண்ணியே
பாகுற்றசெஞ்சொல்வாணிதன்பதியேமுதல்முனிவோர்கள்சந்
தேகித்துமாரனையேவுமத்தெய்வத்திறன்மிகநன்றுகாண்
சேகுற்றமூவிலைவேலனேசிவசங்கராசிவசங்கரா. (௨க)

தேவாதிதேவாவுன்றனைத்தியானஞ்செய்தேவருமந்தணன்
மேவாவரும்பசிகொண்டுதன்விரைவாய்திறந்திங்காலையில்

தாவாவருங்கொடிவாயனந்தரவேயதற்கருள்செய்திடுஞ்
சேவார்கொடிப்பணகங்கணசிவசங்கராசிவசங்கரா. (உஉ)

தவநீதிசேர்திருவாதவூர்த்தனிநாயகர்க்காயன்றுநீ
நவஞானமேனரியானதைநவையற்றநற்பரியாக்குமுன்
உவமானமில்லாச்சீரெனுலோவாமலின்றெனையாளருட்
சிவஞானசற்குருநாதனேசிவசங்கராசிவசங்கரா. (உந)

அம்புற்றசெவ்வனசந்தனையணியார்முனிசிரம்வைத்துமே
வெம்பும்மருங்கானிற்செலவிரைவாகமுன்வருசேனமும்
பம்புஞ்சிறைநிழறந்தவப்பாறிற்குவிண்பாலித்திடுஞ்
செம்பொற்சிலையாயெற்கருள்சிவசங்கராசிவசங்கரா. (உச)

கானிற்றிரிபசுவாகிநீகாலன்னருங்கன்றாய்மதில்
வானுற்றிடுஞ்சிகரத்திருவாரூரிலேவளவன்மகன்
தானுற்றவத்தேர்க்காலினூற்சாங்கன்றெழுந்தகையென்னகாண்
தேனுற்றகொன்றைத்தாரனேசிவசங்கராசிவசங்கரா. (உரு)

கோக்கின்னிறகொடுவெண்மணிக்கோவைப்புனையொருசித்தனாய்
மிக்கோர்புகழ்தமிழ்மாறனார்மிளிருஞ்சுவைக்கல்யானையை
இக்குத்தினச்செயவைத்தவுன்னினையற்றசீரென்சொல்லுவேன்
செக்கச்சிவந்திடுமேனியாய்சிவசங்கராசிவசங்கரா. (உசு)

இருந்தாமரைப்பொய்கைக்குளேயிழிபூசுரன்மகனைக்கரா
வருந்தப்பினர்பலநாள்கழித்தவ்வாறறிந்திடுசுந்தரா [ன்
பொருந்துந்திருப்பதிகஞ்சொலப்புதல்வன்வரும்புகழென்சொல்வே
திருந்தும்பணியணிமார்பனேசிவசங்கராசிவசங்கரா. (உஎ)

கோங்கார்குழற்சிலையார்நுதற்குயிலார்மொழியயிலார்விழிப்
பங்கேருகவதனத்திருப்பாவைக்குநீபகர்தாயென
மங்காதருள்செயுநின்னையேவாழ்த்தென்றுமேவாராதேனே
செங்காவியங்கனிபாகனேசிவசங்கராசிவசங்கரா. (உஅ)

தாவும்புலிக்கான்மாமுனிதனையற்குணப்பாலற்றனை
மேவித்துதிசெயமாறுயில்வெண்பாற்கடறனையீந்தவுன்
ஏவற்றலைக்கொளுமென்றனுக்கின்றீயவேயொன்றில்லையோ
சேவற்கொடிச்சேய்தந்தையேசிவசங்கராசிவசங்கரா. (௨௯)

தாய்வேண்டிலன்றமர்வேண்டிலன்சற்றும்பிதாதனைவேண்டிலன்
சேய்வேண்டிலன்றமர்வேண்டிலன்செற்றார்நலந்தனைவேண்டிலன்
மாய்வாகுமில்லவள்வேண்டிலன்மாதேவநின்னருள்வேண்டுமுன்
சேய்வேண்டும்வேலினையீந்தவாசிவசங்கராசிவசங்கரா. (௩0)

படியேழ்சுமந்திடுமானைகள்பதறித்திடுக்கிடவேபணி
இடியுற்றெனத்திகைமேவுவோரிரியத்தவமுனிவோர்விடுந்
துடியைத்தரித்தாயென்மனத்துயர்நீக்கனிற்கரிதாகுமோ
செடியற்றமாமறையோர்புகழ்சிவசங்கராசிவசங்கரா. (௩௧)

அரிதானமானிடதேகமிங்கடியேனெடுத்ததனான்மிகப்
பெரிதானவுன்னருள்வேண்டினேன்பின்னென்பதேபிழையாகுமே
விரிபானிலாவெயிறுந்தழன்மேவுஞ்சிகைக்கொலையாளராய்த்
திரிதானவர்குலகாலனேசிவசங்கராசிவசங்கரா. (௩௨)

சிந்தேழுநற்குவடெட்டுமிச்செகமுஞ்சிதைத்திடுவென்றலை
தந்தேமுனம்முனிவோர்விடத்தழல்வீசியேநின்மீதிலே
வந்தேவிழும்மழுவைக்கரம்வைத்தாயெனக்கருள்வைப்பையோ
செந்தேன்மலர்ப்பதவண்ணலேசிவசங்கராசிவசங்கரா. (௩௩)

ககனப்பெருவெளியின்மதிகலையுண்ணவல்லவரான்விடும்
இகன்மானைநின்கையிலேந்தலுக்கிழிவல்லவென்றனையுன்பதத்
தகம்வைத்தலீதறியாய்கொலோவடியாருயிர்க்குயிராயுறுஞ்
செகநாதசற்குருபோதநற்சிவசங்கராசிவசங்கரா. (௩௪)

பழுவத்துள்வாழுநவோர்கடம்பணியால்வருமழல்கால்விழி
யுழுவைக்கொடுங்கதமீறிவந்துறவேயதன்சருமத்தினைத்

தழுவித்தரித்திடுமோடையாய்தமியேற்கருடருவாய்கொலோ
செழுமைத்தருங்கைலாசனேசிவசங்கராசிவசங்கரா. (௩௫)

மாப்போதசங்கமரூபமாய்வந்தன் றுநீயொருமைந்தனைத்
தாப்போதவுண்கறியாவெனத்தருமன்புளோர்க்கேயுன்னருள்
காப்போதுவல்லூர்கன்மனக்கடையேற்குமுண்டாமோசொலாய்
சேப்போதெனும்பதநாதனேசிவசங்கராசிவசங்கரா. (௩௬)

பந்தப்பெருந்தொடராற்றிடப்பயில்வேள்வியோர்தன்னேவலால்
வந்தப்பலபணிதன்னையேமகிழ்சேர்கலன்றுறைகவே
சந்தப்புயத்தணிகின்றதுன்றகையென்பனோதயையென்பனோ
செந்தண்கடுக்கையின்மாலையாய்சிவசங்கராசிவசங்கரா. (௩௭)

பொல்லாதவெங்கொலைசெய்யவேபுகுவன்முயலகனைப்பவம்
இல்லாதவுன்பாதத்துறமியலீயுநின்றனைவாழ்த்துமிக்
கல்லாதவிவ்வெளியன்றனைக்காவாதுனக்கறமோசொலாய்
தில்லாபுரிவாழ்சுந்தராசிவசங்கராசிவசங்கரா. (௩௮)

செந்தீநிறக்குறளுக்குமுன்செந்தாமரைப்பாதந்தொழத்
தந்தாயருட்கண்ணென்னிலுன்சரணண்டியேசரணென்னுமென்
சிந்தாகுலந்தனைநீக்கிடாச்செயலென்னவிவ்வியலென்னகாண்
செந்தாமரைக்கண்ணன்றொழுஞ்சிவசங்கராசிவசங்கரா. (௩௯)

பொய்யன்கொலைக்களவுஞ்செயும்பொல்லாதவன்புரையேமிகும்
வெய்யன்பொறாமையையுட்கொளுமிகுபாதகன்மிடியோர்க்கிடாக்
கையன்களவினுநன்னெறிகருதாதயான்கதிசேரநின்
செய்யன்பருளுளதாகுமோசிவசங்கராசிவசங்கரா. (௪௦)

கூற்றுக்கள்பற்பலமேய்த்திடுங்கண்ணன்மலர்க்கடவுண்முனம்
மூற்றுச்சினங்கொண்டேயவர்முடுகும்பொழுதிறைநீவாச்
சற்றுகினுமஞ்சாவிதிதலைகொய்தவாமூவாசையைச்
செற்றார்தொழும்பொற்றுளனேசிவசங்கராசிவசங்கரா. (௪௧)

மெய்யாகநின்னருள்வேண்டினோர்மேவாதபாக்கியமில்லையாற்
பொய்யாகவாஞ்சையினாலுனைப்போற்றுந்திறம்பொய்யல்லவே
ஐயாவினியடியேற்குநின்னருள்கிட்டுமாறுளதாகநீ
செய்யாவிடிலெவ்வாறுய்வேன்சிவசங்கராசிவசங்கரா. (௬௨)

அம்போதமேமிகும்வாவியினருகாவுறைந்திடுமந்தணர்
தம்போதமென்மைகள்குன்றிடச்சமர்செய்தவர்தவமாய்த்திடும்
வெம்போதமாமுகசூரனைவிளியச்செயும்விறல்வீரவென்
செம்போதகந்தனிலுற்றவாசிவசங்கராசிவசங்கரா. (௬௩)

கொம்பொன்றினான்மண்கீறியங்குறுதானவன்றனைமாய்த்துபின்
பம்புமுயிர்த்தொகையாவையும்பதறச்செயுமொருகேழலை
வெம்புஞ்சினத்தாற்கொன்றதின்வெண்கோடணிவிசயத்தினைச்
செம்பொன்மலர்க்கிறையுஞ்சொலான்சிவசங்கராசிவசங்கரா. (௬௪)

பெருமாறனாரொருகானிலேபெலவேட்டைசெய்தேபின்பவர்
வருமாறில்வெம்பசிமேவவுன்வடிவின்றியுண்ணேனென்னநின்
னுருமானவேசெய்யாப்பினுன்னுருவானதென்னோகோசொலாய்
திருமாமறைசொலும்வாயனேசிவசங்கராசிவசங்கரா. (௬௫)

பந்தார்கரப்பரவைபயில்பருமாமனைக்கொருதூதனா
யந்தாருவின்மலர்தூவவிண்ணயனாதியோர்படியாரெலாஞ்
சிந்தாகுலங்கொளவன்றுநீசென்றாயெனுஞ்சீர்காணவோ
செந்தாமரைத்தாளானதேசிவசங்கராசிவசங்கரா. (௬௬)

வைதீகமாமுனியன்பினான்மண்மாரிபெய்வித்தொன்னலர்
கைவித்தபோதவ்வேதியன்னாதாகதியேதென்றிடப்
பொய்மேவுமவனூர்நீங்குமுன்பொற்பாதநற்குறிபின்வரச்
செய்தாண்டதென்பாலில்லையோசிவசங்கராசிவசங்கரா. (௬௭)

நயங்கொண்டகார்பெய்யாததானனிவந்திடுங்கலிவெம்மையாற்
பயங்கொண்டுனைப்பூசிப்பவன்பசியான்மெலிந்திடல்நீங்கவே

வயங்கொண்டவெண்மணலைத்தினும்வண்சோறெனச்செய்தன்றுநீ,
செயங்கொண்டதின்றிலையோசொலாய்சிவசங்கராசிவசங்கரா. (௪௮)

பாலென்னவேயொளிர்வெள்ளியம்பனிமாமலையுறுதேவைநண்
பாலேதவஞ்செயுமாறுபெண்பாலேவருமுனிவோர்கள்சொல்
லாலேயவர்க்கருள்செய்ததாலடியேற்குமிங்கவர்வேண்டுமோ
சேலேமருள்விழிபாகனேசிவசங்கராசிவசங்கரா. (௪௯)

ஆனாலுமென்போற்றீயருமையாவுனைப்போற்றாயரும்
வானாட்டுமிவ்வையத்துளும்வாய்பேசமற்றோரின்மையாய்ப்
போனாரெனிலினியாவரென்புகர்நீக்குவார்நீயேயருள்
தேனார்மலர்த்தொடைவேணியாய்சிவசங்கராசிவசங்கரா. (௫௦)

திகழுங்கலிங்கத்தாதிபன்தேகத்திலாகியகுட்டநோய்
இகழ்வாலவனுயிர்நீக்குவானென்னும்பொழுதினிலுன்னருள்
மிகவாழ்வுதந்தாயாகையான்மிடியேற்குமவ்வினைவேண்டுமோ
செகநாதனேமிகுபோதனேசிவசங்கராசிவசங்கரா. (௫௧)

சிரமாலைகண்டிகைகுண்டலந்திகழ்நீறுகற்றோயாடையொண்
கரமாலையுங்கொடுகானிலேகாயாமருமலர்வண்ணனுங்
கருணாலயாவளிசேயெனக்கனமாதவஞ்செய்போதருள்
சிரமாலையாயருள்பாரையாசிவசங்கராசிவசங்கரா. (௫௨)

மகவானொருமகமேசெயவளர்விச்சுவவுருவன்னெனுந்
[illegible]கையாளனைக்குருவாக்கவத்தவனேசெயுந்தவறுலரி
யகமேகொதித்தவனைக்கொலவடர்தீவினைதீர்த்தாண்டதே
சிகமேலவாசிகபூசிதசிவசங்கராசிவசங்கரா. (௫௩)

துருவாசமாமுனிசாபமேற்சூழ்ந்தேவருமொருநான்குகோட்
டுருவாரணமுனையேத்துமவ்வுழிநீயதைக்காத்தாண்டனை
மருவார்கடற்குள்ளாக்குமிவ்வன்னெஞ்சனக்காமோமுனஞ்
செருவாரணத்துரியைப்புனைசிவசங்கராசிவசங்கரா. (௫௪)

தாரார்சுவேதன்னல்லணிச்சடைகட்டியைம்பொறிவெட்டியே
யோரிலிங்கப்பூசைசெய்தேத்தும்பொழுதேகாலனும்
வாராதுநாணெறிபோதிலேவந்தாண்டருளெம்மையனே
சீரார்மதிநதிவேணியாசிவசங்கராசிவசங்கரா. (௫௫)

நாராயணன்மேளுளினின்னகையார்சிலம்பணிதாளினில்
ஓராயிரமலர்கொண்டுநெஞ்சுறவேயருச்சிக்கும்பொழு
தோரார்மலரொன்றின்றியேயிருநோக்கிலோர்கண்சாத்தமற்
சேராழிமாயவனுக்கருள்சிவசங்கராசிவசங்கரா. (௫௬)

முற்றுமதியணிவேணியாமூரன்மலையெனவட்டதில்
சற்றுகிலுந்தொலைவில்லெனச்சாற்றுந்தடாதகையின்புற
வற்றுவருட்குறளுண்ணவேமகிழ்தேவமாணிடமாவரி
செற்றுரதனதளாடையாய்சிவசங்கராசிவசங்கரா. (௫௭)

அலையாறுசூடியவெந்தையென்னகட்டிற்பசியனன்மாறவே
தொலைபாவருள்செய்தாளெனச்சொல்லுங்கடிகைக்கீந்தனை
நிலையாதுமின்றியேவாடுமெற்கேநின்னிருதாடந்தருள்
சிலையார்நுதற்பரைநாயகாசிவசங்கராசிவசங்கரா. (௫௮)

பொன்மாலைவாரிதிதோயவேபுகலத்திருமகளாகிய
மின்மாலையங்குழனின்னிருமிளிர்பொற்சிலம்படியேற்றிடக்
கன்மாமலராக்கொண்டவாகடல்கூடலில்வரவேயருள்
தென்மாமலைத்தவளுர்துதிசிவசங்கராசிவசங்கரா. (௫௯)

மாயங்கொளுங்கொலைசெய்கலைவலையென்னமாவிழியார்மயல்
போயந்தகாண்மறைநூபுரப்பூந்தாளிணைத்தொழவன்பருள்
தூயம்பிகைதனமார்புயாசுடருற்றவெவ்வயில்வெற்றிவேல்
சேயன்றனைப்பெறுமூலனேசிவசங்கராசிவசங்கரா. (௬0)

தங்குஞ்சராசரமோடுமெத்தலமும்படுங்கடைநாளினில்
பொங்குந்திருமாலோடயன்போற்றிப்பணிந்திடமுன்புநின்

அங்கத்திலாரோணஞ்செயுமையாவெனைக்கையாதருள்
சிங்கத்துரிப்புனையண்ணலேசிவசங்கராசிவசங்கரா. (௯௧)

வேலாவலயந்தன்னையேமேவும்புனற்கரசேவிமுன்
கோலாகலஞ்செய்தாலவாய்குலையச்செயுமவ்வீரனை
வேலாலடுவென்றுக்கிரவேந்தற்கருள்செய்தாண்டனை
சீலாகமமறைமூலனேசிவசங்கராசிவசங்கரா. (௯௨)

நயனோர்கபோதகமாகவேநாயேனையாளிறைநீயொரு
நிமிர்மாவலவில்வேடனாய்நிலவித்தொடர்ந்தேஞாலமேல்
நிமியென்னுமன்களிகொள்ளவேநிறைசெல்வமாம்பொருடந்திடுஞ்
சிமயப்பருப்பதவிற்காசிவசங்கராசிவசங்கரா. (௯௩)

விக்கியாபனஞ்செய்தீர்ந்திடவேதம்வலோனிலையென்றுமே
முக்கியாதிகாரணமாதவமுனிவோர்துயருறுகாலையிற்
றிக்கியாதினுங்களிகொண்டிடச்சேயென்னவந்தருள்செய்தைமால்
சிக்காதெளியெனையாளுவாய்சிவசங்கராசிவசங்கரா. (௯௪)

சுசியுற்றரத்தினம்யாவையுஞ்சோரர்கொடுபோனரென
அசைவுற்றுசெந்தமிழ்மாறனாருந்திருச்சவைதன்னிலே
வசியக்குலமன்னாகியேவந்தேநவமணிதந்தவா
சிசுவென்னையாளுனைநம்பினேன்சிவசங்கராசிவசங்கரா. (௯௫)

அனலார்விழியிருகோடொடுமெதிருங்குரலொடுகூடவிற்
சினமாரவந்தேயெற்றிடுஞ்சிந்தூரமேபொடியாகென
மனுநீதிமாறன்கையினில்மாய்த்தேமகிழ்கொளுநாதயான்
தினநின்பணிசெயுமாறருள்சிவசங்கராசிவசங்கரா. (௯௬)

தூயவேதுமில்லாதெங்கணுஞ்சார்ந்தெவ்வகையுடலிற்புகுந்
துயர்வேசெயும்பண்டாசுரனதிகூரமாய்த்தமரர்க்குமுன்
துயர்யாவுநீத்தருள்செய்தவாதொழுமென்வினைவிடைகொள்ளவா
செயவீரனைத்தருமுக்கிராசிவசங்கராசிவசங்கரா. (௯௭)

தாரார்புயக்குலசேகரத்தமிழ்மாறனார்நினதாலயம்
பாரார்புகழ்கொண்டேத்துமுன்படிவந்தனைக்கண்டேங்கியே
வாராயரவணிவேணியாமாறித்திருவடிவையெனச்
சீராரருள்செய்தாண்டவாசிவசங்கராசிவசங்கரா. (௬௮)

கனலூற்றிடும்விழியுங்கொடுங்காலூற்றிடும்புழைநாசியும்
மனவேகமோடதிவேகமாய்மட்டமார்சமணர்களேவிடும்
பனகந்தனைக்கண்டித்துமுன்படியேழ்புகழ்மாறற்கருள்
சினமற்றமாதவர்போற்றிடுஞ்சிவசங்கராசிவசங்கரா. (௬௯)

திரமேவுவிண்ணவர்மண்ணவர்செறியைம்புலப்பகைவென்றியல்
வரமேதருமுனிவோர்க்கெலாம்வாழ்வும்பெறுஞ்சுகநன்னெறித்
தரமேமுதற்பயனல்கிடுந்தருமப்பரித்துவசத்தனே
சிரமாமலைத்தேவேயருள்சிவசங்கராசிவசங்கரா. (௭௦)

காரின்வளங்குன்றித்துயர்க்கடல்வீழ்ந்துழக்கியநிம்பநற்
றாரின்புயக்குலபூடணத்தமிழ்மாறனின்றிருமுன்னர்வந்
தாரின்புறவெனையாளுவாரமலாவெனப்பொற்காசருள்
சீரின்கலாநிதிசேகராசிவசங்கராசிவசங்கரா. (௭௧)

கனமேகுழல்கயலேவிழிகனியேமொழிதனிமின்னெழில்
அனமேநடையெண்ணாயிரமரிவைக்குமுன்றொடிபூட்டியவ்
வனமேதிகழுமையோடுமேவந்தேயருள்செய்தாய்மனச்
சினமேதவிர்த்தெனையாளுவாய்சிவசங்கராசிவசங்கரா. (௭௨)

கோதாம்பலநெறிபோக்கியேகுளிர்பூந்திருவடிதன்னிலே
தீதாம்பலவலர்நீக்கியேதினநன்மலர்கொண்டேத்திட
வாதாம்பலகாரணாதிமும்மலமுங்கெடவந்தாண்டருள்
சீதாம்புயசரணாகதிசிவசங்கராசிவசங்கரா. (௭௩)

நிதமேயுனைத்துதிசெய்கிலேனினதன்பர்தாடொழுதுய்கிலேன்
மதமேயறக்கலைகற்றிலேன்மனமேநிலைபெறவுற்றிலேன்
கதமேகொண்மாதர்களாசையாற்கவலைப்படாதெனையாள்விக
சிதமேவியதிரிநேத்திராசிவசங்கராசிவசங்கரா. (௭௪)

போதத்துளேநறையாவைநீபொருளுக்குளேபொருளாவைநீ
வேதத்துளேயொளியாவைநீவிண்ணுக்குளேவெளியாவைநீ
நாதத்துளேவிந்தாவைநீநவையற்றநற்சுதையாவைநீ
சீதப்புனன்மகளுயகாசிவசங்காாசிவசங்கரா. (எரு)

ஆற்றின்னிடிகரையார்தருவலர்தாமரைத்தளிர்நீரும்வண்
காற்றின்னலைகாற்பாசமாய்க்கடுநோயிலுன்மிகவாடினேன்
நீற்றைப்புனைந்திடுமெய்யனேநிமலாதடுத்தாட்கொள்ளுவாய்
சீற்றந்தவிர்முனிவோர்தொழுஞ்சிவசங்கராசிவசங்கரா. (எசு)

கலையைத்தொடர்புலியென்னவேகலுழன்றொருடாரவென்னவே
வலையிற்படும்புள்ளென்னமாவழலிற்படும்புழுவென்னவே
மலைவுற்றநோய்தனைநின்கையின்மழுவிற்கிரைதாளுக்குவாய்
சிலையாமலையணிகையனேசிவசங்கராசிவசங்கரா. (எஎ)

வதையாவதைத்திடுவாதநோய்மாளும்படியாணின்னருட்
புதையாருளமேவாதசெமபொற்சோதியேபுகழாதியே
விதையாய்மறைவோராய்வருவிமலாமுனிவரர்போற்றிடுஞ்
சிதையாதவற்புதசிற்பராசிவசங்கராசிவசங்கரா. (எஅ)

கார்கண்டநற்பைங்கூழெனக்கலைகண்டவொண்பிணையென்னவும்
ஏர்கொண்டமாமதிகண்டிடுமெழில்வேலைநீதம்போலவே
போர்கொண்டவென்பிணிநீக்கிநின்புதுமாமலர்த்தாளேயருள்
சீர்கொண்டநற்றேசோமயாசிவசங்கராசிவசங்கரா. (எகூ)

கோலையேபழுத்திடும்வேற்கணூர்க்குருகித்துயர்கொளுமென்மன
நிலைபெற்றிடவருள்செய்குவாய்நிமலாமணக்கமலாலயன்
அலைமேவியதிருமால்பணியமலாவடற்கழையேந்திய
சிலைவேடனையெரிசெய்தவாசிவசங்கராசிவசங்கரா. (அ0)

பாரொன்றுநின்புகழோதிலேன்பாவித்திருவடிதாழ்கிலேன்
நீரொன்றநின்முடியாட்டிலேனினதன்பர்தாடொழுதுய்கிலேன்
போரொன்றும்வெவ்வினைதீர்த்துநின்பொற்றாமரைத்தாளேயருள்
சீரொன்றகார்விடமுண்டவாசிவசங்கராசிவசங்கரா. (அக)

தூதாகினாயொருவற்குமுன்றோகைக்குமோர்தாயாயது
போதாமலேயமுதுங்கொடுபொருகானிலேயீந்தாயவர்
மூதாதையோமூதன்னையோமுன்னப்பனோவென்னப்பவ
நீதாமழுப்படையாளனேசிவசங்கராசிவசங்கரா. (௮௨)

நீரும்விடநீரூர்ந்திடுநீணாகமுங்கோணாமதித்
தாரும்மலர்த்தாரும்மணித்தடமார்பமும்மடற்சூலமும்
ஆருந்தழலதுபூத்திடுமணிநீறுமாதொருகூறுமாய்ச்
சீருந்துவெள்விடையாயருள்சிவசங்கராசிவசங்கரா. (௮௩)

கல்லாலெறிந்தவருக்குமுன்காலாலுதைத்தவருக்கும்வல்
வில்லாலடித்தவருக்குமேவிரைவாயருள்செய்தாண்டனை
சொல்லாரணமுடிநீடியதூயாவுனைதொழுவன்மனஞ்
செல்லாவெனையுங்காப்பைகொல்சிவசங்கராசிவசங்கரா. (௮௪)

செந்தாமரைமுகமென்னவேசேலேயிருவிழியென்னவே
சந்தார்தனம்வரையென்னவேதளர்சிற்றிடைதுடியென்னவே
கொந்தார்குழல்முகிலென்னவேகுலையுமடவாராசையாஞ்
சிந்தாகுலந்தீர்த்தாளுவாய்சிவசங்கராசிவசங்கரா. (௮௫)

வாதப்பெரும்பிணியோடுளம்வாடித்திகைத்திடுவேனைநின்
பாதத்துகளடைவித்துமுன்பவநோயையுந்தீர்ப்பாய்குழைக்
காதைப்பொரும்விழிபங்கனேகடுவார்ந்தமைக்களனேசெழுஞ்
சீதப்பனிக்கதிர்சூடியசிவசங்கராசிவசங்கரா. (௮௬)

அந்தாமரைத்தவிசார்தருமயனேமுதர்பலதேவரு
நந்தாவுயிர்க்குயிராமுனைநாடோறும்வந்தனைசெய்துதே
னூந்தார்மலர்க்கொடுபூசைசெய்துற்றார்களியானென்செய்குவேன்
சிந்தூகரன்வளர்பாகனேசிவசங்கராசிவசங்கரா. (௮௭)

பரமாநின்பதபங்கயம்பணியாமன்மெல்லடிமேவுநா
புரமாதராசையினாலுழல்புலையேனையோர்பொருளாகவே
திரமாநின்சரணாம்புயத்தேனாருட்கடன்மூழ்கநீ
சிரமாலையாயருளப்பனேசிவசங்கராசிவசங்கரா. (௮௮)

அவமானகாரியமென்னிடத்தளவில்லையுன்னடியார்க்குநற்
றவமாம்பணியுஞ்செய்கிலாத்தமியேனினுஞ்சொலவேண்டுமோ
நவமானநின்னருள்செய்வதேநலமாமுமையிடமாகிய
சிவமானதற்பரமூலனேசிவசங்கராசிவசங்கரா. (௮௯)

மங்காதகாதலையுன்றன்மேல்வைத்தார்கள்சீர்பெற்றார்களென்
றிங்காரியர்பலருஞ்சொலுமிசைகேட்டுன்மேன்மிகவேட்டவென்
பங்காகிநீயவர்வாய்மொழிபழுதென்றிடாப்படிசெய்குவாய்
சிங்காரமங்களதேவனேசிவசங்கராசிவசங்கரா. (௯0)

அறியேனையாவறமென்பதையருமாமறைமுடியாயெனக்
குறியேனையாவுளநெக்குறக்குழையேனையாமடவார்கள்மேல்
வெறியேனையாநினதன்பர்தாள்மேவிப்பணிபுரியாதவிச்
சிறியேனையாள்முகலிங்கனேசிவசங்கராசிவசங்கரா. (௯௧)

சதாகாலநின்னருணாடுமென்சலனந்தவிர்த்திடவேண்டுமற்
புதாகாரணக்குருவேசொலைமபொறியிற்செலுமனநிற்கபொற்
பதாகார்வணன்பங்கேருகன்பணியும்பழம்பொருளாகுநற்
சிதாகாசசின்மயதேவனேசிவசங்கராசிவசங்கரா. (௯௨)

சுத்தத்திருக்கயிலாயமேற்றோன்றுஞ்சுகாதீதச்சுக
முத்தத்திருக்கின்றோய்நிதமுனிவாதிவந்திடரேசெயு
மித்தத்திருட்கிசைவாகியாணிளையாதிருநதிடவேண்டுமென்
சித்தத்திருக்கதைநீக்கியாள்சிவசங்கராசிவசங்கரா. (௯௩)

மனமாதியாங்கரணங்களென்வசமாகவுமயலேதருந்
தனமாதியாமூவாசைநோய்சாராமலிச்சகமீதிலே
இனமாதியாம்பலபேதமேயெய்தாமலென்றனையாளுவாய்
சினமால்விடைமிசையேவருஞ்சிவசங்கராசிவசங்கரா. (௯௪)

பொருளேதுநின்னருளல்லதுபுகழேதுநின்றுதியல்லது
மருளேதுநின்கழல்கண்டபின்மகிழேதுநின்னன்பல்லதிங்
கிருளேதுனையுட்கொண்டபின்னிணையேதெனக்கிப்பூவினிற்
றெருளேதுதைந்திடுவோர்பணிசிவசங்கராசிவசங்கரா. (௯௫)

அத்தாதிதித்தொழில்சிட்டிசங்காரஞ்செயுமரனேமலத்
தத்தாதியிற்பிறவாநெறிதப்பாதருளிப்போதுநீ
சுத்தாதிரிபுரைநாதநற்றுரியங்கடந்திடுசோதியே
சித்தாதியோர்பலருந்துதிசிவசங்கராசிவசங்கரா. (௯௬)

தூர்ப்போதனைத்தொழிலார்சொலுஞ்சொற்கேட்டென்சுழலாமலே
நற்போதனைக்கிடமாக்கியென்னவைதீர்த்திடுநாதாநின்
ஆற்போதனைக்கிலையென்னிடத்தையாவிதேமெய்யாகுமே
சிற்போதசற்குருவேயருள்சிவசங்கராசிவசங்கரா. (௯௭)

உதையாதிபாற்கரபோற்றியென்னுயிராகிநின்றாய்போற்றியன்
பதையாய்ந்தருள்வாய்போற்றிநல்லானந்தவாரிதிபோற்றிமன்
பதையாவருங்குருபோற்றிபற்பலவாகியபதிபோற்றியே
சிதையாதசிற்பரபோற்றியேசிவசங்கராசிவசங்கரா. (௯௮)

பரமேந்துபூரணமேந்தியென்பவநாசதற்பரபோற்றியுன் [ன்
வரமேந்துபுண்ணியர்போற்றுகண்மணிபோற்றிமாநிதிபோற்றிபொ
னுரமேந்துமால்பணிபாதவுத்தமபோற்றிசிற்சுகபோற்றியச்
சிரமேந்துகையாபோற்றிநற்சிவசங்கராசிவசங்கரா. (௯௯)

போதாசரண்பரிபூரணப்பொருளேசரண்புரையற்றவோர்
நாதாசரணெனையாண்டருணம்பாசரணறையார்மலர்ப்
பாதாசரணென்சொற்கொளும்பரனேசரண்பரிந்தாண்மனே
நீதாசரண்சிவனேசரண்சிவசங்கராசிவசங்கரா. (௧௦௦)

வான்வாழிநான்மறைவாழியான்வாழ்த்துந்திருச்சதகத்துடன்
மான்வாழியுன்மழுவாழிபொன்மலையன்னவெண்புயம்வாழியுன்
ஞான்வாழியன்பர்கள்வாழியுன்னருள்வாழியாரியர்வாழிசெந்
தேன்வாழ்மலர்ப்பதம்வாழியிச்செகம்வாழியுன்சீர்வாழியே. (௧௦௧)

சிவசங்கர சதகம் முற்றிற்று.

